DEDICATED TO

HIS HOLINESS KASIVASI ARULNANDI TAMBIRAN SWAMIGAL

*Head of the Tiruppanandal Mutt.*

## பொருளடக்கம்

நான்காம் கதிர்

## முகவுரை

தொனிவிளக்கு என்ற இந்நூல் வடமொழியிலுள்ள த்வந்யாலோக: என்ற நூலின் மொழிபெயர்ப்பு. த்வந்யாலோகம் அலங்காரநூல்களுள் சிறந்தது. அது ஒன்பதாம் நூற்றாண்டில் காச்மீரத்தில் அவந்திவர்மன்சபையில் இருந்த புலவர்களுள் ஒருவரான ஆநந்தவர்த்தனரால் இயற்றப் பட்டது. அஃது 121½ செய்யுட்களையும், ஒவ்வொரு செய்யுளின் கீழ் வசனநடையில்கொண்ட ஆராய்ச்சிப்பகுதியையும் உடையது. செய்யுளைக் காரிகை என்பர். வசனநடையில் உள்ளதை விருத்தி என்பர் காரிகைகளை இயற்றியவர் ஸஹ்ருதயர் (सहृदयः) என்ற ஒருவர், விருத்தியை இயற்றியவர் ஆநந்தவர்த்தனர் என்ற மற்றொருவர் எனச் சிலர் கருதினர். அஃது அவ்வாறன்று இருவரும் ஒருவரே, அவர் ஆனந்த வர்த்தனரே என்பது வக்கிரோக்திஜீவிதம், வியக்திவிவேகம், லோசனவுரை,* அபிநவபாரதீ என்ற நாட்யசாஸ்த்ரவுரை ஸாஹித்யதர்ப்பணம் முதலிய நூல்களிலிருந்து நன்கு விளங்கும்.

இதற்குச் சந்திரிகை என்றும் லோசனம் என்றும் இரண்டு உரைகள் உள. தற்போது அச்சிலிருப்பது லோசனம் தான். அது 10, 11ஆவது நூற்றாண்டில் காச்மீரத்தில் வசித்த அபிநவகுப்தரால் இயற்றப்பட்டது. அவர் சைவருக்குள் சிறந்தவர். அவரது உரை மிகவும் சிறந்தது. பட்டலோல்லடர், சங்குகர், பட்டநாயகர், இம்மூவரும் தொனிக்கொள்கையிற் குற்றங் கூற, அவர்தங்கொள்கையை மறுத்துத் தொனிக் கொள்கையை நிலைகாட்டிய பெரியார் இவரே.

இந்நூலில் நான்கு உத்யோதங்கள் (கதிர்கள்) உள்ளன. முதல் உத்யோதத்தில் தொனி காவியத்தின் ஆன்மாவாகப் பரம்பரையாய்ப் பெரியோராற் கொள்ளப்பட்ட தென்பதும், அதற்கு இலக்கியம் வால்மீகியின் இராமாயணம், வியாஸரின் மஹாபாரதம் முதலிய நூல்களென்பதும்; அத்தொனி மகளிரிடம் இலாவணியம்போன்று விளங்குகின்றதென்பதும், அது வஸ்துத்தொனி, அணித்தொனி, சுவைத்தொனி என மூவகைப்படும் என்பதும்; அதனைச் சுவைஞரே அறிதல் கூடு மென்பதும்; அது வாச்சியப்பொருளினின்றும் முற்றிலும்

வேறுபட்டது என்பதும்; தொனி இல்லை என்ற கொள்கையும், அது பாக்தமே என்ற கொள்கையும், அதனை உணரலாமே யன்றி இலக்கணமுகத்தான் கூறமுடியாதென்ற கொள்கையும் பொருத்தமில்கூற்று என்பதும்; அதன் இலக்கணமும் உணர்த்தப்பட்டன.

இரண்டாம் உத்யோதத்தில்

அத்தொனி, கருதாவாச்சியத்தொனி, கருதிவேறினை நோக்கும் வாச்சியத்தொனி என இருவகைப்படும் என்பதும்; கருதாவாச்சியத்தொனி, பிறிதுபொருட்கண் மாலை நூல்போல தனகத்துச்செல்லும்வாச்சியத்தொனி, முற்றிலும்மறைந்த வாச்சியத்தொனி என இருவகைப்படும் என்பதும்; கருதி வேறினைநோக்கும்வாச்சியத்தொனி, முறையில்தோற்றத் தொனி, முறைத்தோற்றத்தொனி என இருவகைப்படும் என்பதும்; சிறந்து விளங்கும் சுவை, பாவம், சுவைப்போலி, பாவப்போலி முதலியனவே முறையில்தோற்றத்தொனியின் பாற்படும் என்பதும்; சிறவாதிருப்பின் அவையே அணியாகக் கொள்ளப்படும் என்பதும்; சுவைகட்குப் பொதுவான குணம் யாவை, சிறப்பான குணம் யாவை? என்பதும்; அணிகள் உடலாகிய சொல், வாச்சியப்பொருள் இவற்றைப் பற்றியன என்பதும்; அவ்வணிகள் சிறந்து விளங்க எவ்வாறு இணைக்கப் படவேண்டும் என்பதும்; முறைத்தோற்றத்தொனி, சத்தசத்தி மூலத்தொனி, அர்த்தசத்திமூலத்தொனி என இருவகைப்படும் என்பதும்; சத்தசத்திமூலத்தொனிக்கும் சிலேடைக்கும் மாறு பாடு யாது என்பதும்; அர்த்தசத்திமூலத்தொனியில் வஸ்துவும் அணியும் வியங்கியமாயிருத்தல் கூடும் என்பதும்; சிறந்து எளிதில் புலப்படும் வியங்கியமே தொனியின்பாற்படும் என்பதும்; தக்க உதாரணங்களால் விரிவாய் உணர்த்தப் பட்டன. இவ்வுத்யோதத்துள்ள தொனிப்பாகுபாடு அனைத் தும் வியங்கியமூலமாகவே உள.

மூன்ரும் உத்யோதத்தில்

கருதாவாச்சியத்தொனியிலும் முறைத்தோற்றத்தொனி யிலும் சொல்லும் தொடரும் வியஞ்சகமாகலாம் என்பதும்; எழுத்து, சொல், சொற்பகுதி, தொடர், சங்கடனை, பிரபந்தம் இவை முறையில்தோற்றத்தொனி தோன்ற நிமித்த மாகலாம் என்பதும்; எவ்வெவ்வெழுத்து எவ்வெச்சுவைக்கு நிமித்த மாகலாம் என்பதும்; சங்கடனை மூவகைப்படும் என்பதும்;

அது குணங்கட்கு அடங்கி, கூறுவோன் கூற்று முதலியவற்றின் அவுசித்தியத்தை ஒட்டி இணைக்கப்படின் சுவை தோன்ற நிமித்தமாகும் என்பதும்; பிரபந்தம் சுவைத்தோற்றத்திற்கு நிமித்தமாதற்கு நிபந்தனங்கள் யாவை என்பதும்; வேற்றுமை யுருபு, வினைவிகுதி முதலியனவும் வியஞ்சகமாகலாம் என்பதும்; விரோதிச்சுவைகளை, எங்குத் தவிர்க்கவேண்டும், எங்குக் கொள்ளல்வேண்டும் என்பதும்; கொள்ளின் ஆங்குள்ள நிபந்தனங்கள் யாவை என்பதும்; சொற்கள் வாச்சியப்பொருள் இவையும்சுவைக்குத்தக்கவாறு இருத்தல் வேண்டும் என்பதும்; அஃதே மாகவிக்குச் சிறந்தசெயல் என்பதும்; வாச்சியத்திற்கும் வியங்கியத்திற்கும் உள்ள இயைபு குணகுணித்தன்மை லிங்கலிங்கித்தன்மை முதலியன அல்ல, சரீரசரீரித்தன்மையே என்பதும்; வியங்கியத்தின் அறிவு வாச்சியவறிவின் பின்னரே என்பதும்; வியங்கியப் பொருளே கருத்துப்பொருளாகலின் தொடர்க்கு வியஞ்சகத் துவம் வியாபாரம் இல்லை, வாசகத்துவம் என்ற ஒரு வியாபாரமே உளது என்ற கொள்கை பொருந்தாக்கூற்று என்பதும்; குணவிருத்தியே வியஞ்சனை எனக் கொளல் தகாது என்பதும்; வியங்கியம் வாச்சியப்பொருளிற்கு அழகு ஊட்டின் அது குணீபூதவியங்கியம் எனப்படும் என்பதும்; தொனி குணீபூதவியங்கியம் இவற்றின்பாற் படாத காவியம் சித்திரம் எனப்படும் என்பதும்; அது சொல்லழகினையும் வாச்சியப் பொருளின் அழகினையுங் கொண்டது என்பதும்; அது சிறந்த தன்று என்பதும்; ஒரு செய்யுளிலே தொனி குணீபூத வியங்கியம் இவற்றின் சங்கரம் சம்சிருட்டி இவை நேரலாம் என்பதும்; அக்காரணம்பற்றியே காவியம் பலவகைப்படலாம் என்பதும் அவற்றை விரிவாய்க் கூற இயலாது என்பதும்; கூறப்பட்டன.

நான்காம் உத்யோதத்தில்

தொனி, குணீபூதவியங்கியம் இவை பலவகைப்பட்டன என்றதனால் கவி முன்னர்க் கவிஞரான் கூறப்பட்ட கருத்தைப் புதியதாகக் கூறலாம் என்பதும்; அவற்றிற்கு எல்லை இல்லை என்பதும்; கவி சுவையிலே ஈடுபடவேண்டும் என்பதும்; காலம், தேசம், நிலை முதலியவற்றின் வேறு பாட்டால் பல்வகையாகச் செய்யுள் இயற்றலாம் என்பதும்; உத்தரராமாயணமும் ஹரிவம்சமும் முறையே இராமாயணம் மகாபாரதம் இவற்றின் இறுதிப்பகுதியே என்பதும்;

அறிஞர்கள் சுவைமுயுமான நூல்களில் மனந்தளராது ஈடுபட வேண்டும் என்பதும்; அவ்வாறு ஈடுபடின் ஸரஸ்வதிதேவி அவர்க்கு அருள்புரிவாள் என்பதும் கூறி ஆசிரியர் நூலை முடித்தனர்.

மூலத்திலுள்ள காரிகைகள் செய்யுளுருவமாகவும், விருத்தி வசனவுருவமாகவும், உதாரணச்செய்யுள்கள் பெரும் பாலும் வசனவுருவமாகவும் எழுதப்பெற்றன. மொழி பெயர்ப்பில் நிர்ணயஸாகர்பதிப்பின் பாடமே பெரும்பாலும் கொள்ளப்பட்டது. செய்யுள்வடிவமான உதாரணங்களில் சில என் நண்பர் உ வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரி யரும், ஸ்ரீமான் E. S. வரதராஜய்யரும் இயற்றியவை.

சிற்சில இடங்களில் கீழ்க்குறிப்பில் தக்க உதாரணங்கள் தமிழ்நூல்களிலிருந்து குறிக்கப்பட்டன. த்வந்யாலோகம் படிக்கும் வடமொழிமாணவர் இதனை அந்நூலிற்குத் தமிழுரையாகக் கொள்ளவேண்டுமென, சிலவிடத்துச் சொற் கள் தற்சமமாகவும் தமிழ்மாணவர்க்குப் பயன்பட ஏனைய விடத்து அவையே தற்பவமாகவும் சிலவிடத்து மொழி பெயர்த்தும் வழங்கப்பட்டன.

இந்நூலின் சிறப்பு

ஈண்டுக் கூறப்பட்ட கோள்கள் இலக்கியத்தைப் படித்து அனுபவிக்க நல்ல துணை ஆகும். எல்லாநாட்டிலும் எக்காலத்திலும் இயற்றப்பட்ட இலக்கியங்களைப் படித்தற்கு இவற்றைத் துணையாகக் கொள்ளலாம். இவற்றைத் துணை யாகக் கொள்ளின் பதவுரையையும் பொழிப்புரையையும் கற்றுவிட்டால் நூலைப் படித்ததே ஆகும் என்ற எண்ணம் படிப்போரின் மனத்தைவிட்டு நீங்கும், செய்யுளின் சுவையை உணரச்செரல்லும். சுவையை உணரும்போது கவியின்பெருமை நமக்கு நன்கு புலப்படும். நூல்களைப் படிக்க விருப்பம் மிகும். அவற்றைச் சுவைத்து பிறர் படிக்குமாறு கூறவும் கற்பிக்கவும் இயலும். சுவையிலே ஈடுபட்டால் சொல்லணியிலும் பொரு ளணியிலும் உள்ள கவனம் போம். நூற்கருத்தை அறிய ஈடுபடச் செய்யும். நங்கருத்தை நன்கு பிறர் சுவைக்குமாறு கூற இயலும்.

அன்றியும் விரிவாகக் கூறப்பட்ட அவுசித்தியம் பகைச் சுவைகளின் இணைப்பு இவைகொண்ட பகுதிகள் நூல்களைச்

சுவைத்து உணர்தற்கும் நூல்களைச் சுவைக்க இயற்றுதற்கும் துணை ஆவதன்றி, உலகியலில் நாம் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதை அறிதற்குஞ் சிறந்த துணை ஆகும்.

இதனை அச்சிடுதற்கு ரூ. 500 கொடுத்து உதவிய திருப்பனந்தாள் காசிமடத்தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தி தம்பிரான் அவர்கட்கு என் நன்றியை அன்புடன் அறிவிக்கின்றேன். இதற்கு முன்னர் தமிழ்மொழி நூல், தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்-குறிப்புரை, திருக்குறள்-அறத்துப்பால்-பாலருரை இம்மூன்று நூல்களையும் பதிப்பிக்கப் பணம் கொடுத்தவர்கள் அம்மடத்துத்தலைவர்களே ஆவர்.

த்வந்யாலோகத்தை எனக்குக் கற்பித்தவர் மஹாமஹோபாத்தியாய-வித்யாவாசஸ்பதி-தர்சனகலாநிதி-குலபதி குப்புஸ்வாமி சாஸ்திரியார் ஆவர். அவர் கற்பித்ததோடு நில்லாது இத்தொனிவிளக்கில் முக்காற்பகுதியை எழுத்தெழுத்தாய் ஆய்ந்தும் பல்லிடங்களில் திருத்தியும் உதவி புரிந்தனர். இந்நூலைக் குருதக்ஷிணையாகப் பாவித்தனர். இந்நூல் அச்சில் விரைவில் வரவேண்டுமென்று பேரவா கொண்டனர். அந்தோ! என் பாக்கியக்கேடு என்னே! இன்று அச்சிட்ட இதனை இம்மண்ணுலகிலிருந்து அவர் பார்க்கவில்லையே! அவ்வாசிரியப்பெருந்தகைக்கு யான் யாது செய்தல் கூடும்?

தன்னுடைய வயதுமுதிர்ந்தமையையும் மற்றுமுள்ள வேலைகளையும் கவனியாது இத்தொனிவிளக்கை எழுத்தெழுத்தாய் ஆய்ந்து திருத்திய என் நண்பர் உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார் அவர்கட்கு என் மனமார்ந்த வணக்கத்தை அறிவிக்கின்றேன்.

அச்சிடும்போதும் அதற்கு முன்னரும் நன்கு உதவியவர்களும் அண்ணாமலைப்பல்கலைக்கழகத்து ஆசிரியர்களுமான என் நண்பர்கள் ஸ்ரீமான் E. S. வரதராஜய்யர் (B.A.) அவர்கட்கும், ஸ்ரீமான் P. பஞ்சாபகேச சாஸ்திரிகள் (M.O.L.) அவர்கட்கும் என் நன்றியை மனமாறச் செலுத்துகின்றேன்.

இச்சிறுநூலை எழுதுமாறு அருளிய ஐயாற்றப்பனுக்கும் அதனை அச்சிடுமாறு அருளிய பசுபதீசனுக்கும் எனது பொருள்சேர்புகழ் உரித்தாகுக.

அண்ணாமலைநகர்,
1—11—1944.

P. S. சுப்பிரமணிய சாஸ்திரி.

## வடமொழிக்குறியும் அவற்றின் மொழிபெயர்ப்பும்

| | |
|---|---|
| वाचकः (வாசகம்) | இடுகுறி |
| वाच्यः (வாச்சியம்) | இடுகுறிப்பொருள் |
| अभिधा (அபிதை) | இடுகுறியாற்றல் |
| लक्षकः (இலக்ககம்) | ஆகுபெயர் |
| लक्ष्यः (இலக்கியம்) | ஆகுபெயர்ப்பொருள் |
| लक्षणा (இலக்கணை) | ஆகுபெயராற்றல் |
| व्यञ्जकः (வியஞ்சகம்) | குறிப்புச்சொல் |
| व्यङ्ग्यः (வியங்கியம்) | குறிப்புப்பொருள் |
| व्यञ्जना (வியஞ்சனை) | குறிப்பாற்றல் |
| ध्वनिः (தொனி) | தொனி |
| अविवक्षितवाच्यः | கருதா வாச்சியத்தொனி |
| विवक्षिताभिधेयः / विवक्षितान्यपरवाच्यः | கருதிவேறினைநோக்கும் வாச்சியத் |
| अर्थान्तरसंक्रमितवाच्यः | பிறிது பொருட்கண்மாலைநூல் போலதனகத்துச் செல்லும் வாச்சியத்தொனி |
| अत्यन्ततिरस्कृतवाच्यः | முற்றிலும்மறைந்த வாச்சியத் தொனி |
| सलक्ष्यक्रमः | முறைத்தோற்றத்தொனி |
| अनुस्वानसंनिभः | மணியொலியொத்தது |
| असंलक्ष्यक्रमः | முறையில்தோற்றத்தொனி |
| रसाभासः | சுவைப்போலி |
| संयोगः | மெய்யுறுதல் |
| सामीप्यम् | அண்மை |
| समवायः | ஒற்றுமைக்கிழமை |
| वैपरीत्यम् | முரண் |
| क्रियायोगः | காரணகாரியத்தொடர்பு |
| अव्याप्तिः | குன்றக்கூறல் |

| | |
|---|---|
| अतिव्याप्तिः | மிகைபடக்கூறல் |
| स्खलद्गतिः | இடர்நடை |
| अतिशयोक्तिः | உயர்வுநவிற்சி |
| शृङ्गारः | உவகை |
| विप्रलम्भः (விப்பிரலம்பம்) | பிரிவுவகை, பிரிவுச்சிருங்காரம் |
| सन्देहसङ्करालङ्कारः | ஐயக்கலவியணி |
| सन्देहालङ्कारः | ஐயவணி |
| उत्प्रेक्षा | தற்குறிப்பேற்றம் |
| व्यतिरेकालङ्कारः | வேற்றுமையணி |
| यथासङ्ख्यालङ्कारः | நிரனிறையணி |
| तुल्ययोगितालङ्कारः | ஒப்புமைக்கூட்டவணி |

## ஈண்டு ஆளப்பட்ட நூல்களும் குறியீடுகளும்

### வடமொழி நூல்கள்

வால்மீகிராமயணம்
வியாஸமகாபாரதம்
பாமஹர் காவ்யாலங்காரம்
காளிதாஸன்—
  குமாரஸம்பவம்
  மேகஸந்தேசம்
  விக்ரமோர்வசீயம்
  ரகுவம்சம்
  சாகுந்தளம்
அமருககாவியம்
ரத்னாவளி
காதம்பரி

ஹர்ஷசரித்ரம்
வாமனர் காவ்யாலங்கார ஸூத்ரவிருத்தி
வேணீஸம்ஹாரம்
உத்படர் காவ்யாலங்கார ஸாரஸங்கிரகம்
தாபஸவத்ஸராஜம்
சிசுபாலவதம்
ராமாப்யுதயம்
ஸேதுபந்தம்
சிருங்காரப்பிரகாசம்
லோசனம்

### தமிழ் நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| தொல்காப்பியம் | தொல். | புறநானூறு | புறநா. |
| பொருளதிகாரம் | பொ. | திருக்குறள் | குறள். |
| களவியல் | | சேனாவரையம் | |
| மெய்ப்பாட்டியல் | மெய்ப். | | |

### குறியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| உதாரணம் | உ-ம். | சூத்திரம் | சூ. |
| காரிகை | கா. | பக்கம் | பக். |

## பிழையும் திருத்தமும்

---

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 15 | —பொளும் | —பொருளும் |
| 20 | 11 | ாரணங்— | காரணங்— |
| 44 | 26 | பான்று | போன்று |
| 117—118 | ... | கா. 70-71 | கா. 71-72 |
| 131—136 | ... | கா. 76½-83½ | கா. 77½-84½ |
| 141 | 15 | மணியொலித்த | மணியொலியொத்த |



# தொனிவிளக்கு

## முதற்கதிர்

ஆறுமா முகனை யடைவா ஹரியை
ஆநந்த வர்த்தன வபிநவ குப்தரை
வீறுயர் குப்புஸ் வாமியை வணங்கிக்
கூறுவற் றொனிவிளக் கெனுமணி நூலே.

[1]தோனியெனப் படுவது காவியத் தான்மா[2]
எனவே தோன்மையா வறிஞ ரியம்பினும்
அஃதில் லென்று சிலர்கூ றுபவே[3]
பாக்தமே[4] யஃதெனப் பகர்வர் சில்லோர்

1. தொனி என்பது, குறிப்புப்பொருளைத் தோற்றுவிக்குஞ்சொல், குறிப்புப்பொருளைத் தோற்றுவிக்கும் இடுகுறிப்பொருள், குறிப்புப்பொருள், குறிப்புப்பொருள் தோன்றற்குக் கருவியாகிய குறிப்பாற்றல், குறிப்புப் பொருள் கொண்ட காவியம் இவை ஐந்தனையும் குறிக்கும். அவ்வாறிருப் பினும், அது சிறப்பாகக் குறிப்புப்பொருளையும் அதனைக்கொண்ட காவியத்தினையுமே காட்டும்.

2. ஆன்மா என்றதனல், இடுகுறிப்பொருள், ஆகுபெயர்ப்பொருள் இவற்றைக்காட்டிலும் தொனி சிறந்தது எனக் குறிக்கப்பட்டது.

3. கூறுப என்றதற்குக் கூறவுங்கூடும் என்பது பொருள். அஃது ஆநந்தவர்த்தனுசாரியர் சொல் பிறர் கூறக் கேளாது தாமே தம் மனப்பான்மையால் எழக்கூடிய தடைகளை எழுப்புகின்றமையைத் தெரி விக்கும். பின்னர் மற்றொருவர் கூறக்கூடும் என நினைத்து மறுத்தல் தகுமோ எனின், அவரது மனத்துள் அவை முன்னரே தோன்றியமை யான் மறுத்தல் தக்கதேயென்க.

4. பாக்தம் என்பதற்கு மூவகையாகப் பொருள் கூறினர்:— அறிஞர்களாற் சிறப்பாகக் கொண்டாடப்படும் (பஜிக்கப்படும்) குணங்கள் பக்தி எனப்படும்; அக்குணம்பற்றி வருவது பாக்தம் என்பது ஒருவகை. அக்குணங்களாவன:—இடுகுறிப்பொருளொடு இருக்கும் மெய்யுறுதல்,

## தொனிவிளக்கு

சொல்லிற் கவிடய மென்ப சிலவர்
அதனால், விளக்கின ரதனை யுணர்வோர்
மகிழப் புலவரா் நந்த வர்த்தனரே. (கா. 1)

அண்மை, ஒற்றுமைக்கிழமை, முரண், காரணகாரியத்தொடர்பு என்பன. துவிரேபம் என்ற சொல் அதன் இடுகுறிப்பொருளாகிய இரண்டு ரகாரத்தையுடைய பிரமரம் என்ற சொல்லோடு மெய்யுறுதலால், வண்டைக் குறிக்கும். கங்கையில் இடைச்சேரி என்றவிடத்துக் கங்கை என்பது அண்மையால் கங்கைக்கரையைக் குறிக்கும் சிவப்புக்குல்லாவை வரச்சொல் என்றவிடத்துச் சிவப்புக்குல்லா என்பது ஒற்றுமைக்கிழமையால் சிவப்புக்குல்லாவைக் கொண்ட போலீஸ்காரனைக் குறிக்கும். பகைவனைக் குறித்து, அவன் எனக்கு என்ன உபகாரந்தான் செய்யவில்லை? என ஒருவன் கூறின், உபகாரம் என்பது முரணால் அதற்கு எதிர்மறையாகிய அபகாரத்தைக் குறிக்கும். சோற்றை எடுத்துக் கொண்டுபோகின்றவனைப் பார்த்து என் பிராணனை எடுத்துப்போகிறன் என ஒருவன் கூறின், சோறு உயிர் நிற்றற்குக் காரணமாதலின் பிராணன் என்பது சோற்றைக் குறிக்கும். பக்தி என்பதற்குப் பதுதி என்பதும் பொருள். பல குணங்களைக்கொண்ட பொருளைக் குறிக்குஞ் சிங்கம் போன்ற சொல் வீரத்தன்மையாகிய ஒரு குணத்தை மாத்திரங் குறிப்பின், அஃதும் பாக்தமாகும்.

இனி, பக்தி என்பதற்கு மாணவன் சிங்கம், கங்கையில் இடைச்சேரி என்ற பிரயோகங்களில் விரும்பப்படும் வீரகுணம், புனிதத் தன்மை முதலிய குணங்கள்பற்றி சிரத்தைமிகுதி எனப் பொருள்படும். அது காரணமாக வந்தது பாக்தம் எனப்படும். இஃது இரண்டாவதாகும்.

இனி மூன்றாவது வந்தமை காண்க :—பக்தி என்பதற்கு இடுகுறிப் பொருளின் முறிபடுகை என்பது பொருள்; அது காரணமாக வந்தது பாக்தம் என்பது.

பாக்தம் என்பதும் இலக்கணை என்பதும் ஒருபொருட்கிளவியாகும். சொல்லைக் குறிக்கும்போது அதனை ஆகுபெயர் என்றும், பொருளைக் குறிக்கும்போது அதனை ஆகுபெயர்ப்பொருள் என்றும், ஆற்றலைக்குறிக்கும்போது அதனை ஆகுபெயராற்றல் என்றும் கூறலாம்.

## முதற்கதிர்

காவியத்தின் உண்மையை நன்கு அறிந்த பேரறிஞர்களால் காவியத்தின் ஆன்மா தொனியெனப் [1] பரம்பரையாக நன்கு உணர்த்தப்படும். அஃது இரசிகர்மனத்தில் நன்கு விளங்கும்: இருப்பினும், அவ்வாறு ஒன்று இல்லை எனச் சிலர் கூறவுங்கூடும். அப்படிக் கூறுவோர்க்குப் பலவகையாகக் கற்பனைகள் தோன்றும். ஆங்கு ஒருசாரார் பின்வருமாறு கூற இயலும்: சொற்பொருள்களை உடலாகக் கொண்டதன்றோ காவியம்? ஆங்குச் சொற்கு அழகைத்தரும் அநுப்பிராஸம் முதலியவற்றை [2] யாவரும் அறிவர்; பொருட்கு அழகைத் தருவன உவமை முதலியன; சொற்பொருள்களின் தொடர்பால் தோன்றும் மாதுரியம் முதலிய குணங்களும் தெரிந்தனவே; அவற்றினின்றும் [3] வேறுபடாத உபநாகரிகை முதலிய [4] விருத்திகளுஞ் சிலரால் [5] கூறப்பட்டுச் [6] செவிப்புலனுகின்றன; அவ்வாறே வைதர்ப்பி முதலிய ரீதிகளும் உள்ளன; இவற்றுட் சேராமல் தொனி என்பது ஒன்று உண்டோ?

1. இடையீடின்றி ஒருவர் கற்பிக்க மற்றொருவர் கேட்டு அவர் கற்பிக்க மற்றவர் கேட்டு அவ்வாறாக வருதலைப் பரம்பரை என்பர்.

2. முதலியவற்றை என்பதனால் யமகமும் அதன் பிரிவுகளுங் கொள்ளப்படும்.

3. அவற்றினின்றும் = அணிகளினின்றும்.

4. முதலிய என்பதால் பருஷை, கிராம்மியை என்பன கொள்ளப்படும். வடமொழியில் श, ष என்ற எழுத்துக்களோடும், ரகரத்தோடுள்ள ஸம்யுக்தாக்ஷரத்தோடும், டவர்க்கத்தோடும், ह्ल, ह्व, ह्य இவற்றோடும் கூடிய விருத்தி பருஷை எனப்படும். ஒரே எழுத்து இரட்டியும், மெல்லினங்களை முதற்கொண்டும் வரும் கவர்க்கம் முதலிய ஐவர்க்கத்துமுள்ள எழுத்துக்களோடும் வரும் விருத்தி உபநாகரிகை எனப்படும். முற்கூறப்பட்ட எழுத்துக்களல்லாத எழுத்துக்களால் ஆக்கிய விருத்தி கிராம்மியை எனப்படும் (உத்படரின் காவியாலங்காரஸாரஸங்கிரகம் 1 வருக்கம் பார்க்க). தமிழ்மொழியில் செவிக்குக் கடுமையாயுள்ள ற்ழ ட்ட போன்ற சேர்க்கையைப் பருஷை என்னலாம்.

5. சிலர் என்பது உத்படர் முதலியோரைக் குறிக்கும்.

6. விருத்திகளெல்லாம் அணியுள் அடங்கும் எனக் கருதியே பாமஹர் முதலியோர் அவற்றைக் கூறவில்லை.

7. ரீதிகள் குணங்களினின்று வேறுபடா.

மற்றொரு சாரார் பின் வருமாறு கூறலாம் :—தொன்று தொட்டு வழங்கிவரும் சொல் பொருள் இவற்றின் குணம், அணி இவற்றைக் கொண்டிருப்பதைத் தவிர்த்து வேறொன்றும் காவியமாகாமையின், தொனி என்பது ஒன்றில்லை. காவியத்தின் இலக்கணம் யாதெனில், இரசிகர்மனத்தை மகிழ்விக்கும் சொற்பொருளைக் கொண்டிருத்தலே; இம்முறைக்கு மாறுபட்டன காவியமாகா. ஒருசாரார் தொனியுடையதே காவியமெனக் கொள்கைகொண்ட சிலரையே இரசிகர் எனக் கூறி, அவருடைய கொள்கையை வற்புறுத்தினாராலும், அஃது இரசிகர் அனைவருக்கும் உடன்பாடாகாது.

மற்றொரு சாரார் அதனின்மையைப் பின் வருமாறு கூறல் கூடும் :—தொனி யெனப் புதிதாக ஒன்று வேண்டா; காவியத்திற்கு அழகு தருங் கருவியாகக் கூறப்படுமதனை அழகு தருங் கருவிகளாகக் கூறப்பட்ட வேறு பலவற்றுள் அடக்கலாமன்றோ? அங்ஙனிருக்க, அவற்றுள் ஒன்றிற்குத் தொனி யெனப் புதிதாகப் பெயரிடுதலாற் பயன் யாது? அன்றியும், கவிக்கூற்றுக்கள் பலவகைப்பட்டன வாதலின், புகழுடைக் காவியவிலக்கணக்காரர்களால் முன்னரே கூறப்படாத ஒரு சிறுவகை இருப்பினும் அதனைத் தொனி, தொனி எனக் கூக்குரலிட்டுக் கண்ணைமூடித் தாமே சுவையறிஞர் எனச் செருக்கினைக் கொண்டு சிலர் ஆடுகின்றனர்; அங்ஙனஞ் செய்தற்குக் காரணம் யாதோ? ஆயிரக்கணக்கான வேறு பெரும்புலவர்களால் அணிவகைகள் உணர்த்தவும் பட்டன, இனி உணர்த்தவும் படும்; அவற்றிற்கு இங்கிலையைக் காணோம்.

ஆகலின், தொனி யெனச் சொல்லாற் கூறலாமே யன்றி, அதன் தன்மையைப் பிறர் செவ்வனே அறியுமாறு இலக்கண வகையாற் கூறுதல் இயலாது. ஆகலினன்றே இப்பொருளையே ஒருவர் [1] பின் வருமாறு ஒரு செய்யுளிற் கூறியுள்ளார். அதன் பொருள் :—

மனங்கவர்பொருளையும், அழகு செய்யணியையும், அறிஞர் வழங்குஞ் சொற்றொடரையும், வக்கிரோக்தியையும்

1. ஒருவர் என்பது மனோரதர் என்ற கவியைக் குறிக்கும்.

இல்லதனை அறிவிலி தன் மனப்போக்கான் தொனி எனப் புகழும்; அதற்கு இலக்கணங் கூறு எனப் புலவர் அன்னானைக் கேட்பின், அவன் என்ன கூறுமோ, அறியேன் --என்பது

மற்றொரு சாரார்[1] அதனைப் பாக்தம் என்கின்றனர். தொனி என்ற பெயரைக்கொண்ட காவியத்தைக் குணவிருத்தி என்கின்றனர். காவியத்தின் இலக்கணம் இயற்றிய அப்பெரியோர்களால் குணவிருத்தியோ வேறோ தொனி என்ற சொல்லாற் கூறப்படவில்லை. ஆயினும் குணவிருத்தி காவியத்தில் கருவியாக வழங்கப்படுகின்றது என அவர் கூறுங்கால், தொனியின் வழி சிறிது அவர்களால் அணுகப்படுகின்றது. என்றாலும், அத்தொனியை இலக்கணங் கூறி அவர் விளக்காமையால், அவர் தொனியைக் குணவிருத்தியாகக் கருதினர் எனக் கொண்டு "மற்றொரு சாரார் அதனைப் பாக்தம் என்கின்றனர்" எனப்பட்டது.

மற்றுஞ் சிலர் இலக்கணஞ் செய்வதில் முதிர்ந்த அறிவிலராய்த் தொனியின் தன்மை சொல்லாற் கூறவியலாதென்றும், இரசிகர்மனத்தான் மாத்திரம் நுகரப்படுமென்றுங் கூறினர்.

1. மற்றொரு சாரார் என்பது உத்படர் முதலியோரைக் குறிக்கும்.

2. தொனி என்பது வியஞ்சகம், வியங்கியம், வியஞ்சனை இம்மூன்றனையுங் குறிக்குமாறு, குணவிருத்தி என்பதும் ஆகுபெயர், ஆகுபெயர்ப்பொருள், ஆகுபெயராற்றல் என்ற மூன்றனையுங் குறிக்கும். ஆகுபெயரைக் குறிக்கும்போது அச்சொல் (குணவிருத்தி) கொடுமை முதலிய குணங்களையும் அண்மை முதலிய குணங்களையுங் கருவியாகக் கொண்டு மற்றொரு பொருளையுடையது எனப் பொருள்படும். ஆகுபெயர்ப்பொருளைக் குறிக்கும்போது, அவற்றைக் கருவியாகக் கொண்டு ஆங்கு நிற்கும் சொல்லைக் கொண்டது எனப் பொருள்படும். ஆகுபெயராற்றலைக் குறிக்கும்போது கொடுமை முதலிய குணங்கள் அண்மை முதலிய குணங்கள் இவை வழியாக இருத்தல் எனப் பொருள்படும்.

3. வேறே என்பது குணலங்காரங்களைக் குறிக்கும்.

இவ்வாறு தொனியைப்பற்றி வேறுபட்ட கருத்துக்கள் இருப்பதனால், அதன் தன்மையைச் சுவையறிந்தோர் மகிழக் கூறுவோம். சிறந்த கவிகள் யாவரும் இயற்றிய காவியங்க ளெல்லாவற்றிலும் ஸாரமாய் நிற்பதும், மிக்க வழகு பொருந் தியதும், பழைய சிறந்த இலக்கணக்கர்த்தர்களால் நுண்ணிய அறிவு கொண்டு விளக்கப்படாததுமாக வுள்ளது அதன் தன்மை. இனி இராமாயணம் மாபாரதம் முதலிய இலக்கியங் களில் எங்கும் பிரசித்தமாக வழங்கப்பெற்றதாகி இலக்கண மூலமாகக் காண்கின்ற சுவையுணர்ந்தோரின் மனத்தில் ஆநந்தம்[1] நிலைபெற்றிருக்கவேண்டுமென்று அத்தொனியின் தன்மை விளக்கப்படுகின்றது.

ஈண்டுக் கூறவேண்டிய பொருளும் அதன் பயனும் இவ்வா றிருத்தலால், தொனியின் இலக்கணம் கூறுவதற்குத் தோற்றுவாயாகப் பின்வருஞ் செய்யுள் கூறப்படுகின்றது.

சுவைஞர் சுவைப்பதாற் காவிய வான்மா
ஆகும் பொருள்தான் யாது மற்றஃதே
வாச்சியங் குறிப்பென விருவகைத் தாகும். (கா. 2.)

எப்பொருள் குணம், அணி, சுவைத்தகுதி இவற்றால் அழகுபெற்று உடலுக்கு உயிர்போல் சிறப்புற்றுச் சுவையறி ஞர் கொண்டாடுமாறு காவியவான்மா ஆகுமோ, அப் பொருட்கு வாச்சியம் வியங்கியம் எனக் கூறுபாடுகள் இரண்டு உள என்றவாறு.

அவற்றுள்

வாச்சியந் தானே வுவமை முதலாம்
பலவா யேனோர்[2]
விளக்கின ராதலின் விரித்தில மீங்கே. (கா. 3)

1. இப்பொருளைக்கொண்ட आनन्दो मनसि लभतां प्रतिष्ठाम् என்ற தொடர் நூலாசிரியரான ஆநந்தவர்த்தனர் இரசிகர்மனத்தில் நிலை பெற்றிருக்க என்ற பொருளையுந் தரும்.

2. ஏனோர் என்பது காவியவிலக்கணங்கூறிய பட்டோத்படர் முதலியோரைக் குறிக்கும்.

ஆனால், அவ்வாச்சியம் இந்நூலுள் வேண்டுமிடத்து அநு வதிக்கப்படும்.

வியங்கிய மென்னும் வேறோர் சீர்ப்பொருள்
விளங்குமாக் கவிஞர் விளம்பு மவற்றில்
பெண்ணுடல் வேறுமி லாவணி யம்போன்று. (கா. 4)

பெருங்கவிகளின் வாக்கில் வாச்சியத்தினின்றும் வேறுபட்ட பொருளாக விளங்கும் அவ்வியங்கியம்: அது மகளிருடலில் இலாவணியம்போன்று காவியத்தில் இரசிகரான் நன்கு அறியப்படும் அணிகளினின்றும் ஏனைய காவியப்பகுதிகளினின்றும்[1] வேறுபட்டு விளங்கும்; மகளிருடலிலுள்ள இலாவணியம் எவ்வாறு உடற்பகுதிகளெல்லாவற்றினின்றும் வேறுபட்டு இரசிகர் காணக்காண அவர் கண்ணைப் பறித்து மனத்தினைக் கவர்ந்து மகிழ்ச்சியைத் தோற்றுவிக்கின்றதோ, அவ்வாறே அவ்வியங்கியப்பொருளும் ஆம். வாச்சியத்தின் ஆற்றலாற்றோன்றும் அது, வஸ்துத்தொனி, அணித்தொனி, சுவைத்தொனி எனப் பலவகையாகப் பின்னர்க் கூறப்படும்; அவ்வகையெல்லாவற்றுள்ளும் வியங்கியம் வாச்சியத்தினின்றும் வேறுபட்டது என்பது வெளிப்படை.

அவற்றுள் முதலிற் கூறப்பட்ட வஸ்துத்தொனி வாச்சியத்தினின்றும் முற்றிலும் வேறுபட்டது; அவ்வாச்சியம் சிலவிடத்து விதியுருவமாயிருக்க வியங்கியம் எதிர்மறை யாகும். உ-ம்

"தார்மிகரே, கவலையின்றிப் போமின்; கோதாவரிக் கரைப்பூம்புதரில் வாழும் கதமிகுசீயத்தால் அந்நாய் இன்று கொல்லுண்டது[2]".

1. ஏனைய காவியப்பகுதி குணம் முதலியன.

2. இது தோழி வழியிடைச் செல்வோனை நோக்கிக் கூறிய கூற்று ஆகும்:— தலைவன் தலைவியரின் குறியிடமாகிய கோதாவரிக் கரைப்பூம்புதரில் ஒரு நாய் இருத்தலால், தார்மிகன் அஞ்சி அங்குப் போகாதிருப்பானென நினைத்து, போமின் எனக் கூறியது வாச்சியப்

## தொனிவிளக்கு

சிலவிடத்து வாச்சியம் எதிர்மறை யாயிருக்க, வியங்கியம் விதியாயிருக்கும். :— உ-ம்.

"வழிப்போக்கரே, இங்கு மாமி அயர்ந்து உறங்குவாள் : இங்கு நான் உறங்குவேன்: - பகலில் நன்கு நோக்குமின்; இரவிற்குருடரே எமது படுக்கையில் வீழன்மின்".[1]

பொருள். தார்மிகனைக் குறித்து, "சீயத்தாற் கொல்லுண்டது நாய், நீர் போமின்" எனக் கூறியதாற் பயன் ஒன்றும் இல்லாமையானும், அவன் செல்லின் தலைவன் தலைவியரின் சேர்க்கைக்கு இடையூறு உண்டாகுமாதலானும், ஒருகால் தளிர்களைப் பறித்துப் பூம்புதரை அழகுகெட அவன் செய்யக்கூடுமாகலானும், போமின் என்பதற்கு வியங்கியப்பொருள் போகன்மின் என்பதாகும்.

இவ்வாறே பேரிதினிது பேதையார் கேண்மை . (குறள்-831) என்றவிடத்து இனிது என்ற விதி இன்னாது என்ற மறையான வியங்கியப்பொருளைக் கொண்டது காண்க.

1. ஒரு வழிப்போக்கன் பகலில் ஒரு வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்து அவ்வீட்டுத்தலைவன் ஊரிலில்லை என்பதை அறிந்தவுடன் காமத்தால் துன்புற, அவனைப் பார்த்துத் தலைவியான சிறுமி இவ்வாறு கூறினள் ; எமது படுக்கையில் வீழன்மின் என்றதன் பயன், இரவில் நீயிர் காமத்தால் தவறி மாமிபடுக்கையில் விழாது என்னுடைய படுக்கையிலே வீழ்தல் வேண்டும் என்ற வியங்கியத்தைத் தருவதாகும். வீழன்மின் என்ற எதிர்மறை வாச்சியமாயிருக்க, விதியாகிய வீழ்மின் என்பது வியங்கியமாகின்றது. அயர்ந்து உறங்குவாள் என்றதனால் நீவிர் அஞ்ச வேண்டா என்பதும் உம்முடைய விருப்பம் நிறைவுறும் என்பதும் வியங்கியமாகும். இங்கு நான் உறங்குவேன் என்றதனால், தான் தனிமையாயிருப்பதும், தன் கணவன் ஊரிலில்லை என்பதும் குறிக்கப்பட்டன. இரவிற்குருடரே என்ற தொடர் இன்மேற்றல் இவ்வியங்கியப் பொருள் எல்லோர்க்கும் புலப்படும்.

சிலவிடத்து வாச்சியம் விதியுருவமாயிருக்க, வியங்கியம் விதியுமின்றி எதிர்மறையுமின்றி இருத்தலு முண்டு. உ-ம்.

"சென்மின்,[1] என்னொருத்திக்கே பெருமூச்சும் அழுகையும் உள்ளன வாகுக; தாட்சிணியத்தால் துன்புறுகின்ற உமக்கும் அவளின்றி அவை வேண்டா."

சிலவிடத்து வாச்சியம் எதிர்மறையாயிருக்க, வியங்கியம் எதிர்மறையுமின்றி விதியுமின்றி இருத்தலும் உண்டு. உ-ம்.

"மதிமுகநிலவான் நள்ளிருளைப் போக்குபவளே[2]! உன்னை வேண்டுகின்றேன்; இனித் திரும்புவாயாக; பாழும் பெண்ணே,[3] மற்றுமுள்ள அபிசாரியர்க்கும்[4] இடையூற்றினைச் செய்கின்றாய்."

1. தக்ஷிணநாயகனைப்பார்த்துத் தலைவி இவ்வாறு கூறினள்: சென்மின் என்ற விதி செல்க என்ற விதியைக் குறித்ததென்றுங் கூற இயலாது; செல்லாதீர் என்ற அதன் எதிர்மறையைக் குறித்ததென்றுங் கூற இயலாது. இக்கூற்றால் அவளது வெகுளியே புலப்படும். பல தலைவியரிடத்தில் ஒத்த அன்புடனிருக்குந் தலைவன் தக்ஷிணநாயகன் ஆவன்; அவனது தன்மை தாட்சிணியம் ஆகும்.

2. காதற்கிடனானவளை நோக்கிக் காமக்கிழத்தி செல்லாநிற்க, வழியிடையில் அவளைக் கண்ணுற்ற அக்காதலன் அவளை யறியாதவன் போல் நடித்துக் கூறுகின்றான்:—திரும்புவாயாக என்பது போதும் வழி செல்லாதே எனப் பொருள்படுதலின், பொருள்வகையான் எதிர்மறை யாகும்: கருத்துவகையான் திரும்பு என்றேனும் திரும்பாதே என்றேனும் பொருள்படாது. யான் உன் வீட்டிற்கு வருகிறேன், இன்றேல் நீ என் வீட்டிற்கு வா என்பதே வியங்கியமாகும்.

3. பாழும்பெண்ணே என்பது காமக்கிழவனுடைய அன்பு மிகுதியைக் குறித்தலோடு, அவன் அவளை அறிந்துகொண்டான் என்பதையும் அவட்குத் தெரிவிக்கும்.

4. காமக்கிழவன் இருக்குமிடம் செல்லும் பெண்டிர்க்கும், காமக்கிழவனைத் தாம் இருக்குமிடம் வருமாறு செய்யும் பெண்டிர்க்கும் அபிசாரியர் எனப் பெயர்.

## தொனிவிளக்கு

சிலவிடத்து வாச்சியத்தினின்றும் வேறுபட்ட வியங்கியம் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொருவகையாகக் காணப்படும். உ-ம்.

" தன் காதலியின் விரணம்பட்ட வாயிதழைக் காண யார்க்குத் தான் வெகுளி வாராது? வண்டுடைத்தாமரையை மோந்துபார்க்கும இயற்கையளே, தடுத்துங் கேளாதோளே, இப்போது நீ பொறுக்க!"

வாச்சியத்தினின்று வேறுபட்ட வியங்கியத்தின் கூறுகள் இவ்வாறே மற்றும் பலவகைப்பட்டன; அவற்றுட் சிலவே ஈண்டுக் காணப்பட்டன.

இரண்டாங் கூறுகிய அணித்தொனி பின்னர் விரிவாய்க் கூறப்படும்

1. வேறொருவனோடு கலந்தமையான் தன் காதலியின் இதழ் புண்பட்டிருப்பதைக் கண்ட தலைவன் வெகுள, அப்போது தலைவி குற்றமற்றவள் என அவனுக்குத் தோற்றுவிக்கக் கருதிய தோழி, அவனைக் காணுதாள்போல் நடித்து இதனைக் கூறுகின்றாள் :—

இதழின்கண் புண், வண்டு கடித்தமையால் தோன்றியதன்றி, மற்றொருவனோடு கலந்தமையால் தோன்றியதன்று எனத் தலைவன் கருதுமாறு வண்டுடைத்தாமரையை மோந்துபார்க்கு மியற்கையளே என்றனள்.

நான் அப்போது தடுத்துங் கேளாமையால் உனக்கு இத்துன்பம் நேர்ந்தது; இனி அவ்வாறு செய்யாதே எனத் தலைவிக்குத் தோன்றுமாறு, தடுத்துங்கேளாதோளே பொறுக்க என்று கூறினள்.

தலைவன் அவளை வெகுண்டதைக்கண்டு மகிழ்ந்த மற்ற மனைவியர்க்கு அவளே தலைவனது காதற்கு இடம் என அவளது சிறப்புத் தோன்றுமாறு தன்காதலியின் என்றனள்.

அவளிடம் தவறு இருத்தல் கூடும் என நினைத்த அயலார்க்கு அஃது இல்லை எனத் தோன்றுமாறு பொறுக்க என்றனள். தவறுடையாளைத் தான் பிழைப்பித்த சிறப்பைத் தன் தோழியர்க்குக் காட்டலும் இங்கு வியங்கியம் ஆகும்.

மூன்றாங் கூறாகிய சுவைத்தொனி வாச்சியத்தின் ஆற்ற லானே குறிக்கப்படும். அது நேரில் சொல்லாற்றற்கு விடய மன்று என்ற காரணத்தால் வாச்சியத்தினின்றும் வேறு பட்டதே யாகும்.

அஃது எவ்வாறு எனின்;—சுவைத்தொனி சொல்லாற் றலாற் பெறப்படின், அது சுவையை வாச்சியப்பொருளாகக் கொண்ட சிருங்காரம் முதலிய சொல்லாலேனும், தாற்பரிய சக்தியால் [1] விபாவம் அநுபாவம் முதலியவற்றை உணர்த்தக் கூடிய சொல்லாலேனும் குறிக்கப்படுதல்வேண்டும்.

சுவைத்தொனி சொல்லாற்றலால் தோன்றுமென்ற முதற் கொள்கையைக் கொள்ளின், சிருங்காரம் முதலியவற்றை வாச் சியப்பொருளாகக் கொண்ட சொல் இல்லாத இடமெல்லா

[1] விபாவம் என்பது இருவகைப்படும்: அவை ஆலம்பனவிபாவம் உத்தீபனவிபாவம் என்பன. ஒருவரின் காதல் முதலிய உள்ள நிகழ்ச்சிக்கு எப்பொருளின் அறிவு காரணமோ, அப்பொருள் அதற்கு ஆலம்பனம் எனப்படும்; எவ்வாறெனின், தலைவியினுள்ளத்துள்ள காதற்குத் தலைவனும் தலைவனுள்ளத்துள்ள காதற்குத் தலைவியும் ஆலம்பனவிபாவம் ஆவர். தலைவியுள்ளத்துள்ள சோகத்திற்குத் தலை வன்மரணமும், தலைவனுள்ளத்துள்ள சோகத்திற்கு தலைவியின்மரண மும் ஆலம்பனவிபாவம் ஆகும் என இவ்வாறு காண்க. அவ்விருவர்தங் குணம், செயல் முதலியன உத்தீபனவிபாவம் ஆகும்; அவை செல்வம் புலன், புணர்வு, விளையாட்டு, கல்வி, தறுகண், மூப்பு, பிணி முதலியன வாம் (தொ. பொ. மெய்ப். 11, 9...). அநுபாவம் என்பது தலைவன் தலைவி இவ்விருவர்தம்முடலில் உண்டாகும் கடைப்பார்வை, புகுமுகம் புரிதல், கூழைவிரித்தல் முதலியனவாம் (தொல். பொ. மெய். 13, 14)

ஒரு நாடகம் நடிக்கும்போது அவையிலுள்ளோர் தலைவன்தலைவி யரின் செயல்கள் யாவற்றையும் பார்த்து மெய்ம்மறந்து ஆனந்தக் கண்ணீர் விடுவர்; அதற்குக் காரணம் அவையோர் அந்நடிப்பால் உண் டான சுவையை உணர்ந்ததனுல் ஆகும். அவ்வாறே ஒரு கவி தன் காவியத்தில் தலைவன்தலைவியரை வருணிக்க, அவற்றை உணர்ந்து படிப்போர் சுவையை யுட்கொண்டு மகிழ்வர். ஆதலின் சுவையை அநுப விக்க விபாவம், அநுபாவம் முதலியன இன்றியமையாதன வாகும்.

வற்றிலும் சுவை முதலியவற்றின் உணர்ச்சி இல்லாமற் போகும்; சுவை தோன்றுமிடமெல்லாம் அதனை வாச்சியப் பொருளாகக் கொண்ட சொல்லால் அது கூறப்படவில்லை; எங்கேனும் அவ்வாறு இருப்பின், ஆங்குத் தோன்றும் விபாவம் அநுபாவம் என்பவற்றின் வழியாகவே சுவை உணரப்பட, அவ்வாறு உணரப்பட்ட சுவை சிருங்காராதியான சொற்க ளால் அநுவதிக்கப்பட்டதே யன்றி, அச்சொற்களால் ஆக்கப் படவில்லை. ஏனெனில், வேறிடங்களில்[1] அச்சுவையுணர்ச்சி அச்சொற்களால் குறிக்கப்படாமலே உண்டாகின்றனவே: அன்றியும் விபாவம், அநுபாவம் இவற்றை உணர்த்தாது சிருங்காரம் முதலிய சொற்களை மாத்திரம் கொண்ட காவியத் தில் ஒருபோதும் சுவையுணர்ச்சி இருத்தல் இல்லையே. தன் னைப் பொருளாகக் கொண்ட சொல்லின்றி விபாவம் முதலிய வற்றால் சுவையுணர்ச்சி உண்டாகின்றமையானும், சிருங்காரம் முதலிய அச்சொல்லான்மாத்திரம் சுவை உண்டாகாமையா னும், அந்நுவயவியதிரேகங்களால்[2] சுவை வாச்சியப்பொரு ளின் ஆற்றலால் உணரப்படுமே யன்றி, சொற்கு இடுகுறிப் பொருளாக அஃது ஒருபோதும் ஆகாது. இதனால் மூன்றுவது கூறுகிய சுவைத்தொனியும் வாச்சியத்தினின்றும் வேறுபட்டது என்ற கொள்கை நிலைபெற்றது. வாச்சியப்பொருள் தோன் றிய பின்னர்ச் சுவைத்தொனியும் உடனேபோல்தோன்றும் எனப் பின்னர்க் காட்டப்படும்.

1. வேறிடங்கள் என்பன அதனைப் பொருளாகக் கொண்ட சொற்களில்லாத இடங்கள் ஆகும். உதாரணமாக கேடுகசிந்தை... செல்கென விடுமே (புறநா. 277) என்ற செய்யுளில் வீரச்சுவை, வீரம் என்ற சொல்லின்றியே, விளங்குகின்றது காண்க.

2. எங்கே புகை உண்டோ, அங்கே நெருப்பு உண்டு என் பது அந்நுவயம்; எங்கே நெருப்பு இன்றே, அங்கே புகை இன்று என்பது வியதிரேகம்.

காவிய வான்மா வத்தொனிப் பொருளே
ஆவதான் முன்ன ராதி கவியின்
கிரவுஞ்சத் துவந்துவப் பிரிவாற் கிளர்ந்த
சோகமே [1]செய்யுளாத் தோன்றிற் றன்றே. (கா. 5)

பலவகையாற் சிறந்த சொற்பொருட்டொடை முதலியவற்றால் அழகுபெற்ற காவியத்திற்குச் சுவைத்தொனிப்பொருளே சிறந்ததாகும்.

ஆகலினன்றே கொல்லுண்டதும், பெண்பறவையினது பிரிவு தனக்கு உண்டாகுமோ வென்று எப்பொழுதும் அஞ்சுந்தன்மை கொண்டதுமான ஆண்பறவையாலும், அதன் பிரிவால் உண்டான பெண்பறவையின் கதறுகையாலும் ஆதிகவியின் மனத்துண்டான சோகமே சுலோகமாக மாறி வெளிவந்தது. அச்செய்யுளின் பொருள் யாதெனின்,

"வேடனே, மிதுனங்களான கிரவுஞ்சப்பறவைகளுள் காமமோகங் கொண்ட ஆணைக் கொன்றமையால் பல நாள் இவ்வுலகில் நீ நிலைத்திராய்" என்பது ஆகும். இதனால்

1. ஈண்டுக் குறிக்கப்பட்ட செய்யுள் வால்மீகிராமாயணத்துள்ள

मा निषाद प्रतिष्ठां त्वमगमः शाश्वतीः समाः ।
यत्क्रौञ्चमिथुनादेकमवधीः काममोहितम् ॥ என்பதாகும்.

2. அடித்துக் கொல்லப்பட்ட ஆண்பறவை ஆலம்பனவிபாவம்; பெண்பறவையின் கதறுகை உத்தீபனவிபாவம்; சோகம் ஸ்தாயி பாவம்; உணரப்படும் சுவை கருணம் ஆகும்.

ஈண்டு வால்மீகிராமாயணத்துள்ள சுலோகங்கள் ஒப்பிடத்தக்கன:

तस्मात्तु मिथुनादेकं पुमांसं पापनिश्चयः ।
जघान वैरनिलयो निषादस्तस्य पश्यतः ॥
तं शोणितपरीतांगं चेष्टमानं महीतले ।
भार्या तु निहतं दृष्ट्वा रुराव करुणां गिरम् ॥
वियुक्ता पतिना तेन द्विजेन सहचारिणा ।

## தொனிவிளக்கு

அவலச்சுவைக்கு ஸ்தாயிபாவமாகிய சோகம் வியங்கியமென்று புலனாகும். வியங்கியத்தில் வேறு வகை இருப்பினும், சுவைத் தொனி சிறந்தமையான் மற்றவற்றிற்கு [1]உபலக்கணமாக அஃதே உணர்த்தப்பட்டது.

இனியவப் பொருளுடை வஸ்துவைச் சுரக்கும்
பெருங்கவி ஞர்களின் வாக்குப் புவியில்
அரிதாம் பிரதிபை விசேடம் விளக்கும். (கா. 6)

ஆகலினன்றே பல்வகைச்சிறப்புடன் கூடிய கவிக்கூட்டத்தைக் கொண்ட இப்பிரபஞ்சத்தில் காளிதாஸன் முதலான இருவரோ மூவரோ அன்றி ஐவரோ அறுவரோ தாம் மாகவிஞரெனக் கணக்கிடப்படுகின்றனர். அத்தொனிப்பொருளின் உண்மையைச் சாதிக்கப் பின்வருவதும் ஒரு சான்று ஆகும்.

சொற்பொரு ளிலக்கண மறிவுமாத் திரையான்
விளங்கா தப்பொருள் விளங்குங் காவியத்
தத்துவப் பொருளைத் தகவுணர்ந் தோர்க்கே. (கா. 7)

சங்கீதவிலக்கணம் கற்றிருப்பினும் நன்கு பாடப் பழக்கமற்றவர்க்கு ஸ்வரம், சுருதி முதலியவற்றின் தன்மை எவ்வாறு அனுபவிக்க இயலாதோ, அவ்வாறே சொல் பொருள் இவற்றை மாத்திரம் நன்கு அறிந்திருப்பினும் காவியத்திற் சிறந்த தொனிப்பொருளை நினைத்து நினைத்து அனுபவிக்க வியலாதார்க்கு அத்தொனிப்பொருள் புலப்படாது.

இவ்வாறு வாச்சியத்தினின்றும் வியங்கியம் வேறுபட்டதென விளக்கியபின், அந்தப் பொருளே சிறந்ததென இனி விவரிக்கப்படுகின்றது.

1. உயிர்ப்பொருளைக் கொல்லல் தகாது, எனக் கூறவந்த ஒருவர், சிறப்பு நோக்கி மனிதனைக் கொல்லல் தகாது எனக் கூறின், ஆங்கு மனிதன் என்பது ஏனைய உயிர்ப்பொருட்கும் உபலக்கணம் எனக் கூறப்படும்.

[1]அப்பொரு ளும்மதைத் தோற்றிடு மாற்றற்
சொல்லுந் தெரிந்திடல் வேண்டு முயன்றே
மாபெருங் கவிஞர்க் கென்ப மிகவே. (கா. 8)

*ஏனெனில் நன்கு உணர்த்தப்பட்ட வியங்கியப்பொருளையும் அதனைக் குறிக்குஞ் சொற்றொடரையும் வழங்குபவனே மாகவி யாவானன்றி வாச்சியப்பொருளையும் அதனை உணர்த்துஞ் சொற்றொடரையும் வழங்குபவன் மாகவி ஆகான்.*

*வியங்கியவியஞ்சகங்கள் சிறந்தனவாயிருப்பினும், முதலிற் கவிகள் வாச்சியவாசகங்களையே நன்கு ஆய முயலுகின்றனர் என்பதுந் தகுதியுடைத்தே என இனிக் கூறுகின்றனர்.*

பொருளைக் காண விழைபவன் விளக்கினைத்
துணையாக் கொள்ள முயல்வது போன்றே
அப்பொரு டன்னி லாதர முடையோன்
வாச்சியப் பொருளைப் பேணவும் பெறுமே. (கா. 9.)

*விளக்கின்றி விளக்கந் தோன்றாமையான், விளக்கத்தை விரும்புபவன் விளக்கைத் தூண்ட முயலுகின்றாற்போல் வியங்கியப் பொருளில் ஆதரமுற்ற கவி வாச்சியப்பொருளை நன்கு உணர்த்த முயலுகின்றான். இதனால், கவிக்குச் சிறந்த நோக்கம் வியங்கியத்தி லென உணர்த்தப்பட்டது காண்க.*

*வியங்கியமே கவியின் நோக்கமாயினும், அதனை உணர்த்தத் துணையாவது வாச்சிய மெனப் பின்னரும் உணர்த்துகின்றார்.*

சொற்பொரு வழியே தொடர்ப்பொருள் தோன்றும்
அதுபோல்,
வாச்சிய வழியே [2]யப்பொரு ளறிவே. (கா. 10)

*இனி, வியங்கியப்பொருள் வாச்சியப்பொருளின்வழி உண்டாயினும், அதன் சிறப்புக் குன்றாதென உணர்த்துவர்.*

1—2 அப்பொருள் = தொனிப்பொருள்.

## தொனிவிளக்கு

அண்மை தகுதி யவாய்நிலை யிவற்றால்
தொடர்ப்பொரு ளுணர்த்தினுஞ் சொற்பொரு ளஃது
தனிப்படப் புத்தியிற் றேன்றா ததுபோல்
வாச்சிய நோக்காது தொனிப்பொரு ளொக்கும்
சுவைஞர் மனத்துட் டோன்றுமஃ துடனே.
(கா. 11, 12)

*இவ்வாறு வாச்சியத்தினின்று வேறுபட்ட வியங்கியப்பொருளின் உண்மையையுஞ் சிறப்பையுங் கூறி, அதற்கு இலக்கணங் கூறுகின்றார்.*

பொருளோ சொல்லோ யாண்டப் பொருட்குத்
தன்னையோ பொருளையோ யுட்படுத்து நின்றே
அதனை யுணர்த்து [1] மக்காவிய விசேடமே
தொனியெனக் கூறுப தொல்பெரும் புலவர். (கா. 13)

*இதனால் வாச்சியப்பொருட்கு அழகைத் தரும் உவமை முதலியவற்றினின்றும், வாசகச்சொற்கு அழகைத் தரும் அநுப்பிராஸம் முதலியவற்றினின்றும் வேறுபட்டது தொனியின் விடயம் என்பது உணர்த்தப்பட்டது.*

*"தொன்றுதொட்டு வழங்கிவரும் சொல் பொருள் இவற்றின் குணம் அணி இவற்றைக் கொண்டிருப்பதைத் தவிர்த்து வேறொன்றும் காவியமாகாமையின், தொனி என்பது ஒன்றில்லை" [2] என ஒரு சாரார் கூறுவதாக முன்வந்தது தவறென அறியலாகும்; ஏனெனில் அது இலக்கணஞ் செய்தார்க்கு மாத்திரம் அறிபொருளன்று; இலக்கியங்களை ஆராயின் அத்தொனிப்பொருளே இரசிகர்களின் மனத்தினைக் கவர்கின்றது; இஃதே காவியதத்துவம். அதனைத் தவிர்ந்தன வியப்பைத் தரும் சித்திரகாவியம் எனப் பின்னர்க் கூறப்படும். அன்றியும்,*

1. *உணர்த்தும் என்பது பலவின்பால்; அதற்கு எழுவாய், பொருள் சொல் இவ்விரண்டும்; சிலவிடத்துப் பொருள் சிறந்து சொல் உடன் நின்றதாயும், சிலவிடத்துச் சொல் சிறந்து பொருள் உடன் நின்றதாயும் இருக்கும்.*

2. பக். 4.

"காவியத்திற்கு அழகுதருங் கருவியாகக் கூறப்படுமதனை அழகுதருங் கருவிகளாகக் கூறப்பட்ட வேறு பலவற்றுள் அடக்கலாம்"[1] என வேறொரு சாரார் கூறியதும் பொருந்தாது: ஏனெனில், வாச்சியம் வாசகம் இவற்றோடு இயைபுபட்ட அணி முதலியவற்றுள் வியங்கியம் வியஞ்சகம் இவற்றோடு இயைபு பட்ட தொனி எவ்வாறு அடங்கும்? வாச்சியம் வாசகம் இவற்றிற்கு அழகினைச் செய்வனவான அணிகள் முதலியன அத் தொனிக்கு அங்கமானவையே யன்றி ஒருபோதும் அங்கியாகா எனப் பின்னர் விளக்கப்படும்.

வியங்கியப்பொருள் விளக்கமாயும் அழகுற்றதாயும் புலப்ப டாதவிடத்துத் தொனி என்று கூறவேண்டா; சமாசோக்தி, ஆக்ஷேபம், காரணங்கூறுவிசேடோக்தி, பரியாயோக்தம், அவநுதி, தீவகம், இவ்வலங்காரங்களிலும், ஸங்கராலங்காரத் திலும் வியங்கியப்பொருள் எளிதில் விளங்குகின்றமையான், அவற்றுள் தொனி அடங்கும் எனின்: அற்றன்று, வியங்கியப் பொருள் வாச்சியத்தைக்காட்டிலும் சிறப்புற்றதாகக் கருதப் படினன்றே தொனி ஆகும்; ஆங்கு அது சிறந்ததன்று. அக் காரணம்பற்றியே தொனியின் இலக்கணங் கூறுமிடத்து அப்பொருட்குத் தன்னையோ பொருளையோ உட்படுத்து[2] என்ற பகுதி கூறப்பட்டது.

சமாசோக்தியிலோ[3]

1. பக். 4.

2. பக். 16. கா. 13.

3. எங்கு அடைமொழிகள் வருணிக்கப்படும் பொருட்குத் தக்கவாறு இருப்பதுடன் மற்றொரு பொருளைக் குறித்தற்கு ஆற்ற லுடையனவா யிருக்குமோ, அங்குச் சமாசோக்தி யாகும். இதனை அடைபொதுவாக்கியப்பொருள் அயல்பட மொழிதலாகிய ஒட்டணி என்பர் தண்டியலங்காரவாசிரியர்.

## தொனிவிளக்கு

"[1]இராகமுற்றிய திங்கள் [2]இலங்குதாரகையுடைய இரவுமுகங்கொள்ள,
[3]இருளாடை முற்றும் முன்னர்த் தானே கீழ் [4]நழுவ,
இரவு அதனை இராகத்தாற் பார்த்திலது[5]."

என்பதுபோன்ற இடங்களில் தலைவன்தலைவி இவருடைய பண்புகள் ஏற்றிக் கூறப்பட்ட திங்கள், இரவு இவைபோன்றவற்றைப்பற்றியே செய்யுள் கூறுகின்றமையின், வியங்கியத்தோடு கூடிய வாச்சியமே சிறப்புற்று விளங்குகின்றதாகும். ஆக்ஷேபாலங்காரத்திலும் வியங்கியவிசேடத்தைக் குறிப்பாற் காட்டும் வாச்சியந் தான் அழகுற்றது. சிறப்புற்ற வாச்சியப் பொருள் ஆக்ஷேபத்தாற் பெறப்படும் பொருளோடு கூடியே தான் அறியப்படுகின்றது. ஆங்கு விசேடப்பொருளைக் குறிக்க வேண்டுமென்ற விருப்பத்தால் சொல்வகையான் எதிர்மறை முகமாகக் கூறப்பட்ட பொருளே வியங்கியப்பொருளைத்

1. இராகம் = சிவப்பு ; வேட்கை.

2. தாரகை = நட்சத்திரம் ; கருவிழி.

3. இருளாடை = இருளாகிய ஆடை ; இருள்போன்ற கருநிறமுள்ள ஆடை.

4. கீழ் = கிழக்கில் ; தரையில்.

5. பிரகாசிக்கின்ற நட்சத்திரங்களையுடைய இரவின் தொடக்கத்தில் சிவந்த சந்திரன் தோன்ற, கீழ்த்திசையில் இருளனைத்தும் இரவிற்குத் தெரியாமலே நீங்கிற்று எனச் சந்திரோதயத்தை வருணிக்கின்ற கவி, சந்திரன் நாயகனாகவும் இரவு நாயகியாகவும் தோன்றும்படி அடைமொழிகளைக் கூறியுள்ளனர். அதனால், அன்பு மிகுந்த திங்கள், விளங்கும் கருவிழியையுடைய இரவாகிய நாயகியை முத்தமிட, வேட்கை மிகுதியால் இரவு அறியாதபடி அவளது இருண்ட ஆடை கீழே விழுந்தது என்ற பொருள் தோன்றுகின்றது.

தோற்றுவித்துச் சிறந்த காவியசரீரமாகின்றது. [1] வாச்சியம் வியங்கியம் இவற்றுள் யாது அழகுற்று விளங்குகின்றதோ அஃதன்றோ சிறப்புற்றது, உ-ம்.

" அநுராகமுடையள் சந்தி; பகலோ அதன் முன்னருளது; அவ்வாறிருந்துஞ் சேர்க்கை இல்லை; அந்தோ இஃதென்ன தெய்வச்செயல்! " [2]

1. ஆக்ஷேபாலங்காரத்திற்குப் பாமஹர் கூறும் இலக்கணம் வேறு, வாமனர் கூறும் இலக்கணம் வேறு. பாமஹர் கூறும் இலக்கணமாவது :—" விசேடத்தைக் கூறவேண்டுமென்ற ஆசையால் விரும்பிய பொருளை மறுப்பதுபோலுள்ளது." உ-ம்.

" நான் உன்னை ஒருகணமேனும் பாராவிடின், கவலையுற்றிருப் பேன் ; இவ்வளவே போதும் ; இதற்குமேல் உனக்குப் பிரியமின் மையைக் கூறுவதால் என் ?"

ஈண்டு இவ்வளவே போதும் என்றது, யான் மரணத்தை அடைவேன் என்பதைக் குறிப்பிக்க, அது நீ பிரியவேண்டாம் என்ற தைக் குறிக்கும். " இவ்வளவே போதும்" என்பதன் வாச்சியப் பொருளே வியங்கியப்பொருளைத் தோற்றுவித்துத் தான் பொலி வுறுதலால், அஃதே சிறந்ததாகும்.

வாமனர் கூறும் இலக்கணமாவது :—" உவமானம் எங்குக் குறிப்பால் உணரப்படுமோ, அஃது ஆக்ஷேபமாகும் என்பது ". " அநு ராகமுடையள் சந்தி..." என்றவிடத்து சந்திக்கு உபமானம் ஒரு தலைவியும், பகலுக்கு உவமானம் ஒரு பெரியாரும். இவ்வுதாரணம், ஏனையோர்கொள்கையில் சமாசோக்தியாகும்.

2. அநுராகம் : தொடர்ந்த சிவப்பு, மிக்க அன்பு ; சந்தி (ஸந்த்யா) என்பது வடமொழியில் பெண்பாலாகும் : ஆகலின் சந்தி ஈண்டுப் பெண்பாலாகக் கொள்ளப்பட்டது ; தலைவனுகிய சந்திரன் கூறப்பட வில்லை ; அவ்விருவர்க்கும் புணர்ச்சி நிகழாமைக்குக் காரணம் பெரியோர் போன்ற பகல் எதிரில் நிற்பது எனவுங் கூறப்பட்டது. பூர்ணிமை யன்று மதி அந்திக்காலத்தில் தோன்ருது பின்னர்த் தோன்றுவதை இவ்வாறு வருணித்தனர் புலவர். ஈண்டுத் தலைவன் தலைவிசெயல்கள் வாச்சியப்பொருட்கே அழகைத் தருகின்றது காண்க. அவ்வாறிருந்தும் என்பதற்கு மிக்க அன்போடுகூட இருந்தும் என்பது பொருளாகும்.

ஈண்டு வியங்கியப்பொருள் தோன்றினும் வாச்சியத்தின் அழகே சிறந்தமையான் அஃதே சிறந்த தாகும்.

தீவகம்[1], அவநுதி[2] இவை முதலியவற்றில் வியங்கியமாக உவமானோவமேயபாவம் தோன்றினும், அது சிறந்ததாகக் கருதப் படாமையின், அவை உவமை என்ற சொல்லால் எவ்வாறு குறிக்கப்படவில்லையோ, அவ்வாறே சமாசோக்தி ஆக்ஷேபம் முதலிய அணிகளில் வியங்கியப்பொருள் சிறந்ததாகக் கருதப் டாமையின், அவை தொனி என்ற சொல்லாற் குறிக்கப்பட வில்லை.

ாரணங்கூறுவிசேடோக்தியில்[3]

"நண்பராற் கூப்பிடப்படினும், வந்தேன் எனக் கூறி உறக் கத்தை விடினும், செல்லுதற்கு மனங்கொளினும், வழிப்போக் கன் படுத்த நிலையினை நீக்கினனிலன்"

1. "மதத்தால் இளைத்த யானையும், போரிற் புண்பட்டிளைத்த வீரனும், கலைகுறைமதியும், குறைவின் கண் சிறந்து விளங்குவர்" என்பது தீவகத்திற்கோர் உதாரணம். அதன் இலக்கணம்

குணந்தொழில் சாதி பொருள்குறித் தொருசொல்
ஒருவயி னின்றும் பலவயிற் பொருடரின்
தீவகஞ் செய்யுண் மூவிடத் தியலும்.

எனத் தண்டியலங்காரவாசிரியர் கூறுவர்.

2. "இது மதயிருவண்டின் ஒலியன்று; இழுக்கப்பட்ட மதனன் வில்லின் ஒலியே யாகும்" என்பது அவநுதிக்கோர் உதாரணம். அதன் இலக்கணம்

சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை
மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதி யாகும்.

எனத் தண்டியலங்காரவாசிரியர் கூறுவர்.

3. விசேடவணியின் பொதுவிலக்கணம்

குணந்தொழின் முதலிய குறைபடு தன்மையின்
மேம்பட வொருபொருள் விளம்புதல் விசேடம்

எனத் தண்டியலங்காரவாசிரியர் கூறுவர்.

என்பதுபோன்ற இடங்களில் வியங்கியப்பொருள் பிரகரணத்தான் தோன்றினும், அதனால் ஆங்கு ஓரழகுக் தோன்றாமையின், அதற்குச் சிறப்பு இன்று[1].

பரியாயோக்தத்திலும்[2] வியங்கியப்பொருட்குச் சிறப்பு இருப்பின், அப்போது அவ்வணி தொனியுள் அடங்கும்; ஆயினும், தொனி அதனுள்ளே அடங்கும் எனக் கூறுதல் இயலாது; ஏனெனில், தொனி பலவற்றை விடயமாக்கொண்டது எனவும், அது அங்கி ஆகும் எனவும் பின்னர்க் கூறப்படும். பாமஹர்[3] பரியாயோக்தத்திற்குக் கூறிய உதாரணத்திலும், அது

1. ஈண்டுப் படுத்தநிலையை நீக்காமைக்குக் காரணம் குளிர் என்று பட்டோத்படரும், சொப்பனத்தில் எளிதாக மனைவியுடன்கூட இருக்கலாம் என்பது என ஏனைய இரசிகர்களும் கூறினர். இக்காரணம் வியங்கியமாகவே தோன்றினும், அதற்கு மிக்க சிறப்பின்றி, படுத்தநிலையினை நீக்கினனிலன் என்பதன் வாச்சியப்பொருளே சிறக்கின்றது. அக்காரணம் வியங்கியமாகத் தோன்றாவிடின், ஈண்டுக் காரணக்கூறாவிசேடவணி எனக் கூறுதற்கே இடன் இல்லாமற்போம்.

2. பரியாயோக்தம் என்பதைப் பரியாயவணி என்பர் தண்டியலங்காரவாசிரியர். அதன் இலக்கணமாவது

கருதியது கிளவா தப்பொரு டோன்றப்
பிறிதோன் றுரைப்பது பரியா யம்மே.

3. பரியாயோக்தத்திற்குப் பாமஹர் கூறிய உதாரணமாவது "வீட்டிலோ வழியிலோ வேதமோதும் பார்ப்பனர் உண்ணாத உணவை உண்ணமாட்டோம்; அது நஞ்சு கலந்த உணவை நீக்குதற்கே." (இது கண்ணனால் சிசுபாலனுக்குக் கூறப்பட்டது) இங்கு "உணவு நஞ்சோடு கலக்கப்படாது இருக்கட்டும்" என்பது வியங்கியப்பொருளாயினும், அதற்குச் சிறப்பின்றி அப்பொருளோடு கூடிய வாச்சியப்பொருட்கே சிறப்பு உளது எனப் பெரியோர் கூறினர். இவ்வுதாரணம்போன்று மற்றோர் உதாரணமும் கூறப்பட்டுள்ளது: அது

"பகைஞனை முற்றிலும் அழிக்கத் தீர்மானங்கொண்டு அதருமவழியிற் செல்லும் பரசுராமர்க்கு இவ்வில்லால் தருமவழி காட்டப்பட்டது." என்பதாகும். ஈண்டுப் பரசுராமனை அவமதிக்கத்தக்க ஆற்றல் பீஷ்மரிடம் இருந்தது என்ற வியங்கியப்பொருள் தோன்றினும், அதனோடு கூடி தருமவழி காட்டப்பட்டது என்பதே அழகுற்றதாகத் தோன்றுகின்றது.

போன்ற வேறு உதாரணங்களிலும் வியங்கியப்பொருட்கே சிறப்பு எனக் கூறுதல் இயலாது; ஏனெனில் ஆங்கு வாச்சியப் பொருள் சிறப்பிலதாகக் கருதப்படவில்லை.

அவநுதி, தீவகம் இவ்விரண்டிலுமோ வாச்சியப்பொருளே சிறப்புற்றது, வியங்கியப்பொருள் அதற்கு உட்பட்டு அழகினை ஊட்டுகின்றது என்பது வெளிப்படை.

ஸங்கராலங்காரத்திலும்[1] ஓரணி மற்றோரணிக்கு அழகு தரின், ஆங்கு வியங்கியம் தனிச்சிறப்புற்றதாகக் கருதப்படா

1. ஸங்கராலங்காரத்தைச் சங்கீரணவணி எனக் கூறுவர் தண்டியலங்காரவாசிரியர். அதற்கு அவர் கூறும் இலக்கணம்

மொழியப் பட்ட வணிபல தம்முள்
தழுவ வுரைப்பது சங்கீ ரணமே. என்பதாகும்.

பட்டோத்படர் ஸங்கராலங்காரத்தை நான்கு வகையாகக் கூறினர். அவை—ஸந்தேகஸங்கரம், ஒரு தொடரில் சொல்லணி பொருளணி இவற்றைக்கொண்ட ஸங்கரம், ஒரு தொடரில் இரண்டு பொருளணியைக் கொண்ட ஸங்கரம், ஒன்றுக்கொன்று உதவியாயிருக்கு மணிகளைக் கொண்ட ஸங்கரம் என்பனவாம். ஒரு செய்யுளில் வந்த சசிவதனை என்பது முதல்வகைக்கு உதாரணமாகும், சசிவதனை என்பது சசியாகிய வதனத்தை உடையாள் எனப் பொருள்படின், ஆங்கு உருவகவணி யாகும்; சசிபோன்ற வதனத்தை உடையாள் எனப் பொருள்படின் ஆங்கு உவமையணி ஆகும். அவ்விரண்டனுள் இதுதான் சிறப்புற்றது எனக் கூற இயலாதாகலான். இரண்டற்குஞ் சிறப்பு ஒருவகைப்பட்டதே; ஆகலின் அவ்வகை தொனிக்கு இடன் ஆகாது. இரண்டாவது மூன்று வது வகைகள் தொனிக்கு இடன் ஆகா என்பது வெளிப்படை. நான்காவதற்கு உதாரணம் :—"காமவேடன் சிவபிரான்போன்று நம் மால் அநங்கீகிருதனுய் இருப்பினும், நம்முடைய உடலைக் கணமே னும் விடாது நிற்பது தைரியத்தாலோ ?" என்பதாகும். ஈண்டுச் சிவபிரான்போன்று என்றவிடத்து உவமை; அநங்கீகிருதன் என்பது உடலை நீக்கினவன் என்றும் உடன்படாதவன் என்றும் பொருள் படுதலின் சிலேடை; விடாது நிற்பது தைரியத்தாலோ என்றவிடத் துத் தற்குறிப்பேற்றம்; இத்தற்குறிப்பேற்றத்திற்கு உதவியாயிருப்பது சிலேடை; சிலேடைக்கு உதவியாயிருப்பது தற்குறிப்பேற்றம்.

மையின் அது தொனிக்கு விடயமாகாது; ஆங்கு இரண்டு அணிகள் தோன்றினும், அவற்றுள் எது வாச்சியம் எது வியங்கியம் எனத் தீர்மானிக்கப் பிரமாணமின்மையின், அவ்விரண்டற்கும் சிறப்பு ஒத்ததே; இனி, எங்கு வாச்சியம் சிறப்பிலதாகவும் வியங்கியம் சிறப்புற்றதாகவும் இருக்கின்றதோ அங்கு அது தொனிக்கு விடயம் ஆகும். ஆயினும், அதைத் தவிர்த்து வேறு தொனி இல்லை எனக் கூறுதல் இயலாது. ஆகலின் பரியாயோக்தத்துக் கூறியவாறே ஈண்டுங் கொள்ளல் வேண்டும். அன்றியும் ஸங்கராலங்காரத்தில் எங்கும் ஸங்கரம் என்ற சொல்லே, ஆங்குத் தொனிக்கு இடமே இல்லை என்பதைக் காட்டும்.

[1] அப்பிரஸ்துதப்பிரசம்ஸையிலும் வாச்சியத்திற்கும் வியங்கியத்திற்கும் இயைபு பொதுச்சிறப்புத்தன்மையாலோ, காரணகாரியத்தன்மையாலோ இருப்பின், அவ்விரண்டும் ஒத்த சிறப்பினவே யாகும். அப்பிரஸ்துதமான வாச்சியம பொதுப்பொருளாகவும் பிரஸ்துதமான வியங்கியம் சிறப்புப் பொருளாகவும், இருக்கும்போது சிறப்புப்பொருட்கு உயர்வு இருப்பினும், பொதுப்பொருளை விட்டுச் சிறப்புப்பொருள் இருத்தற்கு இயலாமையின், பொதுப்பொருட்கும் சிறப்புப் பொருட்குள்ள உயர்வு உண்டு எனக் கொள்ளல் வேண்டும். அவ்வாறே, அப்பிரஸ்துதமான வாச்சியம் சிறப்புப்பொருளாகவும் பிரஸ்துதமான வியங்கியம் பொதுப்பொருளாகவும் இருக்கும்போது பொதுப்பொருட்கு உயர்வு இருப்பினும், அப்பொதுப்பொருளில் சிறப்புப்பொருளனைத்தும் அடங்குகின்றமையான் சிறப்புப்பொருட்கும் பொதுப்பொருட்குள்ள உயர்வு உண்டு எனவே கொள்ளல்வேண்டும். அப்பிரஸ்துதமான வாச்சியமும் பிரஸ்துதமான வியங்கியமும் ஒன்றுக்கொன்று காரணகாரியமாயிருக்கும்போதும் இம்முறையாகவே இரண்டற்கும் ஒத்த மேன்மை உண்டு. அப்பிரஸ்துதமான

1. பிரஸ்துதம் என்பதற்கு வருணிக்கப்படும் பொருட்கு நேரில் இயைபுபட்டது என்பது பொருளாகும்; அப்பிரஸ்துதம் என்பதற்கு நேரில் இயைபில்லது என்பது பொருளாகும். ஒரு பயன் நோக்கிச் சிலவிடங்களில் கவிகள் அப்பிரஸ்துதத்தை வருணிப்பர். அதற்கு

*வாச்சியமும் பிரஸ்துதமான வியங்கியமும் ஒன்றுக்கொன்று ஒற்றுமைப்பட்டிருக்கும்போது வாச்சியத்திற்குச் சிறப்பு இல்லையெனில், அவ்விடம் தொனியின்பாற் படும்; அப்பிரஸ்துதத்திற்குச் சிறப்பு உண்டெனில் அது வேறோர் அணியாகும்.*

அப்பிரஸ்துதப்பிரசம்சை என்று பெயர். ஈங்கு அப்பிரஸ்துதத்திற்கும் பிரஸ்துதத்திற்கும் இயைபு மூவகையுள் ஒன்று இருக்கும். அது ஸாமான்யவிசேடமாகவோ, காரணகாரியமாகவோ, ஒப்புவமையுடையனவாகவோ இருக்கலாம். பொதுவாயிருப்பது ஸாமான்யம்; அதற்குள் அடங்கிய ஒன்று விசேடம். அப்பிரஸ்துதம் ஸாமான்யமாகவும், பிரஸ்துதம் விசேடமாகவும் இருக்கலாம். அதற்கு உதாரணம் "அந்தோ! இயற்கையாய்க் கொடிதான ஊழின் கதிக்கு எல்லை இல்லை" என்பது. ஈண்டுப் பிரஸ்துதம் எதிர்பாராத ஒரு பொருளின் நஷ்டம்: அப்பிரஸ்துதம் விசேடமாகவும் பிரஸ்துதம் ஸாமான்யமாகவும் இருக்கலாம்; அதற்கு உதாரணம், "தாமரையிலையில் நின்ற நீர்த்துளியை முத்தென நினைத்து விரல் பட்டவுடன் அது கலைய, அதனை நினைத்தே உறக்கமின்றி வருந்துகின்றான்" என்பது. ஈண்டுத் தகாதவிடத்துப் பெருமையுள்ளதாக நினைத்தல் ஸாமான்யமாகும். அப்பிரஸ்துதம் காரணமாகவும் பிரஸ்துதம் காரியமாகவும் இருக்கலாம்; அதற்கு உதாரணம், "நன்னிலையில் மகிழ்ச்சியுற்றுத் தீய நிலையில் கைவிடாதிருக்கும் உறவினரே நண்பர், ஏனையோர் தந்நலங் கருதியவர்" என்பது. ஈண்டுக் காரியம் "அவர் நம்பத் தகுந்தவர்" என்பது. அவ்வாறே அப்பிரஸ்துதம் காரியமாகவும் பிரஸ்துதம் காரணமாகவும் இருக்கலாம்; அதற்கு உதாரணம், "பாற்கடலைக் கடைதற்குமுன் புத்தேளுலகினைப் பாரிஜாதமின்றியும், திருமால்மார்பினைக் கவுஸ்துபம் இலக்குமி இவரின்றியும், சிவபிரான்சடையைக் கலைமதியின்றியும் பார்த்ததை நினைக்கின்றேன்" என்பது. இது ஜாம்பவான் கூறியது. இதனால் அவர் வெகுநாளாய்ச் சீவித்திருக்கின்றார் என்ற காரணம் விளங்கு

அப்பிரஸ்துதம் பிரஸ்துதம் இரண்டும் ஒற்றுமைப்பட்டிருக்கும்போது அப்பிரஸ்துதம் அஃறிணைப்பொருளைப்பற்றியதாயின், அதற்குச் சிறப்பு இல்லை.

இதற்கு உதாரணமாக:

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து. (குறள் 879.)

என்ற குறளைக் கொள்ளல் தகும்.

கீழ் விருத்தியில் விரிவாகக் கூறியதைக் காரிகை சுருக்கிக் கூறுவது :—

வாச்சியத் தைப்பின் பற்றிச் சிறப்பின்றி
வியங்கிய மெங்குள தாங்குச் சமாசோக்தி
முதலிய வணியெனல் வெளிப்படை யேயாம். (கா. 14)

வியங்கியஞ் சிறிதே புலப்படின் வாச்சியச்
சமமாச் சிறப்புறின் சிறப்பின் றிருப்பின்
ஆங்கெலாந் தொனியிலே யென்ன வேண்டும். (கா. 15)

எங்குச் சொல்லும் பொருளுந் தாமே
வியங்கியம் நோக்கியே நிற்குமோ வாங்குத்
தொனியாம் சங்கரச் சஞ்சய மின்றேல். (கா. 16)

ஆகலின், தொனி வேறொன்றனுள் அடங்காது; காவியவிசேடமாகிய அங்கியே[1] தொனி எனக் கூறப்பட்ட காரணத்தாலும் தொனி வேறொன்றனுள் அடங்காது என்பது பெறப்படும். அவ்வங்கிக்கு, அணிகள், குணங்கள், விருத்திகள் இவையெல்லாம் [2]அங்கங்களாகு மெனப் பின்னர்க் காட்டப்படும். அவயவமே தனியாகப் பிரிக்கப்பட்டு அவயவியாக வழங்கப்பட்டிலது; அவயவியை விட்டு அது பிரியாதிருப்பினும், அஃது அதற்கு அங்க மாகுமே யன்றி அவயவி ஆகாது ஒருவாறு சில விடத்தில் அவயவம் என்ற அணியே அவயவியாக இருப்பினும், தொனியெல்லாம் அங்கே அடங்கும் எனக் கூறல் இயலாது, தொனிக்குப் பல இடங்கள் இருத்தலின். தொனியெனக் கூறுப தொல்பெரும் புலவர் (கா. 13) என்றது, இக்கூற்று அறிஞரான் முதன்முதல் காணப்பட்டதேயன்றி யாரோ அறியாதாரிடமிருந்து வந்ததன்று என்பதைக் காட்டும். புலவருள் முதல்வராயிருப்பவர் வியாகரண நூலார், வித்தைகளெல்லாவற்றிற்கும் சொல்லிலக்கணமே அடிப்படையாகலான். அவரும்,

1. அங்கி = அவயவி = முதல் ;

2. அங்கம் = அவயவம் = சினை.

அவ்வெழுத்தொலிகள் கேட்கப்பட, ஒலிகளைத் தொனி என வழங்குகின்றனர்.

அவ்வாறே அவர்தங்கொள்கையைப் பின்பற்றியே வேறு சில புலவர் காவியத்தின் உண்மைப்பொருளை யுணர்த்த வேண்டி, வாச்சியப்பொருள், வாசகச்சொல், வியங்கியப்பொருள், வியஞ்சனுவிருத்தி, வியங்கியப்பொருளைக்கொண்ட காவியம் இவற்றைத் தொனி என்ற சொல்லாற் குறிக்கின்றனர்.

1. தோனி என்ற சொற்கு வாக்கியபதீயம் முதலிய வியாகரண நூல்களில் மூவகைப்பொருள்கள் வழங்கப்பட்டுள்ளன :—1. முகம், நா முதலியவற்றின் அசைவாற் பிறக்கும் எழுத்தொலியின் பின்னர், மணியோசையை ஒத்து ஒன்றன்பின் ஒன்றாக உண்டாம் ஒலிகள் ஒன்று ; 2. அவ்வொலிகள் காதில் விழுந்து அவற்றால் உண்டாம் ஸம்ஸ்காரங்களுடன்கூடி, இறுதியில் கேட்கப்பட்டு ஸ்போடத்தை அறிவிக்கும் நாதம் எனப் பெயர்கொண்ட எழுத்தொலி மற்றொன்று. 3. அதிவேகமாகவேனும் மிக மெதுவாகவேனுஞ் சொற்கள் கூறப்பட, முதலில் எழும் எழுத்தொலியின் தன்மை மாறுபடாவிடினும், பிரசித்தமான அவ்வொலியின் உச்சாரணத்தைக்காட்டிலும் வேறாய் துரிதம் விலம்பிதம் முதலிய பெயர்களாற் கூறப்படும் விருத்திகள் வைகிருதத்தோனி எனக் கூறப்படும் ; இஃதே மூன்றாவது.

முதல் வகையில் பின்னருண்டாம் ஒலிகள் எவ்வாறு தொனி என்ற சொல்லால் ஆங்கு வழங்கப்படுகின்றனவோ, அவ்வாறே இந்நூலில் மணியொலி யொத்து (அநுரணனரூபமாய்) விளங்கும் வியங்கியப் பொருள் தொனி என்ற சொல்லால் வழங்கப்படும். இரண்டாம் வகையில் ஸ்போடத்திற்கு வியஞ்சகமாகிய நாதம் எவ்வாறு தொனியென ஆங்கு வழங்கப்படுகின்றதோ, அவ்வாறே ஈண்டு வியஞ்சகமாகிய சொல், வாச்சியப்பொருள் இவையும் தொனி என்ற சொல்லால் வழங்கப்படும் மூன்றும் வகையில் பிரசித்தமான உச்சாரணத்தைக் காட்டிலும் வேறுபட்ட துரிதம், விலம்பிதம் முதலிய வியாபாரங்கள் வைகிருதத்தொனி என்ற சொல்லால் ஆங்கு எவ்வாறு வழங்கப்படுகின்றனவோ, அவ்வாறே ஈண்டு பிரசித்தமான இடுகுறியாற்றல், ஆகுபெயராற்றல் என்ற வியாபாரங்களினின்று வேறுபட்ட குறிப்பாற்றலும் தொனி என்ற சொல்லால் வழங்கப்படும்.

இங்ஙனங் கூறக் காரணம் அவற்றுள் வியஞ்சகத்தன்மையே னும் வியங்கியத்தன்மையேனும் இருத்தலால் ஆகும். இவ்வாறு கூறப்பட்டதும், இனிக் கூறப்போகும் பிரிவு உட்பிரிவு இவற் றுன் பெருவிடயத்தைக் கொண்டதுமான தொனியின் விளக்கம் பிரசித்தமான அணிவிசேடங்களின் விளக்கத்தோடு ஒத்ததே யன்றித் தனியே பாராட்டத்தக்கதன்று எனத் தொனியைப்பற் றித் துணிவுகொண்டாரின் பரபரப்பு தக்கதன்று. இருப்பி னும் அவர்களிடத்துச் சிறிதும் எக்காரணம்பற்றியும் வெகுளி யால் அவமதிப்புக் காட்டுதல் வேண்டா. இவ்வாறு தொனியை மறுத்துப் பேசியோர்க்கு விடை அளிக்கப்பட்டது. ஆகலின் தொனி என்பது உண்டு ; அது பொதுவாகக் கருதாவாச்சியத் தொனி [1] கருதிவேறினைநோக்கும்வாச்சியத்தொனி [2] என இரு வகைப்படும்.

அவற்றுள் முதலதற்கு உதாரணம் : –

"சூரன், கல்வியறிஞன், சேவிக்குமுறையறிந்தோன் இம் மூவரும் பூமியினின்று செம்பொன்னைப் புட்பிக்குஞ் செடியைத் தேடிச் சேர்ப்பர்."

1. எவ்விடத்தில் கூறுவோர்க்கு வாச்சியப்பொருளிலன்றி வியங் கியப்பொருளில் கருத்து உளதோ, அது கருதாவாச்சியத்தொனி ஆகும்.

2. எங்கு வாச்சியப்பொருள் கருதப்பட்டு வியங்கியப்பொருளை நோக்கி நிற்குமோ, அது கருதிவேறினைநோக்கும்வாச்சியத்தொனி ஆகும்.

3. செம்பொன்னைப் புட்பித்தல் என்ற வினை ஒரு செடிக்கும் எங்கும் இன்மையான், செம்பொன்னைப் புட்பிக்குஞ்செடி என்ற தொடரின் இடுகுறிப்பொருள் பொருந்தாது ; ஆகலின் அதற்குக் குறைவற்ற செல்வம் என்ற பொருளை இலக்கணையாற் கொள்ளல் வேண்டும். செம்பொன்னாகிய புட்பத்தை எனக் கூறாது செம் பொன்னைப் புட்பிக்குஞ்செடி எனக் கூறியதற்குக் காரணம் செல்வம் எப்போதும் குறைவற்று நிற்கும் என்பதைக் குறித்தற்கு என்க. இதற்குப் பயன் சூரன் முதலிய மூவரின் சிறப்பும் வியங்கியமாய்த் தோன்றுதல். ஈண்டுப் புட்பிக்குஞ்செடி என்ற தொடர் சிறந்த வியஞ்சகமாகவும் அதனையொட்டி அதன் பொருள் வியஞ்சகமாகவும்

இரண்டாவதற்கு உதாரணம் :—

"இளமகளே! நின்னிதழ்சிவப்புறுகொவ்வைக்கனியைச் சுவைக்க இக்கிளிக்குஞ்சு எம்மலையில் எத்தனையாண்டு எப்பெயர்பெற்ற தவஞ் செய்ததோ! [1]

கிற்கும். ஆகலின் ஈண்டு அபிதை, தாற்பரியம், இலக்கணை, வியஞ்சனை என்ற நான்கு வியாபாரங்கள் உள. (சூரன் முதலியோர் குறைவற்ற செல்வத்தைப் பெறுவர் என்பது இச்செய்யுளின் கருத்து). இப்பொருள்கொண்ட ச்லோகம் வியாசமாபாரதம் உத்தியோகபருவம் விதுரப்ராஜகரபருவத்தில் 35ஆவது சருக்கத்தில் 74ஆவது ஆகும் மூலத்தில் सुवर्णपुष्पां, पृथिवीं இரண்டும் चिन्वन्ति என்பதற்குக் கர்ம ஆகும். இப்பொருள் என் ஆசிரியர் மகாமகோபாத்தியாய குப்புஸ்வாமி சாஸ்திரியார் புதிதாகக் கூறியதாகும். இவ்வாறே

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது. (குறள் 865).

என்ற குறளில் சுவைப்பொருளைக் கொண்ட இனிது என்ற சொல் எளியவன் என்ற பொருளைத் தருதலால் கருதாவாச்சியமாகும்.

1. எம்மலை என்றது தவமுடையார் வேண்டியதை இடையூறின்றிப் பெறுமாறு செய்யும் பர்வதம் கூட இப்பெரும்பொருளைக் கொடுத்தற்கு இயலாது என்ற பொருளைக் காட்டும். எத்தனையாண்டு என்பது இப்பொருளைப் பெறத் தேவர்களது ஆயிரங்கற்பமும் போதாத காலம் என்பதைக் குறிக்கும். எப்பெயர் பெற்ற தவம் என்பது இவ்வாறு பெரும் பயனைத் தருந் தவம் எங்குங் கூறப்பட்டிலது என்பதைக் குறிக்கும். சுவைக்க என்பது பசியைப் போக்கத் தின்னுது நன்கு சுவையை அனுபவிக்க என்பதைக்குறிக்கும். இளமகளே நின் என்றதனுல், ஒரு தலைவன் தலைவியைக் கண்டு தனக்கு அவள்பாலுள்ள அன்பினை நன்கு வெளிப்படுத்தித் தானும் அவளும் சிருங்காரச்சுவைக்கு விபாவம் ஆவர் என்ற வியங்கியப்பொருள் புலப்படுகின்றது. ஈண்டு எல்லாவற்றிலும் வாச்சியப்பொருள் தன்னை விடாது வியங்கியப்பொருளை அறிவிக்கத் துணை ஆகின்றது. ஆகலின் ஈண்டு அபிதை, தாற்பரியம், வியஞ்சனை ஆகிய மூன்றே வியாபாரங்கள் உள்ளன. காரணமின்றி வினைப்பொருள் பொருந்தாமையின் இலக்கணையும் ஈண்டு உண்டெனின், அஃது ஒருவாறு இருப்பினும் வியஞ்சனைக்கு முன்னுதாரணத்தில் அஃது எவ்வாறு சிறந்த துணை ஆயிற்றே, அவ்வாறு இங்கே ஆகாது ; ஆதலின் அபிதையும் தாற்பரியமுமே வியஞ்சனைக்குச் சிறந்த துணையாகும்.

பக்தியே தொனி என்ற பிறர்கூற்று, தற்போது மறுக்கப் படும் :—

இத்தோனி பக்தியோ டோன்ரு காதே
இரண்டும் பண்பால் வேறுபட் டனவால். (கா. 16½)

வாச்சியவாசகங்களிலிருந்து முற்றும் வேறுபட்டுத் தாற்பரியசக்தியால் பொருள் விளங்குமிடத்துத் தொனி என்ற வழக்கு ; வாச்சியவாசகங்களின் உபசாரவழக்கே[1] பக்தியாகும். ஆகலின், தொனியும் பக்தியும் ஒரு பொருட்பலசொற்களைப்போல் ஒன்றனைக் குறியா.

அவ்வாறு இரண்டும் ஒன்றனைக் குறியாவாயின், பக்தி தொனிக்கு இலக்கணம்[2] ஆக எனின், அற்றன்று :—

இஃதே யிலக்கண மாகா ததற்கு
குன்றக் கூறல் மிகைபடக் கூறலான். (கா. 17)

தொனியில்லாதவிடத்து பக்தி இருத்தலின் மிகைபடக்கூறலும், தொனியுள்ளவிடத்து பக்தி இல்லாமையான் குன்றக்கூறலும், உள்ளமையான், பக்தி தொனிக்கு இலக்கணம் ஆகாது.

வியஞ்சகத்தால் உற்ற பேரழகைக்[3] கொள்ளாது உபசாரப்பொருளைக் கொண்டே உலகவழக்கிற்குப் பொருந்த

1. உபசாரவழக்கு என்பது வடமொழியிலுள்ள கௌணீ, இலக்கணை இவ்விரண்டற்கு முள்ள பொதுப்பெயர் ஆகும். இடுகுறிப்பொருளின் அருகில் உள்ளதும் அதற்கு இயைபுபட்டதுமான வழக்கு என்பது சொல்வகையான் அதற்குப் பொருள் ஆகும்.

2. ஒரு பொருளை வேறு பொருள்களினின்றும் வேறுபடுத்தி அறிவித்தற்குக் கூறுவது அதன் இலக்கணம் ஆகும். உ-ம். கந்தமுடைமை ப்ரிதிவிக்கு இலக்கணம்.

3. அழகு எனக் கூறாது பேரழகு என ஏன் கூறினர் எனின், சிறிது வியஞ்சனவிருத்திக்கு இடனாய் வியங்கியப்பொருளைக் குறிப்பின், அது தண்டியாசிரியர் கூறியவாறு சமாதி என்ற குணம் எனவே கருதப்படும் எனவும், பேரழகைக் கொண்டால் தான் தொனி ஆகும் எனவும், குறித்தற்கு என்க.

## தொனிவிளக்கு

இயன்ற செய்யுட்களைத் தொனி என்ற பெயரான் வழங்காமல் குணவிருத்தி என்ற பெயராற் கவிகள் வழங்குவர். உ-ம்.

1. "இருபுறத்தும் பருத்த முலையும் பிருட்டமும் பட்டமையால் வாடியும், நடுவில் ஒன்றும் படாமையால் பசுநிறமுற்றும், சோர்ந்த புசங்களை இங்குமங்கும் வைத்தமையால் கசங்கியும் தோன்றும் இத்தாமரையிலைப்படுக்கை மெலிவுறுவுடலாளின் தாபத்தினைக் கூறும்"[1].

2. "தலைவனைத் தலைவி நூற்றுக்கணக்காகத் தான் முத்தமிடினும், ஆயிரக்கணக்காகத் தழுவினும், இடையிட்டுப் புணரினும், புனருத்தம் ஆங்கில்லை"[2]

3. "தன்மனப்போக்குடைமகளிர் வெகுளினும் மகிழினும் கண்ணீர் விடினும் சிரிப்பினும் எந்நிலையிற் கொள்ளப்படினும் அந்நிலையிற் கவர்கின்றனர்.[3]

4. தலைவன் இளைய மனைவியின் தனத்தில் இளங்கொடியால் கொடுத்த[4] அடி மெதுவாயிருப்பினும், சக்களத்திகளின் மனத்துள் பொறுக்கமுடியாததுபோல் ஆயிற்று."

1. கூறும் என்ற வினை மக்கட்குப் பொருந்துமே யன்றி அஃறிணைப்பொருளாகிய படுக்கைக்குப் பொருந்தாது. ஆகலின் அது தன் இடுகுறிப்பொருளை விட்டுக் குறிக்கும் என்ற பொருளை இலக்கணையாற் கொள்ளும்.

2. புனருத்தம் என்பது பெயர்த்துரை எனப் பொருள்படும். அப்பொருள் ஈண்டுப் பொருந்தாது; ஆகலின் இலக்கணையால் சலிப்பு என்ற பொருளைக் கொள்ளல்வேண்டும்.

3. கொள்ளப்படினும் என்பது இலக்கணையால் ஈண்டு அணைக்கப்படினும் என்ற பொருளையும், கவர்கின்றனர் என்பது தன்வசப்படுத்துகின்றனர் என்ற பொருளையும் தரும்.

4. கொடுத்த என்பது இலக்கணையாற் கொடுத்ததனுல் ஆன பயனைப் பெற்ற என்ற பொருளைத் தரும்.

5. எது பிறர்க்காகவே [1]துன்பத்தையனுபவிக்கின்றதோ, எது முறித்தாலும் இனிதாயிருக்கின்றதோ, எதன் விகாரம் எல்லோராலும் போற்றப்படுகின்றதோ, அக்கரும்பு நன்றாய் விளையவில்லையெனின் அது கரும்பின் குற்றமோ, களர்நிலத்தின் குற்றமோ?

இவ்வாறுள்ளது ஒருபோதும் தொனிக்கு விடயமாகக் கருதப்பட்டிலது.

வெளிப்பட விளம்புறு தினிமை பெற்று
விளங்குங் குறிப்பினை விள்ளுசொற் பொருளே
தொனியெனச் சொலற்குத் தகுதிபெற் றிடுமே. (கா. 18)

மேற்கூறிய உதாரணங்களுள் வெளிப்படையாய்க் கூற இயலாததும் அழகுற்றதுமான பொருளைக் குறிப்பது ஒன்றுமில்லை. பின்னும்,

தற்பொருள் விட்டுப் பிறபொருள் தம்மில்
இடுகுறி போற்பயி [2]லிலாவணி யமாதி
சொற்களுந் தொனிக்கிட மாகா வென்க. (கா. 19)

1. துன்பத்தையனுபவித்தல் உயிரில்பொருளாகிய கரும்பிற்கின்மையான், துன்பத்தையனுபவிக்கின்றது என்பது இலக்கணையால் ஆலையில் ஆட்டப்படுகின்றது என்ற பொருளைத் தரும்.

2. இலாவணியம் (लावण्यम्) என்ற சொற்கு உப்பின் தன்மை என்பது இடுகுறிப்பொருள். அச்சொல் அப்பொருளை விட்டு முத்து வயிரம்போன்ற மணிகளிலுள்ள நீரோட்டம் என்ற பொருளையே இலக்கணையால் எங்குங் கூறும். அச்சொல் மற்றும் பிறிதொரு அழகுற்ற பொருளைப் பயன்வகையாற் குறிப்பின், அங்குள்ள விருத்தியை இலக்கணையெனக் கூறாது, வியஞ்சனை எனவே கூறல்வேண்டும். ஆதி என்ற சொல்லால் ஆநுலோமியம் (आनुलोम्यम्), பிராதிகூலியம் (प्रातिकूल्यम्), ஸப்பிரமசாரீ (सब्रह्मचारी) முதலிய சொற்களைக் கொள்ளல் வேண்டும்.

இலாவணியம் முதலிய சொற்களுள் இலக்கணைதான் உண்டு. சிலவிடத்துத் தொனி தோன்றினும், அஃது அச்சொற்களா லின்றி வியஞ்சகத்தன்மையாகிய பிறவகையான் தோன்று மென்க. அன்றியும்,

'அபிதை விலக்கி யிலக்கணை யாற்பொருள்
தெரிக்கு மாற்றல் சேர்ந்தசொல் லிடத்துப்
பயன்வகை யாற்பிற பொருளினைப் பயப்பின்
அச்சொ லாங்கே[2] யிடர்நடை[3] யாகா. (கா. 20)

பேரழகைக் கொண்ட விசேடப்பொருளைக் குறித்தலையே பயனாகக் கொண்டவிடத்து இடர்நடைத்தன்மை உண்டெனக்

1. இலாவணியம் போன்ற சொற்கள் அபிதையாற் குறிக்கப் படும் உப்பின்தன்மை என்பது முதலிய பொருளைவிட்டு, பளபளப்பு (டால்) என்பது முதலிய பொருளை இலக்கணையாற் குறிக்கும். அவ் வாறான சொற்களைக்கொண்ட ஒரு செய்யுளிடத்து வியங்கியப்பொருள் ஒன்று தோன்றின், ஆங்கு டால் என்பது போன்ற பொருளைக் குறித்த லால் சொல்லின் ஆற்றல் மடியாது, வியஞ்சனவிருத்தியால் வியங்கியப் பொருள் பின்னர் அறிவிக்கப்பட்டதா மென்க.

2. ஆங்கு என்பதற்குப் பயனின்கண் என்பது பொருளாகும். இம்மாணவன் சிங்கம் என்னுமிடத்து அபிதையால் பொருள் விளங் காது; இலக்கணையால் இம்மாணவன் சிங்கத்தையொத்தவன் என்ற பொருள் வரும்; அதற்குமேல் அவனிடம் பெருவீரத்தன்மை தோன்று கின்றது. அது வியஞ்சனை என்ற வியாபாரத்தால் எனவே கொள்ளல் வேண்டும் பயனாகத் தோன்றும் பெருவீரத்தன்மை என்ற பொருள் அபிதையாற் கொள்ளவியலாது, அப்பொருளில் சங்கேதமின்மையான்; இலக்கணையாற் கொள்ளலாமோ வெனின், அப்பயனை இலக்கணையாற் குறிக்கக் கூறுவோன் எப்பயனை நோக்கிக் கூறினன் என ஆய்தல் வேண்டும்; பின்னர் அப்பயனை நோக்குதற்கு யாது பயன் என ஆய்தல் வேண்டும்; இவ்வாறு ஆராயின், அஃது அநவஸ்தையிலே முடியும்.

3. இடர்நடை என்பது இடர்ப்பட்ட நடையை உடையது என்ற பொருளைக்கொண்ட அன்மொழித்தொகை. அது வடமொழியில் சிறப் புற்று விளங்கும் स्खलद्गतिः என்ற சொல்லின் மொழிபெயர்ப்பு ஆகும்.

கொள்ளின், அச்சொல்லுள்ள தொடரின் வழக்கு வழுவுற்ற தாகும்; அவ்வாறு உலகில் வழுவுற்றதாகக் கொள்ளவில்லை. ஆகலின்,

வாச்கத் தன்மை யைப்பற் றியதே
இலக்கணை யஃதேவ் வாறும் வியஞ்சகத்
தன்மை யேபற் றியதோனிக் கிலக்கணம்? (கா. 21)

ஆதலான், தொனி வேறு இலக்கணை வேறு. முற்கூறிய இலக்கணத்திற்குக் குன்றக்கூறல் என்ற குற்றமும் உண்டு; தொனியின் ஒரு பகுதியாகிய கருதிவேறினைநோக்கும்வாச்சியத்தொனியும் மற்றுமுள்ள பலவகைகளும் இலக்கணைக்கு இடன் ஆகா; ஆதலான் பக்தி தொனிக்கு இலக்கணமின்று.

தோனிவகை பலவினு ளோன்றி லிலக்கணை
இருத்தலி னதுவதற் குப்லக் கணமாம்.[1] (கா. 21½)

அப்பக்தியே பின்னர்க் கூறப்படும் தொனிவகைகளுள் ஒன்றில் உபலக்கணமாய்த் தோன்றல் கூடும். அக்காரணம்பற்றித் தொனியின் இலக்கணங் கூறல்வேண்டாம் எனின், சொல்லுக்குள்ள இடங்களெல்லாம் அபிதாவிருத்தி தோன்றலின், அபிதையாலேதான் அணிவகைகள் முழுவதுங் குறிக்கப்படும் என்ற காரணத்தான், அணிவகைகளுள் ஒவ்வொன்றற்கும் இலக்கணங் கூறுதல் வீண் முயற்சி ஆகும்.
அன்றியும்,

பிறரத னிலக்கணம் கூறின ரேன்னின்
நம்முடை பக்கஞ் சித்தித் ததாமால். (கா. 22)

முன்னரே பிறரான் தொனியின் இலக்கணம் கூறப்பட்டதெனின் நம் விருப்பம் நமது முயற்சியின்றியே நிறைவேறியதாகும், நமது கொள்கையும் நிலைநாட்டப்பட்டதாகும்.

1. எல்லாவிடத்திலும் இராதிருப்பினும சிலவிடத்தில் இருந்து அறிகுறியாவது உபலக்கணம் ஆகும்.

## தொனிவிளக்கு

தொனி சுவைஞரான் உணரப்படுமேயன்றி இலக்கண வகையாற் கூற இயலாது எனக் கூறுவோரின் கொள்கை ஆராயவேண்டுவதின்று; ஏனெனில் தொனியின் பொதுவியல்பையுஞ் சிறப்பியல்பையுங் கூறிய வகையானும் கூறப்போகும் வகையானும் அவர் அறிந்தும் அவ்வாறு கூறின், உலகிலுள்ள எல்லாப்பொருட்கும் அவ்வாறே இலக்கணங் கூறுதல் இயலாது எனக் கூறல் தகும். தொனியின் சிறப்பினை நோக்கி அஃது ஏனைய காவியங்கட்கு மேம்பட்டது எனத் தோன்றுதற் பொருட்டே அவர் அவ்வாறு உயர்வுநவிற்சியினாற் கூறினரெனின், அவரும் நம்மோடு உடன்பட்டவரே ஆவர்.

தொனிவிளக்கின் முதற்கதிர் முற்றும்.

# இரண்டாங்கதிர்

*தொனி—கருதாவாச்சியம், கருதிவேறிணைநோக்கும்வாச்சியம் என்று இருவகையாக முதற்கதிரிற்*[1] *கூறப்பட்டது. கருதாவாச்சியத்தின் வேறுபாட்டினைக்*[2] *குறிக்க, இது கூறப்படுகின்றது.*

கருதா வாச்சியத் தொனியின் வாச்சியம்
முற்றிலும் மறைந்தும் பிறிது பொருட்கண்
மாலை நூல்போன் மாண்புறத் தகைத்துச்
செல்வது மாகி யிருவகைத் ததுவே. (கா. 23)

*முற்றிலுமறைந்தவாச்சியம்,*[3] *பிறிதுபொருளின்கண் மாலை நூல்போல் அதனகத்துச் செல்லும் வாச்சியம்*[4] *என்ற இரண்டும் தொனிவிசேடமே குறித்தலின், அவற்றின் வாச்சியம் வியங்கியத்தை விளக்கவந்த வியஞ்சகமாகிய தொனிவகையே ஆகும்.*

1. *முதற்கதிரில் விருத்தியிற் கூறப்பட்டது; ஈண்டு, காரிகையிற் குறிக்கப்படுகின்றது; காரிகை என்பது செய்யுளுருவமானது; விருத்தி என்பது அந்தக்காரிகையின் உரையுருவமான சொற்றொடர் ஆகும்.*

*விருத்தியை ஆநந்தவர்த்தனர் இயற்றினர் என்றும் காரிகையை மற்றொருவர் இயற்றினர் என்றுஞ் சிலர் கூறுவர்; அங்ஙன் அன்று, இருவரும் ஒருவரே எனப் பலவிடங்களில் அபிநவகுப்தர் தமது உரையாகிய லோசனத்திற் குறித்துள்ளனர்.*

2. கருதாவாச்சியத்தின் வேறுபாட்டினை: (1) *கருதாவாச்சியத்தின் உட்பிரிவுகளை,* (2) *கருதிவேறிணைநோக்கும்வாச்சியத்தினின்று மாறுபாட்டினை.*

3. *எந்த வாச்சியப்பொருள் தான் சிறிதும் பயன்படாது மற்றொரு பொருளை அறிவிக்கக் கருவியாக மாத்திரம் நின்று, அதனை அறிவித்தவுடன் நம் மனத்திலிருந்து ஓடிவிடுகின்றதோ, அது முற்றிலும் மறைந்தவாச்சியம் ஆகும்.*

4. *எவ்வாச்சியப்பொருள் இடத்திற்குப் பொருந்தியிருப்பினும், அம்மாத்திரத்தாற் பயன்படாது, வேறு சில பண்போடுகூட இருக்கும் நிலையைக் குறித்துத் தானும் மணிகளைக் கோத்தற்குக் கருவியாகிய நூல்போல் அப்பண்போடு விளங்குமோ, அது, பிறிதுபொருளின்கண் மாலைநூல்போல் அதனகத்துச்செல்லும் வாச்சியம் ஆகும்.*

அவற்றுள் பிறிதொருபொருளினகத்துச்செல்வாச்சியத் தொனிக்கு உதாரணம்:—

"மேகங்கள் நீரை உண்டு கருங்கதிரை விசும்பிற் செலுத்தி நாரைகளை மகிழ்ச்சியுடன் விளையாடச் செய்கின்றன காற்று நீர்த்திவலையுடன் வீசுகின்றது; காரின் நண்பரான மயில்கள் இனிது கூவுகின்றன; அவ்வாறு இருக்கட்டும்; [1]வெகுகடினமனத்தனான இராமன் அல்லவோ யான்; நான் எல்லாவற்றையும் பொறுப்பேன்; வைதேகியோ, எவ்வாறு இருப்பாளோ! ஹஹா, தேவியே தைரியமொடு நில்.[2]"

என்றவிடத்து இராமன் என்ற சொல்.

இதனால் [3]வியங்கியமாகிய பண்புகளுடன் கூடி வேற்றுருவங் கொண்டதுபோலுள்ள இராமன் குறிக்கப்படுகின்றானேயன்றி, இராமன் என்ற பெயருள்ள மனிதன் மாத்திரம் குறிக்கப்படவில்லை.

1. எவ்வகைப்பட்ட பண்புகளுடன் கூடிய இராமன் ஈண்டுக் குறிக்கப்படுகின்றான் என்பதைக் காட்ட வெகுகடினமனத்தன் என்ற அடைமொழி கூறப்பட்டது. அவ்விசேடணத்தின் ஆற்றலால் ஈண்டுத் தசரதனுக்கு மகனாயிருத்தல், கோசலையின் வயிற்றிற் பிறத்தல், சீதையை மணத்தல் முதலிய பண்புகள் வியங்கிய மாகா எனவும், இராச்சியத்திலிருந்து நீங்கிச் சீதையைக் காட்டிற்குக் கொண்டுவருதல் முதலிய பண்புகளே வியங்கிய மாகும் எனவும் புலப்படும்.

2. மேகங்கள், காற்று முதலியவற்றின் செய்கைகள் உத்தீபன விபாவம் ஆகும். தலைவனிடத்தில் விப்ரலம்பசிருங்காரத்தை உண்டாக்கும்; ஆகலின், இச்செய்யுளின்கணுள்ள சுவைத்தொனி விப்பிரலம்பசிருங்காரம். விப்பிரலம்பசிருங்காரம் என்பதும் பிரிவின் கணுள்ள தலைவன்தலைவியருவகை என்பதும் ஒருபொருளன.

3. வியங்கியமாகிய பண்புகளாவன:—இராச்சியத்திலிருந்து நீக்கப்பட்டமை, காட்டிற்சென்றமை, மனைவியை இழந்தமை முதலியன.

தொனிகாரருடைய விஷமபாணலீலை என்ற நூலிலிருந்து ஓர் உதாரணம் ;—

"ரஸிகர்களாற் கொண்டாடப்படினே குணங்கள் குணங்களாம்; ஞாயிற்றின் கதிரான் விரிக்கப்பட்ட தாமரையே [1]தாமரையாம்"

என்றவிடத்து இரண்டாவது தாமரைச்சொல்.

முற்றிலும்மறைந்தவாச்சியத்தொனிக்கு ஆதிகவியாகிய வான்மீகியின் நூலிலிருந்து உதாரணங்கள் :—

"பனியாற் சூழ்ந்த மண்டலமுடைய திங்கள் ஞாயிற்றிடத்துச் சென்ற சீர்மையோடு பெருமூச்சாற் குருடாகிய கண்ணுடிபோன்று விளக்க மிலது".

என்றவிடத்துக் குருடு[2] என்ற சொல்.

"மதமுடைமேகம் நிரம்பிய ஆகாயமும்[3] மழைத்தாரையாற் சிதறுண்ட மருதமரங் கொண்ட வனங்களும்,[3] அகங்காரமில்திங்களுடன் கூடிய இருளுமுற்றஇரவுகளும்[3]

1. ஈண்டு வியங்கியப்பண்புகளாவன :—இலக்குமிக்குத் தங்குமிடமாயிருத்தல், பேரழகுற்றிருத்தல், வண்டுகள் தேன் அருந்துதற்கு இடனுயிருத்தல் முதலியன.

2. குருடு என்பது அபிதையாற் கண்ணில்லாதலைக் குறிக்க, ஈண்டு முகங்காட்டலின்மை என்ற பொருளை இலக்கணையாலும், அழகின்மை, பயனின்மை முதலிய பொருள்களை வியஞ்சனையாலும் குறிக்கும். இந்த உதாரணம் வால்மீகிராமாயணம் ஆரணியகாண்டம் பதினுறாவது சருக்கத்திலுளது. இப்பொழுது கிடைக்கும் இராமாயணப்புத்தகங்களில் இஃது இலக்குமணன்கூற்றாகக் காணப்படுகின்றது ; லோசனத்தில் இராமன்கூற்றாகக் குறிக்கப்பட்டுளது.

3. எச்சவும்மைகள் முறையே திகழ மீன்களான் நிரம்பிய வானமும், தென்றலால் அசைவுண்ட தேமாவுடன் கூடிய வனங்களும் உவாத்திங்களுடன் கூடிய வெண்மையான இரவுகளும் என்ற இவற்றைக் குறிக்கும்.

மனத்தைக் கவர்கின்றன."

என்றவிடத்து மதமுடை,[1] அகங்காரமில்[2] என்பன.

> கருதி வேறிீன நோக்கும் வாச்சியத்
> தொனியே [3]முறையில் தோற்றம்
> முறைத்தோற் றம்மேன விருவகைத் தேன்ப. (கா.24)

முக்கியமாக விளங்கும் வியங்கியப்பொருளே தொனியின் சொரூபம். அவற்றுள் சிலவற்றில் வாச்சியப்பொருளைத் தோற்றுவிக்கும் ஆற்றலுடன் கூடவே, முறை மனத்திற்குப் புலப்படாது, வியஞ்சனை நிகழும்; சிலவற்றில் வாச்சியப் பொருள் தோன்றிய பின்னர் வியஞ்சனை நிகழும். ஆகலின் கருதிவேறினைநோக்கும்வாச்சியத்தொனி, உடனிகழும் வியஞ்சனையையுடையது, உடனிகழாது பிறகு நிகழும் வியஞ்சனையையுடையது என இருவகைத்து.[4]

1. மேகத்திற்கு மதமுடைமை பொருந்தாமையான் இலக்கணையால் மதமுடையானுக்கு ஒப்புமையையும், வியஞ்சனையால் நற்றீயற்றன செய்தலுடைமை, தடுக்க முடியாமை முதலிய பொருள்களையுங் குறிக்கும்.

2. அகங்காரமின்மை திங்கட்குப் பொருந்தாமையான், அஃது இலக்கணையால் அகங்காரமில்லானின் ஒப்புமையையும், வியஞ்சனையால் பிறர்க்கடங்குந்தன்மை, அழகின்மை முதலியவற்றையும் குறிக்கும்.

3. முறையில் தோற்றம், முறைத்தோற்றம் என்பன அன்மொழித் தொகையாய் வியங்கியத்தைக் குறிக்கின்றன. அவற்றிற்குப் பொருள், வாச்சியத்தைத் தோற்றுவிக்கும் ஆற்றலுடன் வியங்கியத்தைக் காட்டும் வியஞ்சனையுடையது, வாச்சியத்தைத் தோற்றுவிக்கும் ஆற்றலைக் கொண்டு பிறகு வியங்கியத்தைக் காட்டும் வியஞ்சனையுடையது என்பதாம்.

4. முன்னர்க் கூறப்பட்ட கருதாவாச்சியத்தின் வியங்கியப் பொருள் வாச்சியப்பொருளின் வேறுபாட்டால் வேறுப்பட்டது; ஈண்டு வியஞ்சனவிருத்தியின் வேறுபாட்டால் கருதிவேறினைநோக்கும் வாச்சியத்தொனியாகிய வியங்கியம் வேறுபட்டது.

*அவற்றுள் :—*

சுவைபாவ மவற்றின் போலி யவற்றின்
சமன்முதன் முறையில் தோற்றத் தொனியின்
தன்மையாங் கடிதே யங்கியாத் துலங்கினே.[1]

(கா. 25).

*ஏனெனின் சுவை, பாவம் முதலான பொருள் வாச்சியத்தோடு உடனேபோல் அறியப்படுகின்றது. அது திண்ணமாய் அங்கியாயிருப்பினே தொனியின் சொரூபமாம்.*

1. *பாவம் வியங்கியமாயிருத்தற்கு உதாரணம் :—*

*"சினங்கொண்டு தைவிகசக்தியால் மறைந்திருப்பாளோ எனின், நீண்டகாலம் அவள் சினங்கொள்வதில்லை; சுவர்க்கத்திற்குச் சென்றிருப்பாளோ எனின், என்னிடத்தோ அவளுடைய மனம் இளகியது; என் முன்னர் இருக்கும் அவளை வலிந்துகொள்ள அசுரர்க்கும் ஆற்றலு இல்லை; அவளோ என் பார்வையிலிருந்து முற்றிலும் மறைந்து இருக்கின்றாள்; இஃதென்ன விதி".— இது ஊர்வசியைப்பற்றிப் புரூரவஸ் கூறுவது. ஈண்டு விப்பிரலம்பசிருங்காரச்சுவை தோன்றினும், அதைக் காட்டிலுஞ் சிறப்பாகத் தோன்றுவது விதர்க்கம் ஆகிய வியபிசாரிபாவம். ஆகலின், இது பாவத்தொனிக்கு உதாரணம் ஆயிற்று.*

*சுவைப்போலிக்கு உதாரணம் :—*

*"தூரத்திலிருந்து இழுக்கும் மோகமந்திரம்போல் அவளது பெயர் என்காதில் விழும்பொழுதே, அவள் இல்லாமையால் என்மனம் சிறிது நேரங்கூட நிலையடையவில்லை". இஃது இராவணன் சீதையைப்பற்றிக் கூறுவது; இராவணன் சீதையை நேசிக்க, அவள் அவனை நேசியாமையால், இது சிருங்காரப்போலிக்கு உதாரணம் ஆயிற்று.*

பாவத்தின் சமனம் என்பதற்கு பாவத்தின் இறுதிநிலை என்பது பொருளாகும். *அதற்கு உதாரணம் :—*

*"தலைவியும் தலைவனும் மனம் வேறுபட்டு ஒரே படுக்கையில் ஒருவருடன் ஒருவர் பேசாது முகந்திருப்பி வெகுளியுடன் படுத்திருக்க, ஒருவரை ஒருவர் சமாதானப்படுத்த விரும்பினும் தாங்கள் கௌரவத்தைக் காத்திருக்க, மெல்ல மெல்ல இருவர் கடைக்கணணும் சந்திக்க, சிரித்துப் ப்ரபரப்புடன் ஒருவர்க்கொருவர் அணைந்துகொள்ள அடங்கியது இருவரது இறுமாப்பாலான மனவேறுபாடும்". ஈண்டு வெகுளியால் உண்டான மானத்திற்குச் சமனம் காணப்படுகின்றது.*

## தொனிவிளக்கு

இனிச் சுவையணி முறையில்தோற்றச்சுவைத்தொனியி னின்று வேறுபட்டது என உணர்த்தப்படும் :—

பல்வகைக் வாச்சிய மும்வா சகமும்
அவற்றை யழகுறச் செய்கரு விகளும்
[1]சுவையை நோக்கி யதற்கங் கமாக
நிற்குமி டனன்றே தொனிக்கிட னாகும். (கா. 26)

ஒன்றுக்கொன்று வெவ்வேறு இலக்கணங் கொண்டனவாக அறுதியிடப்பெற்ற சொல், வாச்சியப்பொருள், அணிகள், குணங்கள் இவை எக்காவியத்தில் சிறப்புற்ற சுவை பாவம் அவற்றின் போலி அவற்றின் சமனம் என்பவற்றைப் பின்பற்றி நிற்கின்றனவோ அங்குத் தொனியென்றகூற்று நிகழும்.

எங்குச் சுவையா தியவே யங்கமா
வேறொன் றுருஞ் சிறப்புப் பொருளா
அங்குச் சுவையாதி யவணி யென்பேன். (கா. 27)

மற்றோரால் சுவையணிக்கு விடயம் வேறாகக் கூறப்பட்டிருப் பினும், எக்காவியத்தில் ஒரு செய்யுளில் வேறுபொருள் சிறந்ததாயிருக்கச் சுவையாதியன அதற்கு அங்கமோ, அஃதே சுவையணிக்கு இடன் என்பது எனது கொள்கை. அஃதாவது [2] இன்சொற்செய்யுட்களில் ப்ரேயோலங்காரம்

1. ஈண்டுச் சுவை என்பது பாவம், சுவைப்போலி, பாவசமனம் இவற்றிற்கு உபலக்கணம்

2. இன்சொற்செய்யுட்களில்...அங்கமாயிருக்கின்றன. இதற்கு மூலமான வடமொழித்தொடரை உத்படர்கொள்கையினர் இரண்டு வாக்கியமாகக் கொள்கின்றனர். அவை (1) चाटुषु (चाटूनां) वाक्यार्थत्वे, प्रेयोलंकारस्यापि विषयः (2) रसादयोऽङ्गभूता दृश्यन्ते. இவற்றின் மொழிபெயர்ப்பு :—(1) இன்சொல் வருணனைப்பொருளாயிருக்கு மிடத்துப பிரேயோலங்காரமும் விடயமாய்க் காணும். (2) சுவையாதி கள் அங்கமாகக் காணப்படுகின்றன. பாமஹர்கொள்கையினர் அத் தொடரை ஒரே வாக்கியமாகக் கொண்டனர். பாமஹரது கொள்கை யில் பெரியோர், தேவர், அரசர், மக்கள் இவர்க்குப் பிரியமுள்ளனவற்றை வருணித்தல் ப்ரேயோலங்காரம். உத்படர்கொள்கையில் பாவவணியே பிரயோவணியாகக் கூறப்பட்டமையான், அவர்கொள்கையில் சுவை யாதிகளும் பிரேயோவணியும் இன்சொற்செய்யுளிலுள்ள வருணனைக்கு அங்கமாகும்.

சிறந்ததாயினும், சுவை முதலியன அங்கமாயிருக்கின்றன. அச்சுவையணி வேறணியோடு கலப்பற்றதும், கலப்புற்றதும் என இருவகைத்து. முன்வகைக்கு உதாரணம் :—

[1] "நகையால் என்? இனி என்னை விட்டு அகலாய்; பலநாட் கழித்து உன்னைக் கண்டேன்; தலையில்தலைவ, நின்குப் பிரிவில் விருப்பம் இது என்? எதனால் நீ பிரிவுற்றாய்? என இவ்வாறு கனவிற் கூறி நின் பகைஞரின் மனைவியர் அன்பனது கழுத்தை யணைத்த கையினராய்க் கண்ணை விழிக்க, வெறியகைவலயமுடையராய்[2] எழுகுரலொடு கதறுகின்றனர்."

ஈண்டுக் கருணச்சுவை வேறொன்றனோடு கலப்புறாது அங்கமா யிருத்தலின், சுவையணி யென்பது வெளிப்படை. இவ்வாறு வேறு சுவைகளும் அங்கமாதல் காணலாம்.

அச்சுவையணி வேறொன்றனோடு கலப்புற்றதற்கு உதாரணம் :—

"சிவபிரானது கணையினின்றும் பிறந்த தீ முன்னர்ச்செய் சிறுகுற்றமுடைய தலைவன்போன்று, கண்ணீர் சொரியும் முப்புரத்தின் பெண்டிர்தமைக் கைப்பற்றுநிற்கையில் உதறப் பெற்றது; அவர்முந்தானையைப் பிடிக்கையில் நன்கு அடிக்கப் பட்டது; அவர்மயிர்முடியைப் பிடிக்கையில் தள்ளப்பட்டது; அவர்காலில் விழ பரபரப்புடன் பார்க்கப்பட்டிலது; அவரைத் தழுவுகையில் தள்ளப்பெற்றது; அவ்வாறுள்ள தீ நும்முடைய பாவத்தைப் போக்குக."

ஈண்டு முப்புரமெரித்த சிவபிரானது ஆற்றலைச் சிறப்பித்துக் கூற, பொருமையானுற்ற விப்பிரலம்பம், சிலேடை

1. ஈண்டுக் கருணச்சுவை புலப்படினும், மன்னவனாற்றல் அதனால் அழகு ஊட்டப்பெற்றுச் சிறப்பாய் விளங்குகின்றது. ஆதலின் மன்னவனாற்றல்கருணை அங்கி; கருணச்சுவை அங்கம்.

2. வெறியகைவலயம் = விழிக்கும்போது அன்பனின் கழுத்தின்றி இருக்கும் சொப்பனத்தில் வளைக்கப்பட்ட கையின் வளைவு.

யுடன்[1-2] அதற்கு அங்கமாகும். இவ்வாறுள்ளனவே சுவை யணிக்குத் தக்க இடன் ஆகும். சுவை அங்கமாகவே இருத்த லின், இச்செய்யுளுள் கருணைச்சுவையும் பொருமைகாரணமான பிரிவுசிருங்காரமும் கூடியிருக்கும்படி கவி அமைத்திருத்தல் குற்றமாகாது[3]. எங்குச் சுவையே சிறந்த பொருளாய் நிற்கின் றதோ, அங்கு அஃது எவ்வாறு அணியாகும்? அணி யென்பது மற்றொன்றற்கு அழகைத் தருவதன்றோ! ஒன்று தனக்குத் தானே எவ்வாறு அழகைத் தரும்?

ஆகவே அப்பொருளையே இங்குச் சுருக்கிக் கூறுவம் :—

சுவைபா வமாதி சிறந்தன வாக
அவற்றிற் கங்கமா யணியெலா மிருத்தல்
அணியெனற் கேற்கு மென்மனுர் புலவர்.

எங்குச் சுவை முதலியன சிறந்தனவோ அவை அணியின்பாற் படா, தொனியின்பாற் படும்; அதற்கு உவமை முதலியன அணி யாகும். எங்குச் சுவையைத் தவிர்த்து வேறுபொருள் சிறக்க, சுவையாதியால் அஃது அழகுறுமோ, அது சுவையணி யாதற்கு இடனுகும்.

இங்ஙன் தொனிக்கும், உவமை முதலிய அணிகட்கும், சுவையணிக்கும் இடன்வேறுபாடு உள.

1. சிலேடை என்பது ஈண்டுச் சிலேடையுடன்கூடிய உவமையைக் குறிக்கும்.

2. சிலேடையுடன் எனக் கூறினரே யன்றிக் கருணைச்சுவையுட னுங்கூடி என என் கூறிற்றிலர் எனின், பிரிவுசிருங்காரத்திற்கு சிலே டோவமையே அழகினைத் தருகின்றதே யன்றி, கருணைச்சுவை அதனைத் தாராமையின் என்க.

3. கருணைச்சுவையும் சிருங்காரமும் ஒன்றுக்கொன்று மாறுபட் டனவாயிருப்பினும், இரண்டும் மற்றொன்றற்கு அங்கம் ஆகலாம் என்பது பின்னர் விரிவாய்க் கூறப்படும்.

## இரண்டாங்கதிர்

[1]தொடர்க்கருத்து எங்கு [2]அறிவுடைப்பொருளதோ அவ்விடனே சுவைத்தொனிக்கும் சுவையணிக்கும் இடனென்றும், எங்கு [3]அறிவில்பொருளதோ அஃதே உவமை முதலியவற்றிற்கு இடனென்றும் கூறலாம் எனின், அற்றன்று; அவ்வாருயின் உவமை முதலியவற்றிற்கு இடன் குன்றும், அல்லது இடனே இல்லாமற்போம்; ஏனெனின் அறிவில்பொருளைப் பற்றியது தொடர்க்கருத்தாயின் அஃது எவ்வகையானும் அறிவுடைப்பொருட்செய்தியொடு கலத்தல் கூடும். அவ்வாறு அறிவுடைப்பொருட்செய்தியோடு கலந்திடினும் அறிவில் பொருளைப்பற்றிய இடம் சுவையணிக்கு இடனன்று எனின், சுவைக்களமாகிய பெருங்காவியங்கள் சுவையற்றன எனக் கூறியதாகும். உ-ம்.

1. "தவறிவந்த சொல்லைப் பலவிதமாய் உள்ளி, இவள் வெகுளியுடன் அலையாகிய புருவநெறித்தலோடும், கலக்கமுற்ற பறவைவரிசையாகிய இடையணிகலனேடும், பரபரப்பிஞல் நழுவிய ஆடைபோன்ற நுரையை இழுத்துக்கொண்டு குடிலமாய் ஆற்றுருவத்தோடு ஓடுகின்ருள் போலும்."[4]

2. "இம்மெல்லிய கொடி, கார்நீரான் நனைந்த தளிருடைமையால் கண்ணீரான் நனைந்த இதழுடையாள்போலும், உரிய காலமின்மை காரணமாகப் பூவாமையால் அணிகலன்களை நீக்கியவள்போலும், வண்டுகளின் ஒலியின்மையால் கவலையாற் பேசாதவள்போலும், காலில் நான் விழ வெகுளியளாய் என்னை உதைத்துப் பின்னர் அநுதாபங்கொண்டவள்போலும், தோன்றும்."[5]

1. காரிகையில் என்பேன் என்பதனுல் குறிக்கப்பட்ட பிறரது கொள்கையை ஈண்டுக் கூறி, மறுக்கின்றனர்.

2. அறிவுடைப்பொருள் = உயர்திணை.

3. அறிவில்பொருள் = அஃறிணை.

4–5 இச்செய்யுள்கள் விக்கிரமோர்வசீயநாடகத்தில் ஊர்வசி மறைந்திருந்தகாலத்து நதியையும் கொடியையும் பார்த்து புரூரவஸ் கூறியது. அம்மன்னருடைய மயலைக் குறிக்கும்.

3. "நண்ப, யமுனைக்கரையில் இரகசியமாய் இடைச்சிய ரும் இராதையும் என்னுடன் கேளி செய்த அக்கொடிவீடுகள் சுகமோ! அநங்கச்சேக்கைக்காகத் தளிர் மெல்லக் கொய்தலை நீக்கினமையான் அவையெல்லாம் இப்போது நீலநிற மிழந்து முற்றியிருக்கும் என நினைக்கின்றேன்."[1]

இச்செய்யுட்களுள் தொடரின் கருத்து அறிவில்பொரு ளதேனும், அவை அறிவுடைப்பொருளின் செய்தியோடு கலப் புண்டன. அவ்வாறாயின் எங்கு அறிவுடைப்பொருளின் செய்தியோடு கலப்புளதோ அங்குச் சுவையணி முதலியன எனின்; அற்றன்று, அவ்வாறு கொள்ளின் உவமை முதலிய அணிகட்கு இடன் குறையும், அல்லது இடனின்றே யாகும்; ஏனெனில் அறிவில்பொருளின் செய்தி இறுதியில் அறிவுடைப் பொருளின் செய்தியோடு கலந்து விபாவமாகாத இடனே இல்லை. ஆகலின், சுவை பாவம் முதலியன எங்கு அங்கமாக உள்ளனவோ, அங்குச் சுவையணி முதலியன ஆம். எங்குச் சுவையோ பாவமோ அங்கியாக உள்ளனவோ அங்கு அது பலவகையான் அழகுறச் செய்யப்பட்டுத் தொனி யாகும்.

அன்றியும்,

அங்கியாம் பொருளைச் சார்ந்தன குணமாம்
அங்கஞ் சார்ந்தன கடகா திபோலணி. (கா. 28)

எவை மிகச் சிறப்புற்ற சுவை முதலிய அங்கிகளைச் சார்ந்து இருக்கின்றனவோ, அவை மனிதரிடமுள்ள வீரம் முதலிய பண்புகள் போன்று குணம் எனப்படும். எவை வாச்சியம் வாசகம் இவற்றினைச் சார்ந்தனவோ, அவற்றைக் கடகாதிகள் பான்று அணியாகக் கருதல் வேண்டும்.[2]

1. இது கண்ணன் கூறிய செய்யுளாகும். சிலகாலம் அவர் அவ்விடத்தை விட்டிருப்பினும் அவருக்கு அவ்விடத்திலுள்ள ஆவல் மிகுந்திருக்கின்றது என்பது குறிப்புப்பொருளாகும்.

3. இவ்வாசிரியர் கூறியபடி சுவைத்தொனியும் சுவையணியும் வேறு என்றே கொள்ளினே குணம் எவ்வாறு குணியின் தர்மமோ அவ்வாறே சுவை முதலியவற்றிற்கு வியஞ்சகமாகிய வாச்சியப்பொருளின் தருமம் சுவையணி ஆகும் என்பது அறியப்படும்.

உவகை யேயுயர் மதுர குணத்தது
எவரையு மகிழ்விக் குஞ்சுவை யாகும்
தந்மயக் காவியஞ் சார்ந்து நின்றே
நன்கு நிலையுன் றிலங்குமா துரியம். (கா. 29.)

*சிருங்காரமே, மகிழ்விக்கு மாற்றலுடைமையான், ஏனைய சுவைகளினும் இனியது. அச்சுவையைத் தோற்றுவிக்கும் சொற்பொருள்களைக் காவியங் கொண்டமையான் மாதுரியம் என்ற குணம் காவியத்திற்கும் உரியதாகும். தொகைச் சொற்களை மிகுதியாகக் கொள்ளாது செவிக்கு மிக இனிமையாக இருக்குந் தன்மையே மாதுரியம் ஆகாதோ எனின், அற்றன்று.[1] அஃது ஓஜஸ் என்ற குணத்திற்கும் பொதுவாம்.*

பிரிவுச் சிருங்கா ரத்துங் கருணத்து
மாதுரியஞ் சிறப்புறு மாங்கறி ஞர்மனம்
ஈடு பட்டு மேன்மே லிளகுமால். (கா 30)

*விப்ரலம்பசிருங்காரம் கருணம் இவற்றிலோ மாதுரியமே மேன்மேல் சிறப்புற்றது,[2] இரசிகர்மனத்தை மிகக் கவர நிமித்தமாதலின்.*

காவியத் திரவுத்திர மாதி [3] சுவைகள்
[4] தீப்தியால் விசேடிக்கப் பட்டு விளங்கும்
அச்சுவை தோற்றுவிக் குஞ்சொற் பொருள்களைச்
சார்ந்து வோஜ ஸெனுங்குண நிலைபெறும். (கா. 31)

*இரவுத்திரம் முதலிய சுவைகள் மேலான மனோவேகத்தை உண்டுபண்ணுதலின், அவற்றையே இலக்கணையான் தீப்தி*

1. இது பாமஹரின் கொள்கை.

2. மாதுரியம் என்ற குணம் கருணத்திலும் இருப்பின், முன்னர்க் காரிகையில் உவகையே என்றவிடத்துள்ள ஏகாரம் எவ்வாறு பொருந்துமெனின், ஆங்கு ஏகாரத்தான் வேறு சுவை விலக்கப்படவில்லை என்றும், குணம் சிறப்பாகச் சுவையின் தர்மமென்றும் உபசாரத்தான் சொற்பொருள் கொண்ட காவியத்தின் தர்மமென்றும் அறிவிக்கப்படும் என்க.

3. ஆதி என்ற சொல் வீரம், அற்புதம் இவ்விரண்டினையுங்குறிக்கும்.

4. கேட்போன் மனத்துள் மலர்ச்சியையும், அகன்ற நோக்கினையும், வேகத்தையும் உண்டுபண்ணுந் தன்மை தீப்தியாம். அஃதும் ஓஜஸ்ஸும் உண்மையில் ஒருபொருட்கிளவியாம்.

எனச் சொல்வது முண்டு. அதனைக் காட்டுஞ் சொல்லாகிய நீண்ட தொகைச்சொற்களான் அமைந்த தொடரும் இருமடியாகுபெயரான் தீப்தி எனப்படும். உ-ம்.

"[1] தேவியே, விர்ர்ரெனச்சுற்றுகைப்பயமுறுத்தடியடிச்சிதறுடையிருதொடைதுரியோதனன் கிடக்க, சிறிதிறுகுவிரத்தச் சிவப்புறுகையால் வீமனே நின்குழலைக் கட்டும்."

நீண்ட தொகைச்சொற்களை வேண்டாது தெளிவுடைச் சொற்களாற் குறிக்கப்பட்டு இரவுத்திரம் முதலிய[2] சுவையை நோக்கி நிற்கும் பொருளும் தீப்தி எனப்படும். உ-ம்.

"பாண்டவர் தளத்துப் புயவலி செருக்கிப் படைதரித்
தவனெவ னெவனோ
சண்டுபாஞ் சால கோத்திர விருத்த ரிளஞ்சிசு
கருவெவ னெவனோ
ஆண்டந்தச் செயல்நே ரறிந்தவ னெவன்மா றுனவ
னெனக்கெவ னெவனோ
மூண்டவெஞ் சினத்தி னவரவர் தமக்கு முலகடும்
யமற்கும்யான் யமனே"[3]

1. இப்பொருட்கொண்ட செய்யுள் பட்டநாராயணர் இயற்றிய வேணிஸம்ஹாரத்தில் வீமன் திரௌபதியைப் பார்த்துக் கூறுவது. தேவியே என்ற சொல் திரௌபதியின் நற்பிறப்பையும் உயர்கணவரைக் கொண்டமையையும் முன்னர் நினைப்பூட்டி, பின்னர்த் துரியோதனன் முதலியோரால் அவைக்கண் இழுக்கப்பட்டு அவமதிக்கப்பட்டதை நினைப் பூட்டுதலாற் கோபத்திற்கே உத்தீபனவிபாவத்தைச் செய்வது காண்க நின் என்பது அவட்குச் செய்யப்பட்ட அவமானத்தை நினைப்பூட்டு கின்றது. சிறிதிறுகுவிரத்தம் என்பது துச்சாசனனையும் துரியோதனனை யும்கொன்ற சிறிது நேரத்தின் பின்னர்க் கட்டுவேன் என்பதைக் காட்டு கின்றது. இங்கு வீமன் குறிப்பது துச்சாசனனின் மார்பிலிருந்தும் துரியோதனனின் தொடையிலிருந்தும் எடுக்கப்பட்ட இரத்தம்.

2. "இரவுத்திரம் முதலிய" என்றவிடத்தில் முதலிய என்பது வீரம், அற்புதம் இவற்றைக் குறிக்கும்.

3. இச்செய்யுள் வேணிஸம்ஹாரத்தே துரோணர் கொலையுண்டதைக் கேட்ட அசுவத்தாமன் கூறுவது. முதலடிச் சிறப்பாக அருச்சுனனையும், அச்செயலைக்கண்டார் என்பது கர்ணனையும் குறித்தல் காண்க. இச்செய்யுளில் நீண்டதொகைச்சொற்களின்றித் தனிமொழி களின் பொருள்களாலே படிப்படியாகக் கோபம் மிகுகின்றதை உற்று நோக்குக.

இவ்விரண்டன்கண்ணும் ஓஜஸ் என்ற வழக்கு இருத்தலைக் காண்க.

காவியத் தெதுதான் சுவைஞர் மனத்துத்
தெளிவுறப் பதிந்து வியாபித்து நிற்கும்
தன்மை யோவது சுவைய னைத்தினும்
சொன்னிலை பொருணிலைப் பொதுவா யிருக்கும்
பிரசாத மென்னுங் குணமெனப் பகர்வர். (கா. 32)

சொல்லும் பொருளும் வியங்கியப்பொருளைக் குறித்தற்குத் தெளிவாயிருத்தலே பிரசாதம் ஆம். அது சுவையனைத்திற்கும், தொகைசெறிந்ததொடர் தொகையல்தொடர் முதலிய சொற்பொருணிலையனைத்திற்கும், பொதுவான குணம். அதனை வியங்கியப்பொருட்கே முக்கியமான குணமெனக் கருதல் வேண்டும்.[1]

அநித்திய மாக்கூ றியசொற் குற்றமா[2]
தியன காவியத் திற்சிருங் காரந்[3]
தொனியாம் போதே நீக்கல் வேண்டும்
அதனு லவ்வாறு கூறிய தென்க. (கா. 33)

1. சுவைஞர்மனமுருகுதல், தீப்தி, தெளிவு இவையாகிய சுவைநுகர்ச்சி முறையே சிறப்பாக மாதுரியம், ஓஜஸ், பிரசாதம் என்று கூறப்படும். உபசாரமாக அவை சுவைகளின் குணமெனவும், இருமடியுபசாரமாகத் தொடர்களின் குணமெனவுங் கூறப்படும். இக்கொள்கை ஆநந்தவர்த்தனர், அபிநவகுப்தர் இவ்விருபெரியாரால் நிலைநாட்டப்பட்டது.

2. சொற்குற்றமாதியன என்பது கடுஞ்சொல், சொற்குற்றம், பொருட்குற்றம் தொடர்க்குற்றம் என்பனவாம். கடுஞ்சொல் என்பது செவிக்கு இனிமையில்சொல்; சொற்குற்றம் என்பது அவையல் கிளவியை நினைப்பூட்டுந்தன்மை; பொருட்குற்றம் என்பது வெளிப்படையாய்க் கூறக்கூடாத பொருளைக் கூறுதல்; தொடர்க்குற்றம் என்பது முறையை மாற்றிக் கூறின் அவைக்குத் தகாத பொருளைத் தோற்றுவிப்பது. அவை அநித்தியமாகக் கூறப்பட்டன; ஏனெனில் சிருங்காரம் முதலிய சுவையின்கண் அவை குற்றமாகும்; பீபற்சம், ரௌத்திரம், நகை இச்சுவைகளின்கண் அவை குற்றமாகா.

3. இக்குற்றங்கள் சுவைக்கேட்டினை எங்கு விளைவிக்குமோ அச்சுவை எல்லாவற்றிற்கும் ஈண்டுள்ள சிருங்காரம் உபலக்கண மாகும் அவை வீரம், கருணம் முதலியன.

சொற்குற்றம் முதலியன அநித்தியமெனக் கூறப்பட்டன. சிருங்காரச்சுவை தொனியாம்போது அவற்றை நீக்கல் வேண்டும் என்ற நியதி யுளது; வாச்சியப்பொருளைக் குறிக்குமிடத்தும், சிருங்காரம் வியங்கியமாயினும் அது தொனியாகாதபோதும், ஏனைய சுவைகள் தொனியாயிருக்கும்போதும், அவற்றை நீக்கல் வேண்டும் என்ற நியதி இல்லை. இவ்வாறு கொள்ளாவிடின் அவற்றிற்கு அநித்தியத்தன்மையே வாராது. இவ்வாறு முறையில்தோற்றத்தொனியாகிய . கருதிவேறின்னோக்கும் வாச்சியத்தொனியின் தன்மை பொதுவாக உணர்த்தப்பட்டது.

[1] அதனுட் பிரிவு மதனங் கங்களின்
பிரிவுமோன் றேடொன்று புணர்க்கப் படினே
கணக்கிட வநந்த மாகும். (கா. 34)

கருதிவேறின்னோக்கும்வாச்சியத்தொனிக்கு ஆன்மாவாகக் கூறப்பட்டது, அங்கியாகச் சிறப்புற்று விளங்கும் வியங்கியப் பொருளாகும்.

அதன் உட்பிரிவுகள் சுவை, பாவம், அவற்றின்போலி அவற்றின்சமனம், அவைதம்முடைய விபாவம், அநுபாவம் வியபிசாரிபாவம் இவற்றுடன் கணக்கற்றன வாகும். அவை தமக்குப் பற்றுக்கோடாகிய தலைவன்தலைவியரது காலம் இடம் முதலியவற்றின் நிலைகளை நோக்கி எல்லையற்றன வாகும். இவற்றிற்கு அங்கமாகிய சொற்பொருளாற் றோற்றுவிக்கப்படும் அணிகள் பல. இவை ஒன்றுக்கொன்று இயைபுபடின் சுவைகளுள் ஏதேனும் ஒன்றின் உட்பிரிவே ஒருவராலும் கணக்கிட இயலாது; அவ்வாறிருக்க, எவ்லாவற்றினும் உட்பிரிவுகளைக் கணக்கிடுதல் இயலாதெனக் கூறவும் வேண்டுமோ? உதாரணமாக, அங்கியாகிய சிருங்காரம், சம்போகம்[2], விப்பிரலம்பம்[3] என இருவகைப்படும். சம்போகம் இருவர்க்கும் உண்டாகும் அன்பு நிறைந்த பார்வை, புணர்ச்சி, விளையாட்டு முதலாகப்

1. அதன் = கருதிவேறின்னோக்கும்வாச்சியத்தொனியின்.
2. சம்போகம் என்பது புணர்ச்சியைக் குறிக்கும்.
3. விப்பிரலம்பம் என்பது பிரிவைக் குறிக்கும்.

பலவகையது[1]; விப்பிரலம்பமும் ஆவல், பொருமை, பிரிவு, இருவரிலொருவர் ஊரிலின்மை முதலியவற்ருல்[2] உண்டாம். அவற்றுள் ஒவ்வொன்றற்கும் விபாவம், அநுபாவம், வியபிசாரி பாவம் முதலிய வேறுபாடுகள் உள. அவையும் இடம், காலம், காரணம்[3] இருப்புநிலை முதலியவற்ருல்[4] வேறுபட்டன. இவ்வாறு தன்னுட்பிரிவுகள் பல இருத்தலான், அதனை (சிருங்காரத்தை) முழுதுங் கணக்கிடுதல் இயலாது. அவற்றுடன் அங்கங்களுடைய வேறுபாடுகளைப் புணர்ப்பின், அவற்றைக் கணக்கிடமுடியா தெனக் கூறவும் வேண்டுமோ. அந்த அங்கப் பிரிவுகள் தனித்தனி அங்கியின் பிரிவுடனே புணர்த்தப்படின் மிகப்பலவே ஆகும்.

சிறிதே யுரைப்ப லதனுற் றெளிவுடைச்
சுவைஞரி னுணர்ச்சி சுடரைப் பெற்றே
எங்கு மியலுந் திண்ண மெனக. (கா. 35)

சிறிதே உரைத்தலால் தெளிவுற்ற சுவைஞர்க்கு[5] ஒரு சுவையைப்பற்றிய பற்பலவகைகளின் அறிவால் விளக்கமுற்ற உணர்ச்சி எங்குந் தோன்றும்.

1. இவற்றை ஆசிரியர் தொல்காப்பியனுர் களவியலிலும், மெய்ப்பாட்டியலில் "புகுமுகம் புரிதல்......" (சூ. 13) முதலிய ஐந்து சூத்திரங்களிலுங் கூறுவர்.

2. ஆசிரியர் தொல்காப்பியனுர் பாலையைப்பற்றிக் கூறுமிடமெல்லாம் இவற்றைக் காணலாம்.

3. காரணம் = ஆச்சிரயம் (லோசனம்)

4. முதலிய என்பது தலைவன் தலைவி முதலான பற்றுக்கோட்டினைக் குறிக்கும்.

5. சுவைஞர் என்பவர் நூல்களை அடிக்கடி படித்துச் சுவையை உணர்ந்து அச்சுவையை மெய்ம்மறந்து அனுபவிப்பவர் ஆவர். வடமொழியலங்கார நூல்களை இயற்றியோரின் கொள்கை கவிஞர் இரசிகராயும், இரசிகர் கவிஞராகவும் அமைதல் இன்றியமையாததாகும் என்பதே. இஃதே ஸரஸ்வதியின் தத்துவம் என்பர். இதற்கு உவமையாக அர்த்தநாரீச்வரரின் உருவத்தை நினைத்துக்கொள்ளலாம்.

ஆங்கு

சிருங்கார மங்கியா யிருக்க வவற்றின்
வகையெலா வற்றுளும் வளமார் கவிதன்
முயற்சியா லோரோவகை வநுப்பிரா சத்தினைத்
தோடர்ந்தமைப் பினது வியஞ்சக மாகாது. (கா. 36)

அங்கியாகிய சிருங்காரத்திற்குக் கூறப்பட்ட வகைகளெல்லா வற்றிலும் கவியின் முயற்சியால் தொடர்ந்து தொடுக்கப்பட்ட ஓரேவகையான அநுப்பிராசம் அதற்கு வியஞ்சகமாகாது. அங்கியாகிய எனக் கூறினமையான் அங்கமாகிய சிருங்காரத்தில் ஓரே வகைப்பட்ட அநுப்பிராசத்தைத் தொடுத்தல் அவரவர்விருப்பத்தைப் பொறுத்ததாம்.

சிருங்கா ரந்தோனி யாம்போது கவிதான்
ஒரேவகை யமக மிடைவிடா திணைத்தல்
ஆற்ற லிருப்பினும் வழுவே யாகும்
விசேடம் விப்பிர லம்பந் தனிலே. (கா. 37)

சிருங்காரத்தொனி கவியின் கருத்தாயிருக்க, அதனைக் குறித்து வாச்சியப்பொருளும், வாசகச்சொல்லும் நிற்க, யமகத்தையும் அதைப்போன்று பெருமுயற்சியால் இணைக்கப் படும் சக்கிரபந்தம், முரசுபந்தம் தெளிவில்சொற்சிலேடை இவற்றையுங் கவி தொடர்ந்து இணைத்தல் அவனுக்கு ஆற்ற லிருப்பினும் குறையே யாகும். இவ்வாறு கூறியதற்குக் கருத்து யாதெனின், காகதாலீயநியாயமாய்[1] எங்கேனும் ஓரிடத்து ஒருவகை யமகம் தானே வரின் அது குற்றமாகாது. சுவைக்கு அங்கமாக ஏனைய அணிகளை இணைப்பதுபோல் யமகத்தைத் தொடர்ச்சியாக இணைத்தல் கூடாது என்பதே என்க. விசேடம் விப்பிரலம்பந்தனிலே என்றதனால், அதன்

1. காகதாலீயநியாயம்: காக்கை வர அப்போது திடீரெனப் பனம்பழம் விழுதல் போல, ஒரு நிகழ்ச்சியின்கண் அதற்குச் சிறிதேனும் இயைபுபடாத மற்றோர் நிகழ்ச்சி திடீரென எதிர்பாராது நிகழ்தலைக் காகதாலீயம் என்பர்.

நுண்ணிய மென்மை குறிக்கப்படுகின்றது. அது தொனி யாம்போது யமகம் முதலியவற்றை அங்கமாக ஒருபோதும் இணைத்தல் தகாது.

ஈண்டு யுக்தி—சுவைக்கு அணி அங்கமாயிருத்தற்குப் பொதுவாயுள்ள பொருள் — கூறப்படும் :—

சுவையா லிழுப்புண்டு தனிமுயற் சியின்றி
எவ்வணி யிசைதல் கூடுமோ வவ்வணி
சுவைத்தொனி யணியா மெனக்கொளல் தகுமே.
(கா. 38)

சுவையால் இழுக்கப்பட்டே எவ்வணி இசைகின்றதோ, அஃது ஆங்கு எவ்வாறு இசைந்தது என வியக்கத்தக்கவாறும் இருக்கின்றதோ, அவ்வணியே முறையில்தோற்றத்தொனி யில் அணி யெனக் கருதப்படும். அஃதே சுவைக்கு அங்க மென்று சிறப்பாக உபசாரமின்றிக் கூறப்படும் உ-ம்

"கன்னத்திருந்த கொடிச்சுருள் கைத்தலத்தை வைத்தமை யான் சிதைந்தது ; அமிழ்தம்போன்றினிய இவ்விதழ்ச்சுவை யைப் பெருமூச்சு நன்கு பருகியது ; கண்ணீரும் அடிக்கடி கண்டத்திற் றங்கிப் பின்னர் தனத்திடத்தில் திளைத்து அசைந்தது; வெகுளி நீங்காதாளே! வெகுளி நினக்குக் காதலன், யாமோ அல்லோம்[1]"

அணி சுவைக்கு அங்கமாதல் என்பதின் குறைவற்ற இலக் கணம், தனிமுயற்சியின்றி இணைக்கப்படுகையே யாம். சுவைத் தொனி தோன்றுமாறு இசைக்க ஆர்வங்கொண்டு செய்யுளியற்

1. இச்செய்யுள் அமருககாவியத்திலுள்ளது. இது தலைவன் கூற்று. பொருமைகாரணமான விப்பிரலம்பசிருங்காரம் தொனி யாகும். கவியின் தனிமுயற்சியின்றியே வெகுளி நினக்குக் காதலன் என்றவிடத்து உருவகமும், யாமோ அல்லோம் என்றவிடத்து வியதிரே கமும், அமிழ்தம்போன்றினிய இதழ்ச்சுவையைப் பெருமூச்சு நன்கு பருகியது என்றவிடத்து சிலேடையும் வந்தமையானும், அவை தொனியை அனுபவித்தற்கு ஒரிடையூற்றினையுஞ் செய்யாமையானும் அவையே உண்மையாக அணியெனக் கூறுதற்கு வாய்ப்புடையன.

றத்தொடங்கிய கவியின் வாஸனையை மீறித் தனிமுயற்சியான் எவ்வணி இணைக்கப்படுமோ, அது சுவைத்தொனிக்கு அங்கமாகாது. யமகத்தைத் தொடர்ந்து புத்திபூர்வமாய்க் கூறின், அதற்குச் சொல்விசேடங்களைத் தேடும் தனிமுயற்சி உண்டு என்பதில் ஐயமில்லை. மற்ற அணிகளிலும் அம்முயற்சி அவ்வாறே உளதெனின்; அற்றன்று, தனிமுயற்சியாலும் எளிதிற் றொடுக்கக்கூடாத அணிகளும் சுவையான் மெய்ம் மறந்த பிரதிபையுள்ள [1] கவிக்கு 'நான்முன் நான்முன்' என்று போட்டி போட்டுக்கொண்டு தோன்றுகின்றன. உதாரண மாகக் காதம்பரியில் [2] காதம்பரியைப் பார்க்கும்போதும், ஸேதுபந்தத்தில் [3] மாயாவிராமனது தலையைக் கொய்தலைக் காணும் சீதையிடத்தும் பார்க்கலாம். இஃதே பொருத்த முடைத்து. ஏனெனின், சுவை வாச்சியவிசேடத்தாலும் வாசக விசேடத்தாலும் புலப்படுவதானும், அவ்வாசகங்களாற் கூறப் படும் வாச்சியவிசேடங்களே உருவகம் முதலிய அணிகள் ஆகின்றமையானும், அவ்வணிகள் தொனியின் புறத்த எனப்படா. யமகம் சக்கிரபந்தம் முதலியனவோ அதன் புறத்த என்பது திண்ணம். [4]எங்குச் சுவையொழுகும் யமகம் முதலியன இருக்கின்றனவோ, அங்கு அவையே அங்கியாகும், சுவை முதலியன அங்கமாகும். சுவைப்போலியிலோ யமகம் முதலியன அங்கமாக இருத்தல் மாறு ஆகா. அங்கியாகியச் சுவைத்தொனி இருக்குமிடத்தோ யமகம் முதலியன அங்க மாகா, அவற்றைத் தொடுப்பதில் கவிக்குத் தனிமுயற்சி இருத்தலின். இப்பொருளையே சுருக்கிக் கூறுஞ் செய்யுட்கள் வருமாறு :—

சுவையொழு கும்[5]பொரு ளணி யுடனேசில
இயையுமொ ரேயத் தினத்தாற் பெருங்கவிக்கு.

1. பிரதிபை = மேன்மேல் புதிதுபுதிதாய்ப் பொருளைத் தோற்று விக்கும் அறிவு.

2. காதம்பரி = பாணகவி வசனநடையில் எழுதிய நூல்.

3. ஸேதுபந்தம் = ப்ரவரஸேனன் பிராகிருதத்தில் எழுதிய நூல்.

4. காளிதாஸன் போன்ற மகாகவி இயற்றிய நூல்களின்கண்.

5. பொருள், அணியுடனே எனப் பிரிக்க.

யமகாதி தொடுத்தலி லோதனி முயற்சி
பேராற் றலிருப் பினும்பெருங் கவிக்கும்
தனிமுயற்சி யுண்மை யானவை தாமே
சுவைத்தொனிக் கங்க மாத லிலையே.

யமகாதி சுவைப்போலி யங்க மாதலைத்
தடுப்பா ரிலைசிருங் காரத் தொனியிலோ
ஒருபோ தும்மவை யங்க மாகா.

இனிச் சிருங்காரத்தொனி அங்கியாயிருக்க, அதற்கு வியஞ்சக மாகிய அணிவகைகள் கூறப்படும்.

' சிருங்கா ரத்தொனி சிறக்க வுருவகாதி
அணிகள் சமீக்கையோ[1] டிணைக்க வாங்கே
அணியெனுஞ் சொற்பொருளை யடையு மென்க.
(கா. 39)

உடலின்மேல் இடப்படும் அணி, ஆன்மாவிற்கு அணியெனக் கூறப்படுதல்போலச் சொற்பொருளணிகளும் அங்கியாகிய தொனிக்கு அழகுசெய்யு மெனப்படும். பொருளணிகள் இதுவரையில் அணிநூலியற்றியோரால் கூறப்பட்ட உருவகம் முதலியனவும், இனிச் சிலரால் கூறப்படுவனவுமாகிய அவற்றிற்கு எல்லையின்மையின், அவையெல்லாம் சமீக்கையுடன் இணைக்கப்படின் முறையில்தோற்றத்தொனிக்கு அழகு செய்யுஞ் சாதனமாகும்.

அவற்றை இணைப்பதற்கு வேண்டிய சமீக்கை[1] வருமாறு :

அங்க மாக வன்றி யொருபோதும்
அங்கியாக விணைத்த லாகா அன்றியும்
வேண்டக் கொண்டும் வேண்டின் விடுத்தும்
எல்லைமீக் கூறா திருத்தியு மவ்வாறு
அணியை யொருபோது கூறினுங் கவிஞன்
அங்கமது வெனநினைக் குமாறு முயன்று
கூறலு முருவக மாதி யணிவகை
அங்க மாகுஞ் சாதன மென்ப. (கா. 40, 41)

1. சமீக்கை = தக்க பொருத்தத்தை ஆய்கை.

சுவையிலே ஈடுபட்ட கவி அணியை அங்கமாகக் கூறு தற்கு உதாரணம்:—

தேன்செய்வண்டே! நீ அசைவுற்று [1]நடுக்குறு கடைக்கண்ணைப் பன்முறை தொடுகிறாய்; இரகசியங் கூறுபவன் போன்று அவளது செவிக்கருகே மெதுவாய் ஒலிக்கிறாய்; நின்னை ஓட்டுதற்குக் கையை அவள் அசைக்கும் போது இன்பச்சுவைக்கு நிதியாகிய இதழைச் சுவைக்கிறாய்; ஆகலின் நீயே பாக்கியசாலி; உண்மையை ஆய்ந்து யாம் அழிந்தோமே." [2]

ஈண்டு வண்டைப்பற்றிய தன்மைநவிற்சியணி சுவைத் தொனிக்குப் பொருந்தி அதற்கு அங்கமாயிருக்கின்றதே யன்றி சிறப்புற்ற அங்கியாயில்லை.

1. चलापाङ्गं दृष्टः என்பது பலர் கொண்ட பாடம்; चलापाङ्गां दृष्टिम् என்பது ஆநந்தவர்த்தனரும், அபிநவகுப்தரும் கொண்ட பாடம். அவர்தம்பாடத்தில் वेपथुमतीम् என்பது दृष्टिम् என்பதற்கு விசேடணம் ஆகும்.

2. இது காளிதாஸன் இயற்றிய சாகுந்தலத்தில் சகுந்தலையைப் பார்த்து துஷ்யந்தன் கூறுவது. இவளுடைய கடைக்கண் பார்வைக்கு இலக்கு ஆவேனோ? இவள் நங்கருத்தைக் குறிக்கும் இரகசியச்சொல்லை எப்போது கேட்பாள்? அவள் விரும்பாவிடினும் பலாத்காரமாய் எப்போது அவளை முத்தமிடுவேன் என்ற என்னுடைய மனோரச்சிய மெல்லாம், சிறிதேனும் முயற்சியின்றி வண்டே உன்னால் உண்மையாய் அனுபவிக்கப்பட்டன என்பது வியங்கியம். இங்குத் தன்மைநவிற்சி யணி (ஸ்வபாவோக்தி) அங்கமாதல் காண்க. ஈண்டு உருவகமும் வியதிரேகமும், சமாசோக்தியும் இருப்பினும் தன்மைநவிற்சியணி வெளிப்படையாகத் தோன்றலின் அவ்வாறு கூறப்பட்டதென்க.

சுவைத்தொனிக்குப் பொருந்தி நிற்பினும் அணி சில இடத்து அங்கியாய் நிற்றல் காண்க. உ-ம்.

எவர் தம் சக்கிரத்தின் அடியாகிய பேராணையான் இராகுவின் மனைவியருடைய புணர்ச்சியைச் சிறப்புறுமாலிங்கனமின்றி முத்தமே யுடையதாய்ச் செய்தனரோ ! [1]

ஈண்டுக் கவிக்குச் சுவைத்தொனியிலே நோக்கமிருந்தும் பரியாயோத்தமே சிறப்புற்று விளங்குகின்றது

அலங்காரத்தை அங்கியாக நினைக்காது அங்கமாக நினைப்பினும் தக்கவிடத்து மாத்திரம் அதனைக் கொண்டதற்கு உதாரணம் :—

வெளிப்பட்ட உற்கலிகையுடனும்,[2] வெண்மைநிறத்துடனும், தொடங்கிய சிரும்பையுடனும்[3] இடையீடற்ற சுவஸனத்தால்[4] தான் அசைவுற்று, மதனத்துடன்[5] இருக்கும் பெண் போன்ற கொடியை நோக்கித் திண்ணமாய்த் தேவியின் முகத்தை இப்போது வெகுளியுறச் செய்வல்.[6]

1. ஈண்டுத் திருமாலின் ஆற்றல் சிறப்பாகக் குறிக்கப்படுகின்றது. ஆயினும் அஃது அழகுற்று விளங்காது பரியாயோத்தமே அவ்வாறு விளங்குகின்றது ; பரியாயவணியின் இலக்கணம் முன்னர்க் கூறப்பட்டது காண்க. ஈண்டு இச்செய்யுளை என் ஆசிரியர் கூறுகின்றனர் எனின், பெரியோர் நூல்களில் எங்குஞ் சுவை சிறந்து அங்கியாக விளங்கினும், சிலவிடத்து அச்சுவை சிறவாது அணிகளே சிறந்து அங்கி ஆகின்றன என்பதைக் குறித்தற்கு என்க. அது குறை குறைதான் என்பது இந்நூலாசிரியர்கொள்கை.

2. உற்கலிகை = மொட்டு ; உடலிற்றோன்றும் விகாரம்.

3. சிரும்பை = மலர்கை ; காமத்தால் உண்டாகும் உடல்முறிவு.

4. சுவஸனம் = தென்றல் ; பெருமூச்சு.

5. மதனன் = ஒரு மரம் ; மன்மதன்.

6 இச்செய்யுள் ரத்னவளியில் நாயகன் கொடியைப் பார்த்துச் சொல்வது. ஈண்டு உற்கலிகை, நிறம், சுவஸனம், மதனன் என்றவிடத்துச் சிலேடையால், தொடக்கத்திலிருந்து " மதனத்துடனிருக்கும் " என்ற வரை உவமைச்சிலேடை உணர்த்தப்பட்டது. அது பின்னர், திண்ணமாய் என்ற சொல் முதலியவற்றாற் குறிக்கப்படும் பின் வரும் விப்பிரலம்பசிருங்காரத்தைச் சுவைஞன் அனுபவித்தற்கு வழி காட்டி யாயிற்று.

## தொனிவிளக்கு

வருணிக்கப்பட்ட அணி தக்க தருணத்தில் சுவைக்குப் பொருந்திய வேறு அணியைக் குறித்து விடப்பட்டதற்கு உதாரணம் :—

நீ புதிய தளிரான் [1]ரக்தன், யானும் தலைவியின் நற்குணங்களான்; நின்னைச் [2]சிலீமுகங்கள் அடையும், மன்மதன் வில்லினின்று விடுத்தன என்னையும் அடையும் அன்ப; [3]தலைவியின் தாளடி நின்னை மகிழ்விக்கும், என்னையும் அவ்வாறே; நம்மிருவர்க்கும் எல்லாம் ஒன்றுபட்டன; [4]அசோகனே, நான் மாத்திரம் பிரமனால் [5]ஸசோகனாகச் செய்யப்பட்டேன்.

தொடக்கத்திலிருந்து என்னையுமவ்வாறே என்ற இடம் வரை கூறப்பட்ட சிலேடை அசோகனே நான் மாத்திரம் பிரமனால் ஸசோகனாகச் செய்யப்பட்டேன் என்ற இடத்துள்ள வியதிரேகத்திற்காக விடப்பட்டமை விப்பிரலம்பச் சுவைக்கு அழகு ஊட்டுகின்றது. "ஈண்டுச் சிலேடை, வியதிரேகம் என்ற இரண்டு அணிகளின் சம்சிருட்டி இல்லை, இவற்றினிலக்கணங்களைக் கொண்ட நரசிங்கம் போன்று சங்கரவடிவமான சிலேடைவியதிரேகமென்ற வேறு அணியே உளது" எனின், அற்றன்று, அதனை வேறு வகையாக நிலைநாட்டியிருத்தலின். எங்குச் சிலேடைக்கு இடனான சொல்லிலேயே வேறுவகையாக வியதிரேகம் தோன்றுமோ அஃதே அதற்கு இடனாகும்.[6] ஈண்டுச் சொற்சிலேடைக்கு இடனா

1. ரக்தன் = சிவந்தவன்; அன்புள்ளவன்.

2. சிலீமுகம் = வண்டு; அம்பு.

3. அசோகு என்ற மரம் பூவாதபோது பெண்மணிகள் அதனைக் காலால் உதைக்க அது பூக்கும் என்பது மரபு.

4. அசோகன் என்பதற்கு வருத்தமில்லாதவன் என்பது பொருள்.

5. ஸசோகன் = வருத்தத்தோடிருப்பவன்.

6. ஸஹரி என்பது அதற்கு உதாரணமாகும்; அச்சொல் அவனே ஹரி என்றும் குதிரைகளையுடையவன் என்றும் பொருள்படுவது காண்க. ஹரி என்பதற்குத் திருமால், குதிரை என்ற பொருள்கள் உள. முன்பொருளைக் கொள்ளும்போது ஸ ஹரி: என இரண்டு தனிமொழிகளாகவும், பின் பொருளைக் கொள்ளும்போது தொகைமொழியாகவும் கொள்ளவேண்டும்.

யிருப்பது செய்யுளின் ஒரு பகுதி[1], வியதிரேகத்திற்கு இடனுயிருப்பது மற்ருெரு பகுதி[2]; இவ்வாறுள்ள இடங்களில் இரண்டு அணிகளின் இலக்கணத்தைக் கொண்ட வேறு அணி எனக் கொண்டால் சம்சிருட்டிக்கு[3] இடனே இல்லாமற் போம். சிலேடைமுகமாய்த் தோன்றும் உவமையான் வியதிரேகவணி பெறப்படுதலின் இது சம்சிருட்டிக்கு இடனின்றெனின்: அற்றன்று, வேறுவிதமாயும்[4] வியதிரேகமிருத்தலின். அதற்கு உதாரணம்:—

"மிருவேகத்தான் மலைகளையும் உடைக்கும் ஊழிக் காற்ருனும் அணையாது, பகலிலும் மிக்க வெளிச்சம் உற்று, உட்புறத்தின்கண் இருட்கரியின்றி, பதங்கத்திலிருந்து தோன்றி அணைக்கப்படாதே நின்று எல்லாத்தீவிலுள்ள தீபத்திற்குத் தீபமாயுள்ள ஞாயிற்றின் கதிராய ஒப்பற்ற வர்த்தி நும்மை மகிழ்வித்தல் வேண்டும்."

ஈண்டு உவமையைக் குறிக்குஞ் சொல்லின்றி வியதிரேகம் உணர்த்தப்பட்டது. இச்செய்யுளில்[5] சிலேடையான் மாத்திரம் அழகின்மையின், சிலேடை வியதிரேகத்திற்கு அங்கமாகி சிலேடைவியதிரேகமென்ற சங்கரவணி யாகுமே யன்றி, அஃது ஒரு தனி யணி யாகா தென்றுஞ் சொல்லுதற்கு இடனின்று; ஏனெனில் இவ்வாறு தக்க தருணத்தில் விடப்பட்டதற்கு ஆகும் உதாரணச்செய்யுள்களில் சிலேடையின்றியும் நன்கு வருணிக்கப்பட்ட உவமையாலும் அழகுறுதல் காணப்படுதலின். அதற்கு உதாரணம்:—

1. ரக்தன், சிலீமுகம் என்பன சொற்சிலேடைக்கு இடன்.

2. அசோகன், ஸசோகன் என்பன வியதிரேகத்திற்கு இடன்:

3. ஓரிடத்திலே இரண்டு அணிகள் இருப்பின், அங்கு சங்கரம் என்ற அணி; ஒரு செய்யுளிலே ஓரிடத்து ஓரணியும், வேறிடத்து மற்ருேரணியும் இருப்பின், ஆங்கு சம்சிருட்டி என்ற அணி.

4. உவமையைக் குறிக்குஞ் சொல்லின்றியும்.

5. நீ புதிய தளிரான்... முதலிய தக்க தருணத்தில் விடப்பட்டதற்கு உதாரணச்செய்யுள்களில்.

"கதறுகை இடியானும், கண்ணீர் மழைப்பெருக்கானும், அவட்பிரிவாலுற்ற துயர்க்கனல் இலங்குகின்ற மின்னலானும், என்னுள்ளத்துள்ள தலைவிமுகம் நின் உட்புறத்துள்ள மதியானும் ஒத்திருக்க, காரே, என் நண்பனே, ஏன் நீ என்னைக் கொளுத்தவே முயன்றிருக்கின்றாய்?"

சுவையிலே ஈடுபட்ட கவி இணைக்கத் தொடங்கிய அணியை முற்றிலும் இணைக்காது இருத்தற்கு உதாரணம்:—

"கோபத்தால் இளங்கொடிக்கைக்கயிற்றால்[1] இறுகக் கட்டி, மாலையில் தோழிகளின் முன்னர்ப் பள்ளியறைக்குத் தலைவனை அன்புமிகுதலைவி இழுத்துவந்து, இனி இவ்வாறு செய்யாதிருப்பாயா, இனி இவ்வாறு செய்யாதிருப்பாயா என்ற சொற்களைத் தளர்குரலாற் கூறி, அவனது குற்றத்தை நன்கு காட்ட, தன் குற்றத்தை மறைக்க வெண்ணிச் சிரிக்கு மன்பன் அழுகையுற்ற தலைவியால் அடிக்கவே படுகிறான்; பேறு பெற்றான் அவனே.[2]"

ஈண்டு உருவகம் தொடங்கப்பட்டு இறுதிவரை இணைக்கப் பட்டிலது.

சுவைமிகுதிக்காக முழுதும் ஓரணியை இணைக்கக் கவி விரும்பினும் ஆங்கு அதன் அங்கத்தன்மையைக் கவனத்துடன் பாதுகாத்தற்கு உதாரணம்:—

"சியாமைக்கொடிகளில் உடலையும், பயமுற்ற மான் கண்ணில் கண்பார்வையையும், மதியில் கன்னத்துவிளக்கத்தையும், மயிற்றோகையின்கண் கூந்தலையும், ஆற்றின் சிற்றலைகளின்கண் புருவவிலாஸங்களையும் என் முயற்சியால் ஒப்பிட்டுப்பார்க்கின்றேன். பயமுடையாளே! ஓரிடத்தே தொக்கிருக்கும் நினது ஒப்புமையை எங்கும் நான் கண்டிலன், இது என் பாவம்."[3]

1. கைக்கயிறு = உருவகம்.
2. இஃது அமருகத்திலுளது.
3. இது காளிதாஸனியற்றிய மேகஸந்தேசத்திலுளது.

இவ்வாறு மேற்கூறிய விதிகளை யொட்டி இணைத்த அணி கவிஞன் நுகர்ந்த சுவையைக் காட்டுதற்குக் காரண மாகும். அவ்விதிகளை மீறி நடப்பின் அது சுவையைக் கெடுத்தற்குக் காரண மாகு மென்பது திண்ணம். அவ்வாறு சுவையைக் கெடுக்கும் அணிகளைக்கொண்ட இலக்கியங்கள் பெருங்கவி களின் காவியங்களிற் பலவாகக் காணப்படுகின்றன. ஆயினும், ஆயிரக்கணக்கான சிறப்புறுசெய்யுட்களைப் பாடிச் சிறந்து விளங்குங் கவிஞருடைய குற்றத்தைக் கூறுதல் கூறுமவனுக்கே குற்ற மாகு மெனக் கருதி யான் ஒவ்வொன்றையுந் தனியாகப் பிரித்துக் காட்டினனல்லேன். ஆயினும், உருவகம் முதலிய அணிகள் சுவைத்தொனியில் எவ்வாறு இருத்தல்வேண்டு மென இலக்கணஞ் சிறிது காட்டப்பட்டதோ, அவ்விலக்கணத்தைக் கொண்டும், தானும் அதற்குரிய வேறு இலக்கணத்தைப்[1] புதிதாகக் கண்டும், அவற்றையொட்டி முறையில்தோற்றத் தொனிகொண்ட செய்யுட்களைக் கவனத்துடன் சிறந்த கவி இயற்றுவா னுயின், அஃதே அவனுக்குப் பெரிய ஆன்மலாபம் ஆகும்.

மணியொலி யொத்தே யதன்முறைத் தோன்றும்
தொனியும் சொற்பொருள் மூலமிர் வகைய. (கா. 42)

அதன் — கருதிவேறினைநோக்கும்வாச்சியத்தொனியின் — ஒன் றன்பின் ஒன்ருக வியங்கியம் தோன்றுவதால் ஙணஙண வென்னும் மணியொலியை ஒத்த உருவம் எதுவோ, அத்தொனி யும்[2] சத்தசத்திமூலம், அர்த்தசத்திமூலம் என இருவகைப் படும்.

சத்தசத்தியால் வேறுபொருள் தோன்றுகின்ற இடன் தொனியின்வகை எனக் கூறப்படின்,சிலேடைக்கு இடனில்லாது போம் எனின், இடனில்லாது போகா தென்பர் :—

1. இலக்கணம் = தருணத்தில் விட்டதைப் பின்னருந் தருணத் தில் கொள்ளுதல் முதலியன.

2. முறையில்தோற்றத்தொனியைத் தவிர்த்து, தொனியின் வகை தொடக்கத்திலிருந்து இரண்டிரண்டுவகையாக இருப்பது என்பது எச்சவும்மையின் பொருள்.

சொல்லாற் கூறு தாற்றலாற் குறிக்கவே
யாண்டே யிலங்கு மணிதா னஃது
சத்த சத்தி மூலத் தொனியாம். (கா. 43).

எக்காவியத்தில், அணியே (வஸ்துமாத்திரமன்று)[1] சப்த சக்தியினால் தோன்றுமோ, அக்காரணம்பற்றியே (சப்தசக்தியாற் குறிக்கப்படுதலாலே) அதுதான் சப்தசக்திமூலத் தொனிக்கு இடம் என்பது எனது கொள்கை. சத்தசத்தியால் இரண்டு வஸ்துக்களே தோன்றினாலோ, அது சிலேடைக்கு இடனாகும். சப்தசக்திமூலத்தொனிக்கு இடன் ஆகாது சிலேடைக்கே இடன் ஆனதற்கு உதாரணம் :—

" அழியுமனனில்பிறப்பினன் பலிகொன்றோனுடலையம்புகைசெய்தோன் தலைபுரளரவமலைந்தரவலயன் பூமலைபோற்றியோன் சசிமலைசிரன்கரன் அமரர் போற்றும் அந்தகரில்செய்வோன் ஆகிய எல்லாநேருமாதவன் காக்க. "[2]

1. அணிதான் சத்தசத்திமூலத்தொனி யாகும் வஸ்துமாத்திரம் ஆகாது என்பது ஆநந்தவர்த்தனர்கொள்கை.

2. இத்தொடர் திருமால் சிவபிரான் இவ்விருவர்தம் வாழ்த்து ஆகும். இருபொருளும் வருமாறு :—(திருமாலைக் குறிக்கும் முதற் பொருள்) :—அழியுமனன் = அழிபடும் அனத்தை (சகடாசுரனை) யுடையோன்; அனம் = சகடம்; இல்பிறப்பினன் = பிறப்பில்லாதவன்; பலிகொன்றோன் = பலியரசனைக் கொன்றோன்; உடலையம்புகை செய்தோன் = தன்னுடலை வளையலக்கையில்கொண்ட பெண்ணாகச் செய்தோன், (அம்பு = வளை) = தன்னை மோகினியாக்கியவன் ; தலைபுரள்ரவுமலைர்தரவலயன் = மதத்தால் தலைபுரண்ட காலியப் பாம்பை யடக்கியவனாகி ஒலியில் இலயத்தை உடையவன் ; பூமலை போற்றியோன் = பூமியையும் மலையையுந் தாங்கியவன்; சசிமலைசிரன் கரன் = சந்திரனை அலைக்கும் தலையாகிய ராகுவை அடக்கியவன்; அந்தகரில்செய்வோன் = அந்தகர் எனப் பெயர் கொண்டோர்க்குத் (துவாரகையில்) வீடுகளைச் செய்தோன்; எல்லாநேருமாதவன் = எல்லாவற்றையும் கொடுக்கும் இலக்குமிக்குக் கணவன். (சிவபிரானைக் குறிக்கும் இரண்டாம் பொருள்) :—அழியுமனனில்பிறப்பினன் = அழிக்கும் மன்மதனை யுடையவன் ; (மநஸிஜன் என்ற பெயர்பற்றி, மதனை

(சொல்லாற்றலால்) வேறணி தோன்றினும் (தொனியன்று) சிலேடையே 'எனப் பட்டோற்படர் கூறியிருத்தலின், சப்த சக்திமூலத்தொனிக்கு இடனின்று எனின்: அற்றன்று. அது பற்றியே இலக்கணத்தில் குறிக்க இலங்கும் என உளது. சொல்லாற்றலால் நேராக வேறு அணி வாச்சியமாகுமிடத்துச் சிலேடை வருமிடமெல்லாம் சிலேடைக்கே இடனாகும். வேறு அணி வாச்சியமாகாமல் சொல்லாற்றலான் வியங்கியமாகவே குறிக்கப்படு மிடமெல்லாம் தொனிக்கு இடனாகும்.

சொல்லாற்றலால் வாச்சியமாக அணி தோன்றுதற்கு உதாரணம் :—

சீர்மாலை[1] யின்றியுஞ் சீர்மாலை யாள்முலை
கண்டும் வியவாரே வர்.

[2]ஈண்டுச் சிருங்காரச்சுவைக்கு வியபிசாரியாகிய விஸ்மயம் என்ற பாவமும் விரோதவணியும் நேரே சொல்லாற்றலாற்

இங்ஙன் கூறியது), பலிகொண்டோனுடலையம்புகைசெய்தோன் = திருமாலுடலை அம்பாகக் கொண்டோன்; தலைபுரளரவுமலைந்தா வலயன் = கழுத்தில் சுற்றி அணியப்பட்ட பாம்பை ஆரமாகவும், வளையாகவும் அணிந்தோன்; (அரம் = ஆரம்); பூமலைபோற்றியோன் = சிறந்த மலையாகிய இமயத்தாற் போற்றப்பட்ட கங்கையை உடையவன்; சசிமலைசிரன் = திங்களை மலைந்த தலையையுடையவன், கரன் = ஹரன்; அந்தகரில்செய்வோன் = அந்தகாசுரனைக் கொன்றோன்; எல்லாநேருமாதவன் = எப்பொழுதும் உமைக்குக் கணவன்; (ஈண்டு எல்லாநேர் உமாதவன் எனப் பிரித்தல் வேண்டும்); (நேர் = நேரம்); (எல்லாநேர் = எல்லாவற்றையுந் தருகின்ற).

1. சீர்மாலை = சிறந்த மாலை; சீர்மையான தன்மை; ஈண்டு உம்மை விரோதவணியோடு சிலேடையணியையும் வாச்சியமாக்கின; அவ்வாறே ஏவர் வியவார் என்பது சிருங்காரவியபிசாரியாகிய வியப்பை வாச்சிய மாக்கும்.

2. விஸ்மயம் என்ற வியபிசாரிபாவம் வியத்தல் என்ற சொற்கு எவ்வாறு ஆற்றற்பொருளோ, அவ்வாறே இன்றியும் என்றவிடத்துள்ள உம்மைக்கு எதிர்மறை ஆற்றற்பொருளே ஆகும் எனக் காட்டுதற்கே ஈண்டு வியபிசாரியாகிய விஸ்மயத்தைப்பற்றிக் கூறினர்.

கூறப்பட, விரோதவணியை அழகுறச் செய்யும் சிலேடைக்கு இஃது இலக்காகும்; இது மணியொலியொத்த சப்தசக்தி மூலத்தொனிக்கு இலக்கு ஆகாது. ஆயினும் வாச்சியமாகிய சிலேடை விரோதம் இவற்றின் சங்கரத்தால் (கலவியணியால்) குறிக்கப்படும் முறையில்தோற்றத்தொனிக்கு இஃது இலக்காகும்.

சிலேடை வாச்சியமாய் இருத்தற்கு ஆநந்தவர்த்தனர் இயற்றிய செய்யுள் ஒன்று உதாரணமாகும். அதன்பொருள்:-

"உருக்குமணி பெருஞ்சிறப்புற்ற முழுவுடலளாயிருக்கத் திருமால் தான் சுதர்சனகரனுகவும், அங்கமெல்லாவற்றாலும் எளிதில் மூவுலகினையும் வென்றவளாயிருக்கத் தான் செந்தாமரைத் தாளான் எளிதில் வென்ற மூவுலத்தானுகவும், திங்கள்முகத்தளாயிருக்கத் தான் திங்கட்கண்ணனுகவும் இருத்தலால் தன்னுடலைக்காட்டிலும் சிறந்தாளாகத்[1] திருமால் போற்றுகின்ற அவள் நும்மைக் காக்க."

ஈண்டு வாச்சியமாகிய வியதிரேகவணிக்கு அழகு ஊட்டுஞ் சிலேடையும் வாச்சியமாகின்றது.

அதற்கே மற்றோர் உதாரணம் :—

"[2]மேகப்பாம்பினின்றும் வந்த விடம் மயக்கத்தினையும், உற்சாகமின்மையையும், சோம்பிய மனத்தினையும், உணர்ச்சி

1. தன்னுடலைக்காட்டிலும் சிறந்தாளாக என்றவிடத்து வியதிரேகவணி வாச்சியமாக இணைக்கப்பட்டது. சுதர்சனகரன் என்பதற்குச் சுதர்சனம் என்ற சக்கிரத்தைக் கையில் உடையன் என்பது பொருளாகும். அவ்வாறாயின் உருக்குமணி திருமாலுக்குச் சிறப்புற்றவள் எவ்வாறு ஆவாள் என்ற ஐயம் வரும்; அப்போது சுதர்சனகரன் என்பதற்கு அழகுபொருந்திய கையை மாத்திரம் உடையன் என்ற பொருளைக் கொள்ளல் வேண்டும். தடித்த எழுத்துக்கொண்ட அவ்விருவர் விசேடணங்களிலும் வியதிரேகவணியை நோக்குக.

2. மேகப்பாம்பு=மேகமாகிய பாம்பு. மேகத்தின்று வரும் விடம் என்றவிடத்து, விடம் என்ற சொல் நீரைக் குறித்த பின்னரும், பாம்பு என்ற சொற்காரணமாக நஞ்சினையுங் குறிக்கும். அவ்வாறு குறிக்காவிடின் தொடர்க்கு ஆற்றலாலுள்ள பொருள் முற்றுப்பெறாது.

யின்மையினையும், மூர்ச்சையினையும், கண்ணிருட்டலையும், மெய்த்தளர்ச்சியையும், *மரணத்தினையும், பிரிவுற்ற பெண்டிர்க்கு அவர்நம்மை மீறியே தரும் ''

மற்றோர் உதாரணம் :—

"யாருடைய தாளொத்த புசங்களாகிய மதமிகுயானைகள் அலைக்கப்படும் மானதச்செம்பொற்றாமரை வீசும் பரிமளத்தை உற்றனவாகித் தடையில்தானம் பெருக்குடையனவோ " [1]

ஈண்டு உருவகத்திற்கு அழகு ஊட்டுஞ் சிலேடை வாச்சியமாகவே தோன்றுகின்றது.

அச்சிலேடையணி வியங்கியமாயிருப்பினும்[2] தொடரிலுள்ள ஒரு சொல்லான் மற்றுங்[3] கூறப்படுமேயாயின், அதனைச் சப்தசக்திமூலத்தொனி எனக் கூறுதல் தகாது; ஆங்கு வக்கிரோக்தி முதலிய வாச்சியவணிகளே எனக் கூறல் தகும்.

உதாரணம் :—

"கேசவகோபராகத்தான் அலைபட்ட கண்ணால் ஒன்றையுங் கண்டேனல்லேன்; ஆகலானே வழுவினேன்; நாதனே

1. அலைக்கப்படும், வீசும், பரிமளம், தானம் என்ற சொற்கள் அரசனுடைய புசங்களைக் குறித்து முறையே துன்புறுத்தும், பரப்பும், ஒப்பில்புகழ், கொடை என்ற பொருளைக் குறித்தபின்னரும், மதமிகு யானைகள் என்ற சொற்காரணமாக அவை முறையே மிதித்தோடிக்கப் படும், பரவச்செய்யும், இனிய வாசனை, மதநீர் இவற்றைக் குறிக்கும். அவ்வாறு குறிக்காவிடின் தொடர்க்கு ஆற்றலாலுள்ள பொருள் முற்றுப் பெறாது.

2. காரிகையில் (43) குறிக்கவே என்ற விடத்து ஏ என்ற இடைச் சொல்லின் பொருள் இவ்வும்மை கொண்ட சொற்களாற் குறிக்கப்படுகின்றது. கேசவ... என்றவிடத்து இருபொருள் கொண்ட சொற்கள் இருப்பினும், பிரகரணம் முதலியவற்றால் ஒரு பொருளைக் குறிக்கவே, அபிதை ஆற்றல் கொண்ட மற்றொரு பொருளைக் குறிக்கும் ஆற்றலின்றிநிற்க, அப்பொருள் வியஞ்சனையால் அறியப்படுமோ என்ற எண்ணம் வர, சூசனையால் போன்ற சொற்களால் அவ்விரண்டாம் பொருளைக் கூறுவதில் அபிதைக்கே புத்துயிர் அளிக்கப்படுகின்றது.

பதிதையை ஏன் நீர் பற்றிலீர்; நீர் ஒருவரே மதனத்துயரால் தாக்கப்பட்டு மனமுடைந்த அபலர்க்கெல்லாம் சரணம்; இவ்வாறு கோபியால் கோட்டத்திற் சூசனையாய்க் கூறப்பட்ட அரியே நும்மை வெகுநாள் காக்க." [1]

இவ்வாறுள்ள இடன் எல்லாம் வாச்சியச்சிலேடைக்கு விஷயம் ஆகட்டும்.

வியஞ்சனவிருத்தியால் எங்கு ஓர் அணி சொற்றொடரின் ஆற்றலால் தோன்றுகின்றதோ, அவ்விடன் எல்லாம் தொனிக்கு விஷயம் ஆகும். அதற்கு உதாரணம் :—

" இவ்வேளையில் பூமாதயுகத்தினையும் தன்னிடங்கொண்டு முதுவேனில் எனும் பெயர்கொண்ட விரிமல்லிகை வெள்ளட்ட

1. இதற்குப் பொருள்கள் வருமாறு :—கேசவ = கேசவனே, கோபராகத்தான் = பசுக்களால் எழுப்பப்பட்ட புழுதியால், அலைபட்ட கண்ணால் ஒன்றையுங் கண்டேனல்லேன் ; ஆகலானே, வழுவினேன் = கால்தவறி வீழ்ந்தேன் ; நாதனே = கடவுளே, பதிதையை = வீழ்ந்தாளாகிய என்னை, ஏன், நீர், பற்றிலீர் = தூக்கவில்லை ; மதனத்துயரால் = (மனத்தைக்) கலக்கக்கூடிய துன்பத்தால் தாக்கப்பட்டு, மனம் உடைந்த அபலர்க்கு = வயது முதிர்ந்தோர் குழந்தைகள் பெண்டிர் இவர்கள் போன்ற ஆற்றலில்லாதார்க்கு, எல்லாம் நீர் ஒருவரே சரணம் ; இவ்வாறு, கோபியால், கோட்டத்தில் = மாட்டுக்கோட்டத்தில் சூசனையாய் = குறிப்பாய், கூறப்பட்ட, அரியே = திருமாலே, நும்மை வெகுநாள் காக்க. மற்றொரு பொருள் இதற்கே சிலேடையால் தோன்றினும் அது சூசனையாய் என்ற சொல்லாற் கூறப்பட்டுளது. அப்பொருள் வருமாறு :— கேசவகோப = கேசவனாகவும் கோபனாகவும் உள்ள திருமாலே, ராகத்தான் = அன்பினால், அலைபட்ட கண்ணால் = மறைக்கப்பட்ட கண்களால், ஒன்றையும் = ஒரு பொருளையும், (எவரையும்) கண்டேனல்லேன் ; ஆகலானே, வழுவினேன் = கற்பினின்றும் வீழ்ந்தேன் ; நாதனே = என்னைப் போற்றுந்தலைவ. பதிதையை = பதியாயிருக்குந்தன்மையை, ஏன், நீர், பற்றிலீர் = கொள்ளவில்லை ; நீர் ஒருவரே = நீரே ஒப்பற்றவர் ; மதனத்துயரால் = மன்மதத்துயரினால்; தாக்கப்பட்டு மனமுடைந்த, அபலர்க்கெல்லாம் = மெல்லியலார்க்கெல்லாம், சரணம் = பற்றுக்கோடு.

காசனுகிய மகாகாலன் பொலிவுற்றது.[1] ”

மற்ருேர் உதாரணம் :—

“உயர்ந்து நன்கிலங்குதாரமுடனிருந்து அகிலிற்கருமை யுற்ற பயோதரபாரம் சிறுமியின்கண் யாரைத்தான் விருப் புறச் செய்யாது” [2]

1. இஃது இருதுவருணனையாதலின் மலர்மல்லிகைவெள்ளட்ட காசன், மகாகாலன் என்பது சொல்லாற்றலால் (அபிதையால்) விரிமல்லிகையின் மலர்ச்சியை அழகுற்ற கடைகளில் உடையது பெரியகாலம் என்ற பொருளைக் கூறிநிற்கும். (வெள்ளட்டம் = வெண்மையான, கடைகளிலுள்ள ; விரிமல்லிகை = விரிந்த மல்லிகையின் ; காசம் = ஹாஸம், மலர்ச்சி); பின்னர் மலர்ந்த மல்லிகை போன்று வெளுத்த பெருஞ்சிரிப்புடையன் சிவபிரான் என்ற பொருளையுங் குறிக்க, பிறகு வியஞ்சனுவிருத்தியால், முதுவேனிற்காலம் சிவபிரான் என்ற இரண்டற்கு முள்ள ஒப்புமை தோன்றும். இத்தொடர், பட்டபாணன் எழுதிய ஹர்ஷசரித்திரத்திலுளது.

விரிமல்லிகைவெள்ளட்டகாசம் என்ற தொகையை விரிமல்லிகையாகிய வெள்ளட்டகாசம் என விரித்தல் தகாது. அவ்வாறு விரிப்பின், “மேகப்பாம்பினின்றும்......” என்ற செய்யுள் போல் வாச்சியச் சிலேடைக்கு இஃது இடனுய்விடும்.

2. பயோதரம் என்ற சொல் அபிஸ்தயால், மேகத்தைக் குறிக்கும். அதற் கேற்றவாறு உயர்ந்து, நன்கிலங்குதாரமுடன், அகலிற் கருமை என்பன உயர்விடத்திருந்து, நன்கு விளங்குகின்ற மழைத்தாரையுடன், அகில் போன்ற கருமை என்ற பொருளைக் குறிக்கும். பின்னர் அவை முறையே பெருமுலை, பெருத்து, நன்கு விளங்குகின்ற மாலையுடன், அகிற்பூச்சாற் கருமை, என்ற பொருளைக் குறிக்க, பின்னர் வியஞ்சனுவிருத்தியால் இரண்டிற்குமுள்ள ஒப்புமை தோன்றும். இச்செய்யுள் இருதுவின் வருணனை என்பது ரஸகங்காதரத்து நாகேசபட்டருரையால் விளங்கும்.

மற்ருேர் உதாரணம் :—

"[1] மக்களை எளிதிற் சுரக்கும்[2] நற்பயசான் வேண்டுங் காலத்து மகிழ்வித்து, முற்பகலில் திக்கெங்குஞ் சிதறிப் பிற்பகலில் சங்கரித்து, பெருந்துன்பமளிக்கும் பவக்கடலைக் கடத்தும் நாவாயாகவுள்ள ஞாயிற்றின் கோக்கள் தூய்மையுற்ற நுமக்கு அளவில்மகழ்ச்சியைத் தருக."

இவ்வுதாரணங்களில் சொல்லாற்றலால் இடத்திற்கியையில்லாத பொருள்கள் தோன்ற, தொடர் இயைபில்பொருளைக் கூறுங் குற்றமுடைத்தெனப் பிறர் நினையாதிருக்குமாறு இயைபில்பொருட்கும் இயைபுடைப்பொருட்கும் உவமானவுவமேயத் தன்மை கற்பித்தல்வேண்டும்; ஆகவே, ஈண்டுள்ள சிலேடையில் தோன்றும் அணி வாச்சியமன்று, வியங்கியமே யாம். அக்காரணம்பற்றியே சிலேடைக்கும் சப்தசக்திமூலத்தொனிக்கும்[3]

1. கோக்கள் என்பது முதலில் கிரணங்கள் என்ற பொருளை அபிதையாற் கூறும், ஞாயிற்றின் கோக்கள் என்றமையான். அதற்கேற்பப் பயசு, சங்கரித்து என்ற சொற்கள் நீர், இலயமடைந்து என்ற பொருளைத் தரும். பின்னர் கோக்கள், பயசு, சங்கரித்து என்ற சொற்கள் முறையே பசுக்கள், பால், ஓரிடத்து ஒருங்கு கூடி என்ற பொருளைத் தர, வியஞ்சனவிருத்தியால் இரண்டு பொருட்கும் ஒப்புமை தோன்றும். (ஞாயிற்றின்கிரணவெப்பமிகுதியால் மழைமிகுதி என்பதை நோக்குக.)

2. அக்லிஷ்ரஸுஷ்டி: என்பதற்குப் பிரதியாக ஆக்ருஷ்ரஸுஷ்டி: என்பதும் பாடம்.

3. சப்தசக்திமூலத்தொனியின் உதாரணங்களில் இருபொருள் இரண்டு அபிதையால் தோன்றும். அவற்றுள் இடத்திற்கியைபுடைப் பொருளைக் குறிக்கும் அபிதை மாத்திரம் நிற்க, இடத்திற்கியையில் பொருளைக் குறிக்கும் அபிதை இறக்கும். பின்னர், இருபொருட்கும் உண்டாம் ஒற்றுமை காரணமாக இரண்டாம் அபிதை உயிர்ப்பிக்கப்பட்டு இயைபில்பொருளைக் கூறும். அப்பொருள் வியஞ்சனவிருத்தியால் தோன்றுவதன்று. அவ் வியஞ்சனவிருத்தியால் தோன்றுவன ஒப்புமை, ஒன்றுபடுத்தல், மிகைப்படுத்தல், மறுத்துமறைத்தல், பகையாக்கல், முதலிய வியாபாரங்களே ஆகும்: இவைதாம் இரசிகரை மகிழ்விக்கும்.

இடன் வேறுகும். சப்தசக்திமூலத்தொனியில் வேறு அணிகளுந் தோன்றும். விரோதம் தொனியாகத் தோன்றுதற்கு உதாரணம் :—

ஹர்ஷசரிதத்தில் ஸ்தாண்வீச்வரம் என்ற பெயர்கொண்ட ஊரை வருணிக்குமிடத்துக் கவி கூறுவது :—

"எங்கே பெண்டிர் [1] மதமுடைமாதங்ககாமிகளாய் நல்லொழுக்கமுள்ளோரும்...... [2] இலாவணியமுடையராய் இனிய மொழி பேசுவோரும் (ஆக இருந்தனர்).[3]

இங்கு உம்மையால் நேரில் விரோதவணி உணர்த்தப்படாமையால், விரோதவணி வாச்சியமென்றோ, அதற்கு அழகூட்டுஞ் சிலேடை வாச்சியமென்றோ, கூற இயலாது. எங்கு வெளிப்படையாகச் சொல்லால் விரோதவணி கூறப்படுகின்றதோ ஆங்கே விரோதவணியோ சிலேடையோ வாச்சியமாகும், இதற்கு உதாரணம் ஹர்ஷசரித்திரத்தி லுளது. அஃதாவது-

"ஒன்றுக்கொன்று மாறுகிய பொருள்கள் ஓரிடத்தில் குவிந்தன போன்றிருந்தன; அஃதாவது நெருக்கமுள்வாலவிருளுடையதும் [4] விளங்குவதும்......"

விரோதவணி சப்தசக்திமூலத்தொனியாய்த் தோன்றுவதற்கு ஆநந்தவர்த்தனர் தாமே கூறிய உதாரணம் :—

"எல்லோர்க்குஞ் சரணமாய்த் தான் அக்ஷயன்; அதீசனுய்த் தீக்கு ஈசன்; அரியாய்க் கிருட்டினன்; சதுரான்

1. மதமுடைமாதங்ககாமிகள் = மதங்கொண்ட யானைகளைப்போல் நடப்பவர்; கள் குடித்தலால் மயக்கமுற்ற சண்டாளர்களைப் புணர்ந்தவர்.

2. இலாவணியமுடையர் = விளக்கும் டாலோடு கூடியவர்; உப்பின் தன்மையுடையர்.

3. கள் குடித்து மயக்கமுற்றுச் சண்டாளர்களைப் புணர்தலும் நல்லொழுக்கமுடைமையும் ஒன்றுக்கொன்று விரோதமாகும்; அவ்வாறே உப்பின் தன்மையும் இனிப்பும் ஒன்றுக்கொன்று விரோதமாகும்.

4. வாலவிருள் = பால இருள் = தொடக்கத்துள்ள இருள்; வாலவிருள் = வாலத்தில் (மயிர்முடியில்) உள்ள கருநிறம். ஒன்றுக்கொன்று பகையாக இருந்தன என்ற தொடர் ஈண்டு உவமைக்கு விரோதம் பொருளெனக் காட்டி விரோதத்தை வாச்சிய மாக்குகின்றது.

மாவாய்ச் செயலற்றவன் ; அரிமதனன் ஆய்ச் சக்கிரதரன் ; ஆகிய தேவனை வணங்குமின்." [1]

ஈண்டு விரோதவணி சப்தசக்திமூலத்தொனியாய்த் தோன்றுவது வெளிப்படை [2].

இவ்வாறு வியதிரேகவணியும் (வேற்றுமையணியும்) தோன்றுதற்கு உதாரணம் ஆநந்தவர்த்தனருடைய செய்யுள் ஒன்றுகும். அதன் பொருள் வருமாறு :—

" [3] இருளைப் போக்கிக் கத்தை விளக்குவனவும், நகோற்பாசிகளும், தாமரைத்திருவை வளர்ப்பனவும், தாமரையிலக்

1. அக்ஷயன் = அழிவில்லாதவன் ; வீடில்லாதவன். சரணம் = அடைக்கலம் ; வீடு ; அதீசன் = மேன்மையுற்ற ஈசன் ; தீக்கு ஈசனுகாதவன் = புத்தியில்லாதவன் ; தீ = (धी:) = புத்தி. அரி = பச்சைநிறமுடையன் ; திருமால். கிருட்டினன் = கருநிறமுடையன் ; திருமால். சதுரான்மா = சங்கருஷணன், வாசுதேவன், பிரத்துயும்னன், அநிருத்தன் என நால்வகைப்பட்டவன் ; பராக்கிரமமுள்ள ஆன்மாவையுடையோன். அரிமதனன் = பகைஞரைக் கொன்றவன் ; சக்கரத்தை உடைத்தவன். (அரி = அரங்களையுடையது = சக்கரம்.) ஈண்டு வீடில்லாதவன் எவ்வாறு வீடு ஆவான் ? புத்தியில்லாதவன் எவ்வாறு தீக்கு ஈசன் ஆவான் ? பச்சைநிறமுடையவன் எவ்வாறு கருநிறமுடையவன் ஆவான் ; பராக்கிரமமுடையன் எவ்வாறு செயலற்றவன் ஆவான் ? சக்கிரத்தை உடைத்தவன் எவ்வாறு சக்கரதரன் ஆவான் ? என்று விரோதம். இவ் விரோதத்தைக் குறிக்குஞ் சொல்லின்மையான் விரோதம் வியங்கியமாயிற்று.

2. மதமுடைமாதங்ககாமிகளாய் நல்லொழுக்கமுள்ளோரும் என்ற உதாரணத்தில் இறுதியிலுள்ள உம்மைகள் விரோதத்தையே குறிக்க இடந்தருமென நினைத்து உம்மையில்லாத இச்செய்யுளை ஆநந்தவர்த்தனர் கூறினார் என்க.

3. பாதங்கள் = கிரணங்கள், தாள்கள் ; செய்யுளை முதன் முதலிற் படிக்கும்போது முதல், மூன்று, ஐந்து ஆம் அடைமொழிகள் கிரணங்கட்கும், இரண்டு, நான்கு, ஆறு ஆம் அடைமொழிகள் தாள்கட்கும் பொருந்துவதாகத் தோன்றும். பின்னர் முதலாவது

கத்தை யொழிப்பனவும், தராதரத்தலைகளின்கண் விளங்கு வனவும், அமரர்தலைகளை ஆக்கிரமிப்பனவுமான தினபதியின் இருவகைப்பாதங்களும் நுமக்குத் திருவைத் தருக.''

சப்தசக்திமூலத்தொனியின் வேறுவகைகளும் இவ்வாறு உள. அவை இரசிகர்களால் தாமே அறியத்தக்கன. நூல் பெருகுமென் றஞ்சி ஈண்டு அவை விரித்துக் கூறப்பட்டில.

வாச்சியப் பொருளோ சொற்றொழி லின்றித்
தன்னாற்ற லானே வேறுபொருள் குறிப்பின்
அஃதே யருத்த சத்தி மூலத்தொனி (கா. 44.)

**உதாரணம் :—**

தேவமுனி இவ்வாறு கூறத் தமப்பனருகில் பார்வதி தலை குனிந்து பண்ணைத்தாமரையிதழை எண்ணி நின்றாள்.[1]

---

தாள்கட்கும், இரண்டு நான்கு ஆறுவன கிரணங்கட்கும் பொருந்து மெனத் தோன்றும். கூறவேனது நோக்கத்தை அனுசரித்து, கிரணங்களைக்காட்டிலும் தாள்களையோ தாள்களைக்காட்டிலும் கிரணங் களையோ மிகைப்படுத்தல் வியங்கியமாகும். இதற்கு மூலம் அடை மொழிகட்குத் தோன்றும் இருபொருள்களாகும்.

கிரணங்களை ஒட்டி இருள், கம், நகோற்பாசி, தாமரை, தாமரை யிலக்கத்தையொழிப்பன, தராதரம் என்பன முறையே இருட்டு, ஆகாயம், ஆகாயத்தில் விளங்காதன, தாமரைப்பூ, தாமரை என்று எண்ணைக்கொண்ட ஒளிவிடுபொருள்களைத் தோல்வியுறச் செய்வன, மலை என்ற பொருளைத்தரும். நகோற்பாசி என்பது नखोद्भासि என்பதன் தற்பவம். அதன் தொகை விரி — खे (ஆகாயத்தில்) उद्भासते (விளங்கு கின்றது) खोद्भासि ; न खोद्भासि = नखोद्भासि. (தராதரம் = மலை) (தரா தரன் = அரசன்).

தாள்களை ஒட்டி இருள், கம், நகோற்பாசிகள், தாமரையிலக்கத்தை யொழிப்பன அமரர்தலைகளை ஆக்கிரமிப்பன என்பன முறையே அஞ்ஞானம், இந்திரியம், நகத்தான் விளங்குவன, தாமரைப்பூவின் அழகை வெல்லுவன, தேவர்களை வெல்லுவன என்பன பொருளாகும்.

கிரணங்களையொட்டிக் கூறும்போது தாமரைத்திருவை வளர்ப்பன தாமரையிலக்கத்தை யொழிப்பன என்பன விரோதவணியையுங் காட்டும்.

1. இச்செய்யுள் காளிதாஸன் இயற்றிய குமாரஸம்பவத்தில் ஆறு வது சருக்கத்தி லுளது.

ஈண்டு "பண்ணைத்தாமரை யிதழை யெண்ணிநின்றாள்" என்றதன் சொற்பொருள் சிறப்பிலதாய்ச் சிருங்காரச் சுவைக்கு வியபிசாரியாகிய நாண மென்னும் வேறுபொருளைக் குறிக்கும். இது முறையில்தோற்றத்தொனிக்கு இடனாகலா மெனின்: அற்றன்று, சொல்லால் நேரிதாக விபாவம் அநுபாவம் வியபிசாரிபாவம் கூறப்பட, அவற்றிலிருந்து எங்கு விரைவில் சுவை முதலியவற்றிற்குத் தோற்றமோ, அஃதே அத்தொனிக்கு இடனாம். உதாரணமாகக் குமாரஸம்பவத்தில் வசந்தன் வருகை யில், வசந்தமலர்கொண்டு மலைமகள் வருகையிலிருந்து மன்மதன் அம்புவிடும்வரையில் சிவபிரான் மனவலியிழந்து செய்யுஞ் செய்கைவிசேடத்தின் வருணனை நேரே சொல்லாற் கூறப்பட்டுளது. ஈண்டோ நாணமாகிய வியபிசாரிபாவம்[1] வியங்கிய மாயிருத்தலானும் அதன்வழியாகவே சிருங்காரச்சுவை தோன்றுதலானும், இது வேறுதொனிக்கே[2] இடன் எனல்வேண்டும்.

வாச்சியப்பொருள், சொல்வியாபாரத்துடன் கூடி வேறு பொருட்கு வியஞ்சகமாக விருப்பின் அஃது இத்தொனிக்கு இடனாகாது. உ-ம்.

"மலர்ந்த கண்ணன் தன் கருத்தை வெளிப்படுத்தும் விடன் குறித்த வேளையை அறியுமனத்தனா யிருக்கின்றான் என அறிந்து குறிப்பறியுஞ் சிறுமி பண்ணைத்தாமரையை மூடினாள்."

ஈண்டு பண்ணைத்தாமரையை மூடினாள் என்பது மாலைக் காலத்திற்கு வியங்சகமாயிருப்பினும், அஃது முன்னருள்ள தொடரான் சொல்வியாபாரத்தால் தானே கூறப்பட்டது. ஆதலால்

1. ஈண்டு சிருங்காரச்சுவைக்கு வியபிசாரிபாவம் ஆகிய நாணமே குறிக்கப்படும் என்பது அதற்கு முன்னருள்ள பார்வதியின் தவத்தை, அவட்கும் சிவபிரானுக்கும் நேர்ந்த சொன்னிகழ்ச்சியோடு கூட்டிப் பார்க்கும்பொழுதே தோன்றும். இவ்வாறு இடையில் காலதாமதம் நோக்கிப் பாவத்தொனியாயினும், முறைத்தோற்றத்தொனிக்கே இடன் ஆகும்.

2. வேறுதொனி = முறைத்தோற்றத்தொனி.

சொற்பொரு ளாற்றலாற் குறிக்கப் பட்ட
வியங்கியப் பொருளை மற்றுங் கவியே
சொல்வகை யான்வெளிப் படையாய்க் கூறின்
தொனியின்[1] வேறு அணியெனல் வேண்டும். (கா. 45)

சொல்லாற்றலாலோ, பொருளாற்றலாலோ, சொல் பொருள் இவ்விரண்டன் ஆற்றலாலோ வியங்கியப்பொருள் குறிக்கப் படினும் அப்பொருள் கவியாலே எங்கு வெளிப்படையாய்க் கூறப்படுமோ, அங்கு அது முறைத்தோற்றத்தொனியினின்றும் வேறுபட்ட அணியெனப்படும். அன்றியும் முறையில்தோற்றத் தொனி அங்கு இருப்பின், அதற்கு இஃதோர் சிறந்த அணியாம்.

அவற்றுள், சொல்லாற்றலால் வியங்கியப்பொருள் குறிக்கப்பட, கவியின் வெளிப்படைச்சொல்லால் அது தொனியாகாது அணியாய் நிற்றற்கு உதாரணம்:—

[2] "குழந்தாய், விடாதன் அடையாய்; மேல்நோக்கும் வேக முடைக்காற்றைக் கொள்ளாய்; கம்பனமே நினக்குக் குரு, வலனழிக்குஞ் சிரும்பிதன் வேண்டாம்; இங்கே வா; என்று

1. தொனியின் = இதனை ஐந்தாம் வேற்றுமையாகவும், ஆறும் வேற்றுமையாகவும் கொள்ளலாம.

2. வாச்சியப்பொருள் வருமாறு:—குழந்தாய் விடாதன் (விஷாதம் = துன்பம்) அடையாய் = குழந்தையே வருத்தப்படாதே; மேல் நோக்கும் வேகமுடைக் காற்றைக் கொள்ளாய் = பெருமூச்சு விடாதே; நினக்குக் கம்பனமே குரு = உனக்கு உடலசைவு ஏன் மிகுதியாயிருக்கிறது? பலனழிக்கும் சிரும்பிதன் வேண்டாம் = உடலின் சக்தியைப்போக்கும் உடன்முறிவும் வேண்டாம; இங்கே வா; என = என்று கூறி; சுரரை நீக்குவித்து = தேவதைகளை நீக்குவித்து; பயத்தைப்போக்கும; வியாஜத்தான் = வியாஜமாக; கடலாசனால் இலக்குமியைக் கொடுக்கப்பெறும் திருமால்; நும் தீவினையை உங்களுடைய தீவினைப்பயன்களை; போக்க.

வியங்கியப்பொருள் வருமாறு—குழந்தாய்; விடாதன் = விடத்தைத் தின்னுஞ் சிவபிரானை; அடையாய் = மணவாய்; மேல் நோக்கும் =

பயத்தைப் போக்கும் வியாஜத்தான் சுரரை நீக்குவித்துக் கடலைக் கடந்தமையால் மயக்குற்ற இலக்குமியைக் கடலரசன் யாருக்குக் கொடுத்தனரோ, அவர் நும் தீவினையைப் போக்க.”

அவற்றுட் பொருளாற்றலான் வியங்கியப்பொருள் குறிக்கப்படக் கவியின் வெளிப்படைச்சொல்லால் அது தொனியாகாது அணியாதற்கு உதாரணம்:—

“வயது முதிர்ந்த வனையிங்கே வாண்டாற்
  றளர்ந்த பிதாவிங்கே
நயந்திற் பணிகள் முடித்துடல்சோர் பணிப்பெ
  ணிங்கே நாள்சிலவாய்
மயங்கி நாதற் பிரிந்துறையும் பாவி யிங்கே
  யெனப்பதிகற்கு
இயைந்து தருணஞ் சொலும்வ்யாஜத் திளையோள்
  தானு மியம்புவாள்.”[1]

மேலே ஊளம்புந்தன்மையுடைய தீயையும், = வேகமுடைக்காற்றும் = வேகத்தையுடைய காற்றையும்; கொள்ளாய் = மணவாய்; கம்பன் அம் எ = வருணனும் பிரும்மாவும்; நினக்கு குரு = உன்னுற் போற்றத் தகுந்த பெரியோர்; பலனழிக்குஞ் சிரும்பிதன் = வலாசுரனைக்கொன்ற கர்வங்கொண்ட இந்திரன்; வேண்டாம்:...

ஈண்டு சுரரை நீக்குவித்து என்ற தொடர் வியங்கியப்பொருளை வெளிப்படையாக்கியது.

1. ஈண்டு வியங்கியப்பொருள் நன்கு விளங்கும். வயதுமுதிர்ந்த, ஆண்டாற்றளர்ந்த, உடல்சோர் என்ற அடைமொழிகள் தாய், தந்தை, தாசி (வீட்டு வேலைக்காரி) இவர்கள் அயர்ந்து தூங்குவர், அவர்களைப் பற்றிக் கவலைப்படவேண்டாம் என்பதைத் தொனிப்பிக்கும். பாவி என்ற சொல் தான் புணர்ச்சியின்றி வருந்துகின்றமையைத் தொனிப்பிக்கும். நாள்சிலவாய் மயங்கி என்பது அவன் தற்போது திரும்பிவருவதற்கு இடனின்று என்பதைத் தொனிக்கும். நாதன் என்பது கணவனுக்குத் தன்னிடம் அன்பு இருக்கின்றதேயன்றி அவ்விடம் தனக்கு இல்லை என்பதைத் தொனிக்கும். வியங்கியம் முழுமையும் வ்யாஜத்து என்ற சொல்லாற் கூறப்பட்டமையான், இது தொனிக்கு இடனன்று.

## இரண்டாங்கதிர்

சொல்லாற்றல் பொருளாற்றல் இரண்டானும் வியங்கியப்பொருள் குறிக்கப்பட, கவியின் வெளிப்படைச்சொல்லான் அது தொனியாகாது அணியாதற்கு உதாரணம்:—

"கேசவ...[1] சூசனையாய்க் கூறப்பட்ட அரியே நும்மை வெகுநாள் காக்க". (பக். 64.)

சிறந்தோர் கூற்று லேற்றதுந் தானே
யுற்றது மிரண்டே வியஞ்சகப் பொருட்டு
அருத்த சக்தி மூலத் தொனியும். (கா. 46)

அருத்தசக்திமூலத்தொனியில் வியஞ்சகமாயிருக்கின்ற பொருளும் இருவகைப்படும். அவற்றுள் கவி அல்லது கவிகொண்டு கூறுவோன் இவருடைய சிறந்த கூற்றாலே நிலைபெற்றது முதலாவதாம்; தானே நிலைபெற்றது இரண்டாவதாம். கவியின் சிறந்த கூற்றால் நிலைபெற்றதற்கு உதாரணம்:—

"சிறுமிகளை இலக்காகக் கொண்ட நுதியுடையனவும் இளந்தளிரிதழ் கொண்டனவுமான தேமாவின் பூ முதலிய அம்புகளை வசந்தன் தன்னிடத்துச் சித்தமாகக் கொண்டிருப்பதன்றி அனங்கனுக்குக் கொடுக்கவில்லை."[2]

கவிகொண்டுகூறுவோன்கூற்றான் நிலைபெற்றதற்கு உதாரணம்:—

"இளமகளே! நின்னிதழ்சிவப்புறுகோவைப்பழத்தைச் சுவைக்க, இக்கிளிக்குஞ்சு எம்மலையில் எத்தனையாண்டு எப்பெயர்பெற்ற தவஞ் செய்ததோ."[3]

1. ஈண்டுச் சூசனையாய் என்றசொல் வியங்கியத்தை வெளிப்படையாக்கியது.

2. சிறுமிகளை இலக்காகப் பூ முதலியவற்றை வசந்தன் சித்தமாக்கினன் என்ற கூற்றால் மன்மதன் இளைஞரைத் துன்புறுத்துங் காலம் தொடங்கிற்று என்பது வியங்கியமாகும். தேமா தளிர்த்துப் பூக்கத் தொடங்கிற்று என்றே கூறியிருப்பின் அந்த வியங்கியப்பொருள் தோன்றாமை யறிக; அனங்கன் = மன்மதன்.

3. ஈண்டு 'சிவப்புறு கோவைப்பழத்தைக் கிளிக்குஞ்சு சுவைக்கின்றது" என்பதுமாத்திரம் கூறப்பட்டிருப்பின், அது வேறொரு பொருட்கு வியஞ்சகமாகாது. கவியினால் வருணிக்கப்பட்ட ஒரு இளைஞன் இவ்வாறு அழகாகக் கூறியதனாற்றான், அது அவனுக்குத் தலைவியிடமுள்ள காதலை விளக்குகின்றது.

மற்றோர் உதாரணம்:—

"ஆதரவுடன் யௌவனத்தாற் கைகொடுக்கப்படும் நின் முலைகள் மன்மதன்வரவினை ஏற்க எழுந்தனபோலும்."[1]

எது இயற்கையாகவே தோன்றி இடத்திற்குத் தக்கவாறு கூறப்படுமோ, அது தானே நிலைபெற்றதாகும். அதற்கு உதாரணம்: —

"தேவமுனி இவ்வாறு கூறத் தமப்பன் அருகில் பார்வதி தலைகுனிந்து பண்ணைத்தாமரையிதழை எண்ணி நின்றாள்."[2]

மற்றோர் உதாரணம்: —

"வேடன்மனைவி மயிற்றோகையைக் காதிற் செறித்துக் கர்வத்துடன் ஆய்ந்தெடுத்த முத்துமாலையை யணிந்த சபத்தினி களின் எதிரில் உலாவுகின்றாள்."[3]

பொருளி ஞற்றலா னெங்கு வேறணியும்
தோன்றுமோ வஃதுமணி பின்னொலி யொத்த
வியங்கிய முடைமுறைத் தோற்றத் தொனியின்
மற்றொரு வகையே யாகு மென்க. (கா 47)

1. "உன் யௌவனத்தால் முலைகள் கிளம்பின" என்பது மாத்திரம் கூறப்பட்டிருப்பின் அது வியஞ்சகமாகாது. மன்மதனுடைய அரசைக் கண்டெழும் முலைகளுக்கு வேலைக்காரன்போல் கைகொடுக்கும் யௌவனம் எனக் கூறும் இக்கூற்று அவளுடைய முலைகளைப்பார்த்தல் யாருக்குத்தான் காதலை உண்டாக்காது என்றபொருட்கு வியஞ்சகமாகும்.

2. இதற்கு உரை முன்னரே கூறியது காண்க. (பக். 63)

3. சபத்தினி=சக்களத்தி; இவள் மயிற்றோலையையும், சபத்தினிகள் முத்துமாலைகளையும் அணிந்தனர் என்றமையால் கணவன் இவளிடம் வைத்துள்ள பேரன்பால் யானையைக் கொல்லச் செல்லுதற்குத் தருணம் இல்லை என்றதைக் குறித்து, அவளுடைய இளமையையும் அழகையும் குறிக்கும். ஆய்ந்தெடுத்த என்றமையான் அவர்கள் முத்துக்களை ஆய்தற்கும் காலம் இருந்தது என்பதும், செறித்து என்றமையான் இவட்குத்தோகையை ஆய்தற்குக் காலமின்று என்பதையுங் குறிக்கும்.

கர்வத்துடன் என்றசொல் வியங்கியத்தை வெளியாக்காதா எனின், அற்றன்று, அஃது இளமையாலும் விவேகமின்மையாலும் வருதல் கூடுதலின்.

வாச்சியவணியைத் தவிர்த்துப் பொருளாற்றலால் வேறு அணி தோன்றின், அது மணியின் பின்னொலியொத்த வியங்கிய முடைய அருத்தசத்திமூலத்தொனியின் மற்றொரு வகையாகும். அவ்வாறுள்ளன மிகச்சிலவே எனின், அற்றன்று ;

வாச்சிய மாய வுருவக முதல
அணிகள் யாவும் வியங்கிய மாதல்
தகுமென மிகுதியா யுணர்த்தின ரன்றே. (கா. 48)

ஓரிடத்து வாச்சியமாக இருக்கும் உருவகமாதிய அணிகள் வேறிடத்து வியங்கியமாக இருத்தலைப் பல்வகையாக உணர்த்தினர் பட்டோற்படர் முதலியோர். ஐயவணி முதலிய அணிகள் வாச்சியமாயிருக்க உவமை, உருவகம், அதிசயோக்தி முதலியன வியங்கியமாயிருத்தல் நன்கு உணர்த்தப்பட்டமையான், ஓரணி வாச்சியமாகவும் மற்றோரணி வியங்கியமாகவும் இருக்கும் என்பதைக் காட்ட முயறல்வேண்டாம். ஆயினும், இவ்வளவுதான் ஈண்டு நம்மாற் கூறப்படுவது :—

ஓரணி வாச்சியமா யிருக்க வாங்கு
மற்றோ ரணிவியங் கியமாய்த் தோன்றினும்
வாச்சியம் வியங்கிய மதற்கே
அங்கமாய் நில்லா திருப்பி னஃது
தொனிக்கு விடய மாகா தென்க. (கா. 49)

வேறு அணி வாச்சியமாயிருக்க மற்ற அணிகள் தோன்றினும், எங்கு வாச்சியவணியின் அழகு வியங்கியவணியைத் தோற்றுவித்தலில் ஈடுபடுதற்காகவே தான் விளக்கம்பெறவில்லையோ, அங்குத் தொனி இல்லை என்க. ஆகையால், தீபகம் முதலிய அணிகளில் உவமை வியங்கியமாகத் தோன்றினும், ஆங்குள்ள அழகு தீவகம் உவமையைத் தோற்றுவிக்க ஈடுபட்ட காரணம் பற்றி எனக் கூற இயலாமையால், ஆங்கு உவமைத்தொனி என்ற வழக்கில்லை, தீவகவணி என்ற வழக்கே யாம்.

"சந்திர கிரணத்தால் இரவும், தாமரையான் ஓடையும், பூங்கொத்தாற் கொடியும், அன்னங்களால் சரற்காலத்தினழகும், நன்மாந்தரான் காவியகதையும் சிறப்புற்று விளங்கும்."

என்பது போன்றவற்றில் உவமை வியங்கியமாகத் தோன்றினும் அழகு, வாச்சியவணிமூலமேயன்றி, வியங்கியத்தில் வாச்சியம் ஈடுபட்ட காரணத்தான் அன்று. ஆதலின், இது போன்றவற்றில் வாச்சியவணியைக் கொண்டே பெயர்வழங்குதல் தகும். வியங்கியப்பொருளில் ஈடுபடுதல்பற்றியே எங்கு வாச்சியப்பொருள் அழகுறுமோ, ஆங்கு வியங்கியவணியைக் கொண்டு பெயரிடுதலே தகும். அதற்கு உதாரணம்:—

"நீயிர் வர இக்கடல் நடுங்குவது 'இலக்குமியை அடைந்த இவர் மறுபடியும் என்னைக் கடைந்து ஏன் துன்புறுத்த வருகின்றார்? சோம்பலின்றி ஊக்கங்கொண்ட மனமுடைய இவர் முன்போல் என்னிடம் உறங்க வருவார் என யான் நினையேன். எல்லாத்தீவின் அரசர்களாலும் போற்றப்படும் இவர் மறுபடியும் அணையை ஏன் போட வேண்டும்,' என இவ்வாறு நினைத்தோ எனத் தோன்றுகின்றது."[1]

மற்றோர் உதாரணம் ஆநந்தவர்த்தனரே இயற்றியது:—

"அசைவுறுநீள்கண்ணாய்! நின் இனிய முகம் இத்திசையின் கண் இலாவண்யகாந்தியை மிகச் சொரியினும், கடல் சிறிதும் அசைவுறவில்லை யெனின், அது சலராசி எனவே வெளியாகின்றதென நினைக்கின்றேன்."[2]

1. ஓர் அரசன் கடற்கரைக்கு வர, அப்போது பூர்ணசந்திரனது உதயம் அவனது தானை கடலிற்குளித்தமை முதலிய காரணத்தால் அக்கடல் பொங்க, அது நடுங்குவதாகக் கொண்டு அப்போது ஒரு கவி அரசனைப் பார்த்து இவ்வாறு கூறுகின்றான். ஈண்டு ஐயவணி தற்குறிப்பேற்றம் என்ற இரண்டன் சங்கரம் வாச்சியவணியாகும். அவ்வரசன் திருமால் என உருவகவணி வியங்கியமாகும், உருவகம் வாச்சியவணிக்கு அங்கமெனக் கூறல் தகாது; ஏனெனில், இலக்குமியை அடையாதவன் என்னைக் கடையலாம்; உலகெல்லாம் வெல்ல ஆசைகொண்டவன் என்னிடம் அணை கட்டலாம் என்ற இவ்வாறுள்ள சந்தேகம் உண்டாகக் கூடுமாகையால் வியங்கியமான உருவகமின்றியே சந்தேகவணி தோன்றாது எனக் கொள்ளல்வேண்டும் என்ற நியதி இல்லை.

2. சலராசி = சலத்தொகுதியாகிய கடல்; சடராசி = அறிவீனத் தொகுதி; ஈண்டு நின்முகம் திங்கள் என்ற உருவகங் குறிப்பாற் றோன்றுகின்றது. சிலேடை வாச்சியாலங்காரம்.

இவ்வாறுள்ள இடங்களில் உருவகம் அநுரணனக்குறிப் பாகத்தோன்றிக் காவியத்தை அழகுறச் செய்தலின், இவை உருவகத்தொனி யெனல் தக்கதாகும்.

உவமைத்தொனிக்கு உதாரணம் :—

"வீரர்கண் சிந்தூரமிட்ட பகைவர்யானையின் மத்தகத்தில் எவ்வாறு மகிழ்வுறுமோ, அவ்வாறு சந்தனக்குழம்பணிந்த மனைவியரின் முலையினிடத்து மகிழ்வுறுது."[1]

ஆநந்தவர்த்தனருடைய விஷமபாணலீலையில் மன்மதன் அசுரரை வெல்லுஞ் சந்தருப்பத்தில் உளது மற்றோர் உதாரணம் :—

"இலக்குமியோடு பிறந்த இரத்தினங்களைக் கவர்தலில் ஈடுபட்ட அசுரர்களின் மனம் கோவைக்கனியை யொத்த மனைவியரின் இதழின்கண் மன்மதனுற் செலுத்தப்பட்டது."[2]

ஆக்ஷேபத்தொனிக்கு உதாரணம் :—

"கடலை நீர்க்குடத்தால் அளக்க வல்லானே அயக்கிரீவனுடைய[3] குணங்களனைத்தையும் வாயாற்சொல்ல வல்லான் ஆவன்."

ஈண்டு வாச்சியமாகிய அதிசயோக்தியணி, அயக்கிரீவனுடைய குணங்கள் அளவிட்டு வருணிக்கமுடியா என்ற சிறப்புற்ற விசேடத்தைக்கொண்ட ஆக்ஷேபவணித்தொனிக்கு வியஞ்சகமாகும்.

1. மனைவியரின் முலைக்கண் எவ்வாறு வீரர்கண் மகிழ்வுறுமோ அதைக்காட்டிலும் மிகப் பகைவர் யானையின் மத்தகத்தைக் கண்டு மகிழ்வுறும் என்ற வேற்றுமையணி வாச்சியாலங்காரம். முலை யானையின் கும்பத்தலத்தை ஒத்திருக்கின்றன என்பது உவமை. யானையின் கும்பத்தலத்தைப் பார்க்கும்போது மனைவியர் முலையின் ஞாபகம் வரினும் அதனை மதியாது அவ்யானைகளை வீரர் கொல்கின்றனர் என்பதனால் வீரச்சுவை அழகு பெறுகின்றது.

2. மனைவியரிதழ் இரத்தினங்களனைத்தின் சாரத்தையும் ஒத்தன என்ற உவமை தொனியாகும். அதிசயோக்தி வாச்சியவணி யாகலாம்.

3. அயக்கிரீவன் = हयग्रीवः

அருத்தாந்தரஸங்கிரமிதவாச்சியத்தொனி சப்தசக்திமூலம் அருத்த சக்திமூலம் என இருவகைப்படும். அவற்றுள் முன்னதற்கு உதாரணம் :—

"பயன் ஊழையொட்டியிருத்தலின் யாம் என்ன செய்யலாம்? அவ்வளவே கூறல் தகும். சிவந்த அசோகின் தளிர்கள் வேறோர் தளிர்க்கும் ஒப்பாகா." [1]

ஈண்டு, தொனி ஒரு சொல்லாற் குறிக்கப்படினும் தொடர்க்கு மற்றொரு பொருளில் கருத்து இருத்தலால் மாறுபாடு இன்று [2].

இரண்டாவதற்கு உதாரணம் :—

"மனத்துள் அடக்கிய கோபத்துடனே சினங்காட்டா முகமுடைய என்னையும் மகிழ்விக்கும் பேரறிவா! தவறுடைய நின்கண்ணும் வெகுளுதல் அரிது."

நீ தவறுடையனாயினும் எளிதில் எனது வெகுளியை அகல்விக்கலாம் என உன்னுடைய பேரறிவால் நினைப்பினும், நீ அதை அடையவில்லை என்பது வாச்சியப்பொருள். அது [3] மற்றொரு பொருட்கு வியஞ்சகமாகின்றது.

1. ஈண்டு பயன் என்ற சொல்லில் தொனி உளது; அசோகத்திற்குத் தேமாமரத்திற்குப்போன்று பழம் இல்லை, தளிர் மிகச் சிறந்தன என்பது வாச்சியப்பொருள். பயன் என்ற சொல்லின் ஆற்றலால் உலகத்தையெல்லாம் வெல்லத் துணைகளை ஒருவன் கொள்ளினும் வெற்றி முதலிய பயனை யடைதல் ஊழையொட்டி நடக்கும் என்ற பொருள் குறிக்கப்படும்.

2. ஓர் அரசனது சிறப்பு ஈண்டுக் குறிப்பால் தோன்றுகிறது. ஆகலின் தொடர்க்கு அப்பிரஸ்துதப்பிரசம்ஸை வியங்கியமாகும். ஆயினும் அத்தொடரிலுள்ள பயன் என்ற சொல்லால் தோன்றும் அருத்தாந்தரநியாசத்தொனியிலே இரசிகர் மனம் ஈடுபடுதலான் அதற்கே அது உதாரணமாகக் கூறப்பட்டது.

3. பேரறிவையுடைய நீ உன் குற்றத்தை மறைக்கப் பலவகையாய்ப் பேசி என்னை மகிழ்விக்க முயல்கின்றாய் என்ற விசேடப்பொருள் வாச்சியம்; உலகில் தூர்த்தர் தம் குற்றத்தை மறைக்க இவ்வாறு

வியதிரேகத்தொனியும் இருவகையாக உளது. முன்னதற்கு உதாரணம் முன்னர்க்[1] கூறப்பட்டது.

இரண்டாவதற்கு உதாரணம் :—

"காட்டில் இலையற்றுக் குறள்வடிவாயுள்ள மரமாய் யான் பிறந்திருக்கலாம்; இம்மானுடவுலகில் கொடையில் மனம் ஈடுபட்டு, வறுமையுற்றுப் பிறக்க வேண்டா".

ஈண்டு, கொடையில்வறுமையுறுமனிதப்பிறப்பின் இகழ்ச்சியும், இலையில்குறண்மரப்பிறப்பின் சிறப்பும் நேரே வாச்சியமாகும். உவமானஉவமேயமுகமாக அவ்வாறுள்ள மரத்தினும் அவ்வாறுள்ள மனிதன் மிகவும் இரங்கத்தக்கான் என்பதே சிறந்த வியங்கியமாக விளங்குகின்றது.

உற்பிரேக்ஷைத்தொனிக்கு உதாரணம் :—

"சந்தனமரத்திற் சுற்றிய பாம்பின் மூச்சுக்காற்றால் மயக்குற்ற மலயமாருதம் (தென்றல்) வசந்தகாலத்தில் பதிகர்களை மயக்குறச் செய்கின்றது."[2]

ஈண்டு வசந்தகாலத்தில் மலயத்தினின்று வருங்காற்று வழிப்போக்கர்களை மயங்கச் செய்வது காதல்துயரை உண்டாக்குவதனால் ஆம். அது சந்தனமரங்களைச் சுற்றியிருக்கும் பாம்புகளின் மூச்சுக்காற்றால் உண்டாம் என உற்பிரேக்ஷிக்கப்பட்டது; அந்த உற்பிரேக்ஷை சொல்வகையான் கூறப்படாமையின், தொடர்ப்பொருளின் ஆற்றலால் முறைத்தோற்றத் தொனியாக விளங்குகின்றது. ஈண்டு போல் என்றாற்

முயல்கின்றார் என்ற சாமான்யப்பொருள் வியங்கியம். ஆகலின், இது அருத்தாந்தரநியாசத்தொனி ஆகும் இதைத் தோற்றுவிக்கும் சொல் பேரறிவா என்பது. இவ்வகையாய் மறைத்துவிட்டோம் என அகங்காரங்கொள்ளாதே என்ற குறிப்பு, தலைவியின் ஊடலுக்குத் துணை ஆகும்.

1. நீ புதிய தளிரான் ரக்தன் (பக்: 56); இருளைப்போக்கி... (பக். 68).

2. மாருதம் = காற்று ; பதிகர் = வழிப்போக்கர்.

போன்ற சொற்களின்மையால் செய்யுள் சிறப்பிலது எனக் கூறல் இயலாது, அப்பொருள் குறிக்கப்படுகின்றமையானும், அவ்வாறுள்ள சொற்களில்லாது வேறு இடங்களிலும் அவற்றின் பொருள் புலப்படுதலானும்.

அதற்கோர் உதாரணம் :—

"பொறாமையால் கலக்கமுற்ற நின்முகத்தோடும் இப்போது ஒப்புமை யடையக் கருதிப் பூர்ணிமாசந்திரன் தன்னுடலில் அடங்கவில்லையோ"[1]

[2] மற்றோர் உதாரணம் :—

"மான் அச்சமுற்று இல்லின் அருகில் நுழையும்போது வில்லிகளான எவராலும் அம்பிற்கு இலக்காகச் செய்யப்படாவிடினும், பெண்டிரின் காதுவரை நீண்ட கண்களாகிய அம்புகளால் போக்கப்பட்ட பார்வைச்சிறப்பை உடையதாய் ஓரிடத்தும் நில்லாது ஓடுகின்றது"[3]

இவ்வாறான இடத்துச் செய்யுள் பொருத்த மற்றதேயெனின் சொற்பொருள்களின் கருத்தை வழக்கு நோக்கியேயறிதல்வேண்டும் என்க.

சிலேடைத்தொனிக்கு உதாரணம் :—

"வனப்பமைந்த காரணத்தான் பதாகையைப் பெற்று விவிக்தமாயிருத்தலின் காமத்தை மிகப் பெருக்கி, வளைவலிகத்

1. பூர்ணிமையிலுள்ள மதி தன்னொளியை வெளியில் பரப்புதல் இயற்கையாயினும் அது சிறந்த வகையால், உற்பிரேட்சிக்கப்பட்டது. தன்னுடலில் அடங்கவில்லையோ = தன்னுடலில் அடங்காது பத்துத் திசையும் பூரிக்கின்றதோ.

2. மற்றோர் உதாரணம் கூறுதற்குக் காரணம் யாதெனின், அடங்கவில்லையோ என்றவிடத்து ஓகாரம் ஒருவாறு உற்பிரேக்ஷையைக் குறிக்கலாம் எனச் சிலர் ஐயுறலாம் என்பதே.

3. இயற்கையான் மான் ஓரிடத்தும் நில்லாமலிருப்பினும், அது தன் கண்ணின் சிறப்பைப் பெண்டிர் போக்கினமையான் அவ்வாறு ஓடிற்று என உற்பிரேக்ஷிக்கப்பட்டது. ஈண்டு உற்பிரேக்ஷைத்தொனியாகும்; இப்பொருள்கொண்ட செய்யுள் சிசுபாலவதம் ஐந்தாம் சருக்கத்தில் 26 ஆவது.

துடனிருக்கும் மேன்மாடத்தின்கண் வதுக்களொடு சமமெங்கும் சென்றனர் இளைஞர்."[1]

ஈண்டு மகளிருடன் மேன்மாடத்து இளைஞர் சென்றனர் என்ற தொடர்ப்பொருள் அறிந்தபின்னரே மகளிர்போன்று மேன்மாடம் இருக்கின்றது என்ற சிலேடையறிவு தன்னைக் குறிக்குஞ் சொல்லின்றிப் பொருளாற்றலாற் றோன்றிச் சிறந்து விளங்குகின்றது,

நிரனிறையணித்தொனிக்கு உதாரணம் :—

"தேமா முளைகாட்டித் தளிர்த்து மொட்டிட்டுப் பூத்தது; மதனன் மனத்துள் முளைகாட்டித் தளிர்த்து மொட்டிட்டுப் பூத்தனன்,"

ஈண்டு மா தளிர்த்து மொட்டெடுத்துப் பூத்ததுபோல் அம்முறையே மன்மதன் தளிர்த்து மொட்டெடுத்துப் பூத்தனன் எனக் கூறியதே அழகு பொருந்தியதால் நிரனிறையணித் தொனி ஆயிற்று. அது மன்மதன் மாமரம் இவற்றின் ஒப்புமைக்கூட்டம் என்ற வாச்சியவணியினின்று தனித்து நிற்பது காண்க. இவ்வாறே வேறு அணிகளுந் தக்கவாறு கொள்ளப்படல்வேண்டும். இவ்வாறு அணித்தொனியின் வழியை ஆசிரியர் கூறி அது பயனுடைத்து என விளக்க இனிக் கூறுவர்.

வாச்சிய மாகவே யெவற்றை யுடலில்
அமைத்த லெளிதன் றே[2]அவை தொனியின்
அங்கமா விருப்பிற் பேரெழி லடையும். (கா. 50)

1. பதாகை = கொடி; புகழ். விவிக்தம் = தனிமை; சிறப்பாகப் பிரிக்கப்பட்டமை. வளைவலிகம் = வளைந்த மேற்பக்கம்; வளைந்த வயிற்றின் மடிப்பு. சமம் = உடன்; ஒப்பு. ஈண்டுச் சிலேடை வாச்சிய மன்று, தொனியே யாகும்.

சமர் எனக் கூறியிருப்பின் இஃது உவமைத்தொனி யாகும்; சமம் எனக் கூறியிருத்தலின் இஃது சிலேடைத்தொனி யாம்.

2. எளிதன்றே = எளிது; எளிதன்று, உடலில் = காவியவுடலில்; மனிதருடலில், வாச்சியமாக = வாச்சியமாய்; வாச்சியம் நிற்க.

தொனிக்கு அங்கமாதல் வியஞ்சகம் வியங்கியம் என்ற இரண்டு வகையான் கூடும்; ஈண்டு இடனையொட்டி, வியங்கியமாய் வருவதையே கொள்ளல்வேண்டும். அணிகள் வியங்கியமாயிருப்பினும் அவை சிறந்தனவாக இருப்பினே தொனியாகும்; இன்றேல் சிறப்பில்வியங்கியமாகும் எனக் கூறுவர்.

அணி வியங்கியமாதல் ஈரிடத்திற் கூடும்; வாச்சியம் ஆகிய வஸ்துவால் குறிக்கப்படுவது ஓரிடம்; வாச்சியமாகிய வேறு அணியால் குறிக்கப்படுவது மற்றோரிடம்.

அவ்விரண்டனுள்,

வாச்சிய வஸ்து தன்னு லணிதாம்
தோற்றின் திண்ண மாங்கே வணித்தொனி
காவியக் கருத்துத் தானங்கு நிற்றலின். (கா. 51)

அவ்வாறுள்ள அணியைக் கருதியே காவியஞ் செய்யப்பட்டமையானும், அஃதின்றேல் அது வெற்றெனத் தொடுத்த தொடராகுமாதலானும், அவ்வணியே தொனியாம்.

வாச்சிய மாகிய வோரணி தன்னால்
வேறணி தோன்றின் பேரழகு பெற்றுச்
சிறப்புற் றிருப்பி னஃது தொனியாம். (கா. 52)

ஏனெனில், வாச்சியம் வியங்கியம் இவற்றில் எது சிறந்ததென அறிய, அவற்றாற் பெறப்படும் பேரழகே காரணமாம்.

வஸ்து வாச்சியமாயிருக்க அணிகள் வியங்கியமாயிருத்தலை அருகிற் கூறப்பட்ட செய்யுட்களிலிருந்து ஊகித்துக்கொள்ளலாம். ஆக வஸ்து, அணி இவை வாச்சியமாயிருக்க, ஒவ்வொன்றுனும் வஸ்து அணி வியங்கியமாய்க் குறிக்கப்பட, ஆங்கு குறிக்கப்பட்டன பேரழகுமூலமாய்ச் சீர்மை பெறின் அவை முறைத்தோற்றத்தொனிவகை யாகும் என அறிக.

ஆகவே, இவ்வாறு தொனியின் வகையைக் கூறி இனி தொனிப்போலி அவற்றின வேறுபட்டது என்பதை அறிதற்கு உபாயங் கூறுவர்.

வியங்கிய மௌிதி லிலங்கா திருப்பினும்
வாச்சியக் கங்க மாக விருப்பினும்
அதுதொனிப் பாற்படா தென்பர் புலவர். (கா. 53)

வியங்கியப்பொருள் எளிதில் விளங்குவது எளிதில் விளங்காதது என இருவகைப்படும். அவற்றுள் சொல்லாற்றலாலோ பொருளாற்றலாலோ எங்கு அது எளிதிற் புலப்படுமோ அங்குத்தான் மணியொலியொத்த தொனி யாகும். எளிதிற் புலப்படினும் அது வாச்சியத்திற்கு அங்கமாயின், அஃது தொனி யாகாது.

வாச்சியத்திற்கு வியங்கியம் அங்கமாயிருத்தற்கு ஓர் உதாரணம் :—

கலங்க லின்று கமல வோடை
கலகஞ் சங்கள் கயத்தின கன்றில
அலமந்த வத்தா[1] யெவரோ வம்பரத்தை[2]
எல்லே[3] பறித்துக் கயத்து ளெறிந்தனரே.

இங்கு வாச்சியப்பொருள் வியப்பிற்கு ஆலம்பனவிபாவம் ஆகும். அஃதே அழகுற்றது; தனக்கு அழகை ஆக்குவிக்கப் பெண்ணின் அறிவிலித்தன்மையாகிய வியங்கியப்பொருளைத் தோற்றுவிக்கின்றது. ஆகலின், அவ்வியங்கியப்பொருள் வாச்சியத்திற்கு அங்க மாகின்றது. இவ்வாறே எங்கு வாச்சியப் பொருள் அழகுமிகுதியால் சிறப்புற்றும் வியங்கியப்பொருள் சிறப்பின்றியும் இருக்கின்றனவோ, அங்கு வியங்கியப்பொருள் வாச்சியத்திற்கு அங்கமாகலின், அது தொனிக்குஇடன் ஆகாது.

மற்றோர் உதாரணம் :—

[4] இலதைப் புதரினின் றிரிந்திடும் புள்ளின்
ஒலியைக் கேட்டு மனையி னுள்ளிடத்துப்
பலனுறு வேலை பாரித்த பெண்ணுடல்[5]
நலனுற நடுக்குற்று நைந்தது காணாய்.

1. पितृष्वसः என்ற பாடத்திற்குப் பிரதியாக सहसा என்ற பாடமுளது. அத்தாய் = அத்தை என்பதன் விளி.

2. அம்பரத்தை = ஆகாயத்தை.

3. எல்லே = ஓர் அதிசயக்குறிப்புச்சொல்.

4. குறியிட்ட இடத்திற்குத் தன் காமக்கிழவன் வந்தனன் என்ற வியங்கியப்பொருள் வாச்சியப்பொருட்கே அங்கமாயிற்று.

5. வேலைபாரித்த பெண்ணுடல் = தன் வீட்டுவேலை யிருந்த பெண் மகள்.

இவ்வாறுள்ள இடனெல்லாம் சிறப்பில்வியங்கியத்திற்கு உதாரண மாகும்.

பிரகரணம் முதலியவற்றுன் நன்கு அறியப்பட்டுச் சிறப் புற்ற வாச்சியப்பொருள் பின்னரும் வியங்கியத்திற்கு அங்க மாய்த் தோன்றின் அது இம்முறைத்தோற்றத்தொனிக்கு இடனும். உ-ம்.

"உழுது உண்பவனின் மணுட்டுப்பெண்ணே, உதிர்ந்த மலர் களைப் பொறுக்கு; சேவாலிச்செடியை அசைக்காதே; நினது வளையலொலி மாமன்காதில் வீழ்ந்தது; நினக்குத் துன்பத்தைத் தரும்."[1]

ஈண்டு, காமக்கிழவனேடு இன்புற்றிருக்குந் தலைவியின் வளையொலியைக் கேட்ட தோழியால் அவள் விழிப்புண்டாக்

1. உழுது உண்பவன் ஒருவன் ஒரு சேவாலிச்செடியை அன் புடன் வளர்த்துவந்தான். அதனை மிகுதியாக அசைத்தலும் அவனுக்கு வெகுளியை உண்டாக்கும். அவ்வாறு ஒருவர் அசைப்பின் அவரைத் துன்புறுத்துவன். இந்தப் பிரகரணத்தைக் கொண்டு இச்செய்யுட்கு வாச்சியப்பொருள் வருமாறு கூறலாம்:—பெண்ணே பூ விழுந்தன; நீ சேவாலிச்செடியை அசைக்காது அவற்றையே பொறுக்கு; அசைத்தலால் வளையொலியை உன் மாமன் கேட்டனன். உனக்குத் துன்பத்தை விளை விக்கும். மாமனைக்குறித்துத் தோற்றுவிக்கப்படும் வியங்கியப்பொருள் :- உன் மணுட்டுப்பெண் வேறொருவனேடு கலந்தமையின் இவ்வாறு வளையொலிக்கின்றன என நினைத்தல் வேண்டாம். நீ வளர்க்கின்ற சேவாலிச்செடியை அசைத்தலால் வளைகள் ஒலித்தன என்பது. காமக் கிழவனுக்குத் தோன்றும் வியங்கியப்பொருள் :—பக்கத்தில் பெண்ணின் மாமன் இருத்தலை யறியாது நீ அவளை நெருங்கியது மிக்க தவறாகும்; இருப்பினும் தற்போது உன்னைப் பிழைப்பித்தேன்; இனி சாக்கிரதையா யிரு என்பது; காமக்கிழத்திக்குத் தோன்றும் வியங்கியப்பொருள் :— வளைகள் ஒலிக்குமாறு சாக்கிரதையின்றி இருந்துவிட்டாய்; உன் மாமன் அதைக் கேட்டனன்; இருப்பினும் இப்போது உன்னைப் பிழைப் பித்தேன்; இனி அவ்வாறு இராதே—என்பது. மாமன் அச்செடியை நன்கு வளர்த்தான் என்ற வாச்சியப்பொருள் இவ்வியங்கியப்பொருள் களால்தான் அறியப்படுகின்றது. இச்செய்யுள் தோழிகூற்று ஆகும்.

கப்படுகின்றாள் என்பது வாச்சியப்பொருளைப் பெறுதற்குத்[1] துணையாதல் வேண்டும். அது சொல்லாற் பெறப்பட்ட பிறகே அவளுடைய தவறுடைச்செயலை மறைத்தற்கு அவ் வாச்சியப்பொருள் கூறப்படுதலின், இது முறைத்தோற்றத் தொனியின்பாற் படும்.

கருதி வேறினைநோக்கும் வாச்சியத்தொனியினின்று அதன் போலியைப் பிரித்து விளக்குமிடத்து, கருதாவாச்சியத்தினின் றும் அதன்போலியின் வேற்றுமையையும் விளக்குகின்றனர்.

எதுகை மோனைக் கருத்துடன் பாவினை
யிலக்கணத் துடனே யமைக்க வாற்ற
லின்மை யானே வாகுபெயர்ச் சொல்லை
இணைப்பி னதுதொனிக் கிடனின் றென்ப. (கா. 54)

ஏனெனில்,

அவயவி யாந்தொனி வகைக ளேவற்றினும்
அப்பொரு ளளிதே விளங்குதல் மற்றதன்
நிரம்பிய இலக்கண மென்ப நேரே. (கா. 55)

இதற்கு உதாரணம் முன் கூறப்பட்டது காண்க.

தொனிவிளக்கின் இரண்டாங்கதிர்

1. சொல்லின்றிச் செயலாலே அறியப்படும் பொருளைச் சொல் லாற் கூறுவதின், பயன் இருப்பின் வாச்சியப்பொருளைப் பெறலாம்; இன்றேல் அவ்வாச்சியப்பொருள் சொல்லாற் கூறப்படவேண்டா. ஆதலால், தலைவி தோழியால் விழிப்பிக்கப்படுகிறாள் என்ற குறிப்புப் பொருள் வாச்சியப்பொருளைப் பெறுதற்குத் துணை ஆகும்.

முன்னர் வியங்கியப்பொருள்முகமாகவே[1] தொனியின் தன்மை உட்பிரிவுகளுடன் கூறப்பட்டது; இனிச் [2]சுத்த வியஞ்சகமுகத்தான் அத்தொனியின் தன்மை கூறப்படும்.

கருதா வாச்சியத் தோனிக்கு முறையுடன்
தோற்றத் தோனிக்குஞ் சோல்லுந் தோடரும்
வியஞ்சக மாத லுரைக்கப் படுமே. (கா. 56)

கருதாவாச்சியத்தொனியின் வகையாகிய முற்றிலுமறைந்த வாச்சியத்தொனிக்குச் சொல் வியஞ்சகமாதற்கு வியாஸ முனிவர் கூறிய செய்யுள் ஒன்று உதாரணமாகும். அதன் பொருள் :—

"தைரியம், பொறுமை, தயை, தூய்மை, கருணை, இன்சொல், நட்பினர்க்குத் தீங்குநினையாமை இவ்வேழும் திருவிற்குச் சமித்து ஆம்[3-4]."

1. கருதாவாச்சியத்தொனி, கருதிவேறினைநோக்கும்வாச்சியத் தொனி என்ற இவற்றில், வாச்சியம் வியஞ்சகமாயிருப்பினும், அவ் வேறுபாடு வியங்கியமுகத்தாலே இருத்தலான் வியங்கியப்பொருள்முக மாகவே எனக் கூறினர்.

2. சுத்தவியஞ்சகமாவன—சொல்லும், அதன் பகுதியும், சேர்க் கையும், சொற்றொடருமே ஆகும்; பொருளோ சிலவேளை வியஞ்சக மாயும் சிலவேளை வியங்கிய மாயும் இருத்தலின், அது சுத்தவியஞ்சக மாகாது.

3. சமித்து என்ற சொற்குத் தீயில் ஓமஞ் செய்யப்படும் பலாசங் குச்சி போன்ற பொருள் என்பது பொருள் ஆகும்; இங்கு அப்பொருள் முற்றிலும் மறைவுபட, அது வேறொன்றின் உதவியின்றி வளர்த்தற்குக் கருவியான பொருள் என்ற வியங்கியப்பொருளைக் கொண்டது.

4 பெருமூச்சாற் றருடு (பக். 37) என முன்னர்க் கூறப்பட்ட உதாரணத்தையே ஈண்டுங் கூறலாம் எனின்; உண்மையே, ஆயினும் உதாரணங்கள் மிகுதியாகக் காணப்படும் என்பதை உணர்த்தற்கே ஆசிரியர் வேறு உதாரணங் கூறினர் என்க.

காளிதாஸர் மேகஸந்தேசத்திற் கூறியது மற்றோர் உதாரணம். அதன் பொருள் :—

"[1] செல்லேநீ சந்நத்த னுயிருக்கப் பாலையில்
இல்லவரை யெண்ணுதார் யார் ?"

அவரே சாகுந்தளத்திற் கூறியது மற்றோர் உதாரணம். அதன் பொருள் :—

"[2] மதுரமான உடலமைப்புள்ளோர்க்கு எதுதான் அணி ஆகாது ?"

இவ்வுதாரணங்களில் சமித்து, சந்நத்தன், மதுரம் என்ற சொற்கள் வியஞ்சகமாதற் கருத்துடன் கூறப்பட்டன.

கருதாவாச்சியத்தொனியின் வகையாகிய பிறிதொரு பொருளினகத்துச்செல்வாச்சியத்தொனிக்குச் சொல் வியஞ்சகமாதற்கு உதாரணம் :—

"மறுத்தலான் வந்த வெகுளிக்குத் தக்கனவே கொடிய அரக்கனும் நினக்குச் செய்தான்; உலகத்துக்குலவதுக்கள் தலை நிமிர்ந்து நடக்குமாறு நீயும் [3] அதனைப் பொறுத்தாய்; உன் துன்பத்தைப் பார்த்து நிற்கும் இவ்வில்லை வீணுகத் தற்போது [4]

1. செல்=மேகம்; சந்நத்தன் என்பதற்கு அமரில் அணியும் இருப்புச்சட்டை பூண்டவன் என்பது இடுகுறிப்பொருள். திமிருடையோன் என்பது ஆகுபெயர்ப்பொருள். இங்கு அவ்வாச்சியம் முற்றிலும் மறைவுபட, அது கருணையின்மை, பின்னேக்காத்தன்மை, முதலிய வியங்கியப்பொருளைக் கொண்டது.

2. மதுரம் என்பதற்கு நாவிற்கினிமை என்பது இடுகுறிப் பொருள். கவருந்தன்மை என்பது ஆகுபெயர்ப்பொருள். பெருவிருப் பத்திற்கு இடனாந்தன்மை என்பது வியங்கியப்பொருள்.

3. அதனை என்பது இராவணன் சீதைதலையை வெட்ட வர, அவள் சிறிதும் முகங்கோணாது முகமலர்ச்சியுடன் தலையைக் காட்டிய நிலையைக் குறிக்கும்.

4. தற்போது என்பது நாட்டை ஆளவேண்டிய வேலையின்றி மனையாளையே காக்கவேண்டிய நிலையில் என்பதைக் குறிக்கும்.

கையில்கொண்ட இராமனே [1] தன்னுயிரில் ஆசைகொண்டு [2] அன்பார்ந்த தலைவியே, அன்பிற்குத் தக்கன செய்திலன்." [3]

ஈண்டு இராமன் என்ற சொல் சாகசச்செயல் முதலியவற்றிற்கு [4] நிதியாகிய இராமன் என்ற வியங்கியப்பொருட்கு வியஞ்சக மாகும்.

மற்றோர் உதாரணம் :—

"[5] இவ்வாறே, அவளது [6] கன்னத்திற்கு உவமையாகச் சசிபிம்பத்தைக் கூறுவர் மக்கள் ; உண்மையை நன்கு ஆராயின் எளியனாகிய சந்திரன் சந்திரனே !"

ஈண்டு இரண்டாவது சந்திரன் என்ற சொல் [7] வியஞ்சக மாகும்.

கருதாவாச்சியத்தின் வகையாகிய முற்றிலுமறைபட்ட வாச்சியத்தொனிக்குத் தொடர் வியஞ்சகமாதற்கு வியாஸ

1. தன்னுயிரில் ஆசைகொண்டு என்பது நின் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்று நினையாது என்பதைக் குறிக்கும்.

2. அன்பு சொல்வகையானன்றிச் செயலில் இல்லை என்பதைக் குறிக்கும்.

3. ஈண்டுச் சோகத்தின் ஆலம்பனவிபாவம் உத்தீபனவிபாவம் இரண்டுஞ் சேர்ந்து தோன்றுகின்றமையான், கருணம் சுவைத்தொனி ஆகும்

4. முதலியன என்பது உண்மைகூறல், தகாது செய்யாதிருத்தல் முதலியவற்றைக் குறிக்கும்.

5. இவ்வாறே என்பது மக்களின் அவிவேகத்தைக் குறிக்கும்.

6. அவள் என்பது கணக்கற்ற குணங்களையும் பேரழகையும் உற்றவள் என்பதைக் குறிக்கும்.

7. முறையே குறைதல், ஒளியின்மை, களங்கத்தோடிருக்கை முதலிய குறைகளோடு கூடிய சந்திரன் என்ற பொருட்கு அச்சொல் வியஞ்சகமாகும்.

முனிவர் பகவற்கீதையிற் கூறிய செய்யுள் ஒன்று உதாரணம் ஆகும். அதன் பொருள் :—

"பிராணியனைத்திற்கும் எஃது இரவோ, அப்போது விழித்திருப்பான் சம்யமி[1]; எப்போது பிராணிகள் விழித்திருக்குமோ, அஃதே இரவாகும் பார்க்கும் முனிக்கு."

இத்தொடரில் இரவுப்பொருளையோ விழிப்புப்பொருளையோ ஒன்றையுங் கூறக் கவி கருதவில்லை. எதனைக் கருதினர் எனின், உண்மைப்பொருளை அறிவதில் ஈடுபட்டும் உண்மையில்பொருள்களை மதியாதும் சம்யமி இருக்கின்றான் என்பதே ஆகும். ஆகலின் ஈண்டுத் தொடரின்பொருள் முற்றிலும் மறைவுபட, அத்தொடர் முற்கூறிய பொருட்கு வியஞ்சக மாகும்.

அதன் பிரிவு ஆகிய பிறிதொருபொருளினகத்துச்செல் வாச்சியத்தொனிக்குத் தொடர் வியஞ்சகமாதற்கு உதாரணம் :—

சிலர்க்கு நஞ்சம் சிலருக் கமுது
சிலர்க்கு நஞ்சமு தாகுங் காலமே
சிலர்க்கு நஞ்சமு தல்ல தாயுஞ்
செலுமா லெனவே செப்புவர் புலவர்.[2]

1. சம்யமி என்பது இந்திரியங்களை அடக்கியவன் என்ற பொருளைக் கொள்ளினும், உண்மையாக ஆராயின் உலகத்துப் பொது மக்கள் அறியாத கடவுட்டன்மையை எவ்வாறு அடையலாமென்றும், மக்கட்கு மோகம் உண்டுபண்ணுவதை எவ்வாறு விடலாம் என்றும் நன்கு கருதுகின்றவனே சம்யமி ஆவான். ஆகலினன்றே அவனைப் பார்க்கும் முனி எனக் கூறினர் வியாஸமுனிவர்.

2. சிலர்க்கு நஞ்சம் என்றவிடத்து, சிலர் என்பது தீச்செயலைப்புரிந்தோர் அல்லது விவேகமற்றவர் என்பதையும், சிலர்க்கு அமுது என்றவிடத்து அது நற்செயலைப்புரிந்தோர் அல்லது தெளிந்தவிவேகமுடையோர் என்பதையும், சிலர்க்கு நஞ்சமுது என்றவிடத்து அது இருவகைச்செயலைப்புரிந்தோர் அல்லது விவேகம் விவேகமின்மை இரண்டுடன் கூடியவர் என்பதையும் சிலர்க்கு நஞ்சமுதல்லது என்றவிடத்து அது மூடர்கள் அல்லது கடவுளின் தியானத்

இந்தத் தொடரில் நஞ்சம், அமுது என்ற சொற்கள் துன்பத்திற்குச் சாதனம், இன்பத்திற்குச் சாதனம் என்ற வியங்கியப் பொருளில் முடியும்.

கருதிவேறினைநோக்கும்வாச்சியத்தொனியின் வகையாகிய சப்தசக்தித்தொனியில் சொல் வியஞ்சகமாதற்கு உதாரணம்:-

" இரப்போர்விருப்பத்தைப் பொருள்களால் நிரப்புமாறு ஊழான் யான் படைக்கப்படவில்லையாயின், செல்வழியில் தெளிவுற்ற நீரைக்கொண்ட தடாகமாகவேனும், கூபமாக வேனும் சடனை நான் ஏன் படைக்கப்படவில்லையோ ? [1] "

ஈண்டுத் தன்பிறப்பில் வெறுப்புற்ற ஒருவன் தன்னைச் சடனெனக் கூற, அச்சொல் தன்னாற்றலான், மணியொலி யொத்தமுறையில் கூபத்திற்கு விசேடணமாதல்தன்மையைப் பெறும்.

திலே ஈடுபட்டிருப்பவர் என்பதையுங் குறிக்கும். நஞ்சம், அமுது என்ற சொற்கள் துன்பத்திற்குச் சாதனம் இன்பத்திற்குச் சாதனம் என்ற இலக்கணைப்பொருள்களில் இலாவணியம் என்ற சொற்போன்று வழங்கப்படுதலின், ஈண்டு அப்பொருள்கட்கு அச்சொற்கள் வியஞ்சகம் ஆகும் என்பது பொருந்தாதெனின்: அற்றன்று, அவை தம்மாற் செய்யப்பட்ட இன்பம் துன்பம் இவற்றைக் குறிக்கின்றமை காண்க. சிலர், காலம், சோலும் இச்சொற்களும் முறையே விவேகமற்றவர் முதலியோரையும், எல்லாவாழ்க்கையையும், வினைப்போதுவையும் குறிப்பதுங் காண்க.

1. இது வெளிப்படையாய்ப் பொருளுடையவனும், அவரவர் தகுதியை யறிய ஆற்றலுடையவனும், அவரவர்தகுதிக் கேற்பப் பலவகைப் பொருள்களைக் கொடுக்க இயலாதபடி இடையூறு அடைந்தவனுமான ஒருவனுடைய கூற்று ஆகும்.

ஊழ் என்பது நம்மால் ஏன் இவ்வாறு வந்தது எனக் கேட்கத் தகாதது என்பதைக் குறிக்கும். யான் படைக்கப்படவில்லை என்றது பிறர் படைக்கப்பட்டனர் என்பதைக் குறித்து அவனுடைய வெறுப்பைக் காட்டும். தெளிவுற்றநீரைக்கொண்ட தடாகம், என்றது அதன் நீர் பலர்க்கும் பலன் தரும் என்பதைக் குறிக்கும்.

ஈண்டுச் சப்தசக்திமூலத்தொனிக்கு வியஞ்சகம் சடன் என்ற சொல். அச்சொற்கு எதைச் செய்வது என அறியாது மயக்கமுற்றவன்

அதற்கே தொடர் வியஞ்சகமாதற்கு உதாரணம் :—

"இம்மகாப்பிரளயத்தில் பூமியைத் தரித்தற்குத் தற்போது நீ சேடன்."[1]

இத்தொடர் முறைத்தோற்றத்தொனியாக மற்றொரு பொருளைச் சொல்லாற்றலான் வெளிப்படையாய்க் குறித்தல் காண்க.

கவிக்கூற்றான் உண்டாக்கிய அத்தொனிக்கே அருத்த சக்தியினு லுண்டாகும் பிரிவில் சொல்வியஞ்சக மாதற்கு ஹரி விஜயத்துள்ள உதாரணம் :—

என்பது சந்தர்ப்பத்தை ஒட்டிய வாச்சியப்பொருள். அச்சொல் கூபத் திற்கு விசேடணம் ஆம்போது யார் இரப்போர், அவரது விருப்பம் யாது? எனப் பகுத்தறிய ஆற்றலிலது என்றும், குளிர்ச்சி பொருந்தி யது —வெறுப்பால் தாபமற்றது—என்றும், சலத்தோடு கூடினமையால் பிறர்க்கு உதவ ஆற்றல்கொண்டது என்றும் பொருள்படும். இம்மூன்று பொருளும் வியஞ்சனவிருத்தியால் தோன்றும். இம்மூன்று வியங் கியப்பொருளையுங் கொண்ட சடன் என்ற சொல் தடாகத்திற்கும் விசே டணம் ஆகலாம் எனின்; உண்மையே, அவற்றுள் மூன்றும் பொருள் தெளிவுற்ற நீரைக்கொண்ட என்றதாற் கூறப்பட்டமையின் அவ்வாறு ஆசிரியர் கூறவில்லை போலும். தன்னைக்காட்டிலும் கூபத்திற்குச் சிறப்பு தோன்றுதலால் வியதிரேகவணி வியங்கிய மாகும்.

1. மகாப்பிரளயம் என்பதற்கு விழாவின் நாசத்தை எங்குங் கொண்டதாகிய துன்பம் என்பது வாச்சியப்பொருளாகும். சேடன் என்பது எஞ்சியிருப்பவன் என்ற பொருளை அபிதையாற் குறித்தது; பிறகு ஆதிசேடன் என்ற பொருளை வியஞ்சனவிருத்தியாற் குறிக்க, அப்போது அத்தொடர் ஊழிக்காலத்தில் பூமியைத் தாங்கும் திக்கயங்கள் முதலியவெல்லாம் அழிய, பூமியைத் தாங்க எஞ்சிய நாகராசனைப் போன்றவன் நீ என்ற உவமையாகிய வியங்கியமாகிய பொருளில் முடியும். இத்தொடர் பாணன் இயற்றிய ஹர்ஷசரித்திரத்துச் சிங்க நாதன்வாக்கியத்தி லுள்ளது.

[1]தேமாவின் அங்குரத்தை அவதஞ்சமாயுடையதும் உயர்வுறுகணப்பெருக்கின் மனோகரசுராமோதமுடையதும் ஆகிய மதுமாதச்செல்விமுகம் சமர்ப்பிக்கப்படாதிருப்பினும் பூக்கணையோனால் தீண்டப்பட்டது.

சமர்ப்பிக்கப்படாதிருப்பினும் பூக்கணையோனால் மதுமாதச் செல்விமுகந் தீண்டப்பட்டது என்ற இடத்து சமர்ப்பிக்கப் படாதிருப்பினும் என்ற சொல் நிலைவிசேடத்தைக் கூறிப் பொருளாற்றலான் மதுமாதச்செல்வி இணங்கா திருப்பினும் பூக்கணையோனால் அவள் வலியத் தீண்டப்பட்டனள் என்ற வியங்கியப்பொருளைக் குறிக்கும்.

இவ்வகையிலே தொடர் வியஞ்சகமாதல் முற்காட்டப் பட்ட "சிறுமிகளை ... அனங்கனுக்குக் கொடுக்கவில்லை" (பக். 73) என்பது ஆகும்.

ஈண்டு மதுமாதம் தயாரிக்கின்றதேயன்றி அனங்கற்குப் பாணங்களைத் தரவில்லை என்ற தொடர்ப்பொருள் கவிக் கூற்றான் உருப்பெற்றுப் பிறர்க்குப் பெருங்காமத்தை உண்டாக்கும் வசந்தகாலத்தின் நிலையைக் குறிக்கும்.

இயற்கைத்தோற்றத்தா லுருப்பெற்ற அருத்தசக்திதொனி வகையில் சொல் வியஞ்சகமாதற்கு உதாரணம்:—

"வேழத்து மருப்பும் வேங்கை யதளுந்
எமக்கேது வணிகீர் மருகி யிற்கண்
எதுவரை யளக மலைதலொ டணைப்பளோ." [2]

1. அவதஞ்சம் = அழகிற்குச் சாதனம்; காதணி; உயர்வுறு கணப்பெருக்கின் மனோகரசுராமோதம் = உயர்வுறுவிழாப்பெருக்கினால் உண்டாவதும் மனத்தைக் கவர்வதுமான கள்ளின் வாசனை; உயர்வுறு விழாப்பெருக்கினால் மனத்தைக்கவருந் தேவனுடைய (மன்மதனுடைய) மகிழ்ச்சி, சமர்ப்பித்தல் = முற்றுப்பெறுதல்; இணங்குதல், முகம் = தொடக்கம்; முகம்.

2. ஒரு வயது முதிர்ந்த வேடனை வர்த்தகன் ஒருவன் யானைத் தந்தமும் புலித்தோலும் கொடுமின் என்று கேட்க, அப்போது அவன் இவ்வாறு கூறுகிறான். இதனாற் குறிக்கப்படுவது; தன்மகன்

ஈண்டு அளகமலைதலொடு என்ற சொல் [illegible]யுடைய மளுட்டுப்பெண் புணர்ச்சியின்பத்தில் ஈடுபட்டதை இயற்கைத் தோற்றத்தாலுருப்பெற்ற அருத்தசக்தியாற் குறிக்க, அவள் கணவன் எப்போதும் புணர்ச்சி யுறுதலான் மெலிவுற்றனன் என்ற வியங்கியப்பொருள் தோன்றுகின்றது.

அவ்வகையிலே தொடர் வியங்கியமாதற்கு உதாரணம் :—

"வேடன்மனைவி...உலாவுகின்றாள்." (பக். 74.) என்பதாகும்.

இத்தொடரானும் மயிற்றோகையைக் காதிற் செறித்தவளும் புதிதாய் மணக்கப்பட்டவளுமான ஒரு வேடன்மனைவியின் சௌபாக்கியச்சிறப்பு வெளிப்படுத்தப்படுகின்றது; அன்றியும், அவளுடன் இன்புறுதலில் ஈடுபட்ட காரணம்பற்றி வேடன் மயிலைமாத்திரங் கொல்ல ஆற்றலுடையான் என்பதால் முத்துமாலை யணிந்த ஏனைய வயதுற்ற மனைவியரின் தௌர்ப்பாக்கியமுங் குறிக்கப்படுகின்றது; எவ்வாறெனில், அவருடன் கூடியிருந்தகாலத்தே அவ்வேடன் பேர்யானை வேட்டை செய்தற்கு ஆற்றலுற்றவனு யிருந்தனன் என்ற பொருள் குறிக்கப்படுகின்றது.

வேட்டைக்குச் செல்லாது மனையாளிடம் ஈடுபட்டு எப்போதும் அவளுடனே இருத்தலான் யானைத்தந்தம் புலித்தோல் இவை வீட்டில் இல்லை என்பதாகும். இக்குறிப்புப்பொருளின்றி வாச்சியப்பொருள் நிலையாதாகையால், இக்குறிப்புப்பொருள் வாச்சியத்திற்கு அங்கமாக, செய்யுள் சிறப்பில்வியங்கியத்திற்கே இலக்காகுமெனின், இக்குறிப்புப் பொருளின்றியே, இச்செய்யுள் தன்மைநவிற்சி யாகுமாதலான், தொனியே என்க. அதன் பின்னர் அம்மனிதன் நீயிர் முன்னர் வேட்டைசெய்து கொண்டுவர்தன எங்கே என்று வினவ என் மகன் அவன்மனையாளிடம் ஈடுபட்டமையான் அவை யெல்லாம் அவள் தான் பிறந்த வீட்டிற்கு அனுப்பிவிட்டாள் அல்லது அப்புறப்படுத்தினள் என்ற குறிப்புப்பொருளுந் தோன்றும். ஈண்டு கவனிக்கத்தக்கது ஒன்று உண்டு; அஃது யாதெனின் தம்மகன் குற்றமுடையனுயிருப்பினும் பெரும்பாலும் தாய்தந்தையர் அக்குற்றத்தை அவன் மனைவியிடம் ஏற்றுவது இயல்பு என்பதாம்.

## தொனிவிளக்கு

"தொனி காவியவிசேடம் எனக் கூறப்படுதலால், அது சொல்லான் விளக்கப்படும் என்பது எவ்வாறு பொருந்தும்? சிறப்புடைப்பொருளை அறிவித்தற்குக் கருவியான சொற்களின் சீருடைக்கூட்டமன்றோ காவியவிசேடம்! அது சொல்லாற் குறிக்கப்படுமெனின், காவியவிசேடத்தன்மை அதனிடம் நில்லாதே, சொற்கள் அதனை நினைப்பூட்டுகின்றனவே யன்றி அதற்கு வாசக மாகாமையான்." எனின் : அற்றன்று, சொற்களின் வாசகத்தன்மை தொனிக்கு நியாமகம் எனக் கொள்ளினே இக்குற்றம் நிற்கும் ; அவ்வாறு கொள்ளவில்லை : அவை வியஞ்சக மெனவே தீர்மானிக்கப்பட்டன. அன்றியும் உடலுடைப்பொருள்களினழகு அமைப்புச்சீர்மையுற்ற அவயவங்களின் கூட்டத்தால் தோன்றினும், அது அந்நுவயவியதிரேகங்களான் அவற்றின் பகுதிகளிற் கூறப்படுவதுபோன்று சொற்களின் வியஞ்சகத்தன்மையாற் செய்யுட்கு வழங்கும் தொனித்தன்மையும் இழுக்காகாது.

இக்கருத்தைக் குறிக்கும் பரிகரச்செய்யுட்கள் [1] : —

விருப்பில் பொருளை நினைப்பிக்குஞ் சொற்களை
வழங்கி னழகின்மை பெறுமா லதுபோல்
விருப்புடைப் பொருளை நினைப்பிக்குஞ் சொற்களை
வழங்கி னழகு பெறுமே திண்ணம்.
சொற்களே பொருளை நினைவித்த போதிலும்
சொற்களே தொனியினை யுறுவித்த போதிலும்
சொல்லுவ ராங்கெங் குமழ குண்டென.
பேரழ குற்ற வணிகல மொன்றுன்
காரிகை விளங்குதல் போன்று நற்கவியின்
வாக்கும் விளங்குறுஞ் சொற்றேற்றுந் தொனியால்.

1. பரிகரச்செய்யுள் என்பது முன்னர்க் கூறிய கருத்தைச் சிறிது புதிய செய்திகளுடன் கூறும்.

முறையில் தோற்றத் தொனிதா னெழுத்து
கிளவி யாதி[1] நிமித்த மாக
வாக்கிய மேதுவாய் விபாவ மாதி
அறீஇச் சுவைமய மாச்சங் கடனை[2]
[3]பிரபந் தமுமோ யேதுவாத் திகழும். (கா. 57)

*அவற்றுள் பொருளற்ற எழுத்துக்கள் ஒருபோதும் வியஞ்சக மாகா என்ற எண்ணத்தைப்போக்கப் பின்வருவதைக் கூறு கின்றனர் :—*

ஶஷக்களும் ரகரத்தோ டுள்ளகூட் டெழுத்தும்
டவர்க்கத்து நான்கா மெழுத்து மிகுதியா
வழங்கப் படினவை சுவைபுலப் படுத்தா
சிருங்கார விரோதி யாமவை தாமே
பீபற்ச மாதியில் வரின்சுவை பெருக்கி
அவைதமை விளக்குறு மென்மனூர் புலவர்.
(கா. 58, 59)

*ஈண்டு அந்நுவயத்தானும் வியதிரேகத்தானும் எழுத்துக்கள் தொனிக்கு வியஞ்சக மாகும் என்பது கூறப்பட்டது.*

*இனி; சொல் இருக்க, முறையில்தோற்றத்தொனி தோன்றுதற்கு உதாரணம் :—*

*"நடுக்குற்று அச்சத்தான் நழுவிய ஆடையுடன் அக்கண்ணிரண்டையும் இங்குமங்கும் நீ செலுத்தி, கொடுமையுற்ற நீ*

1. ஆதி என்பது சொல்லின் ஒருபகுதியையும், இருசொற்கள் முதலியவற்றையுங் குறிக்கும்.

2. சங்கடனை என்பதும் தொடர் என்பதும் ஒருபொருட்கிளவி யாகலாம். அச்சங்கடனை, பதங்களின் சங்கடனை வாக்கியங்களின் சங்கடனை என இருவகைப்படும்.

3. பிரபந்தம் என்பது தொடர்ச்சியுற்ற வாக்கியங்களின் கூட்ட மாகும்.

புகையாற் குருடாகித் தயையின்றித் திடீரெனவே நின்னைப் பாராது அந்தோ கொளுத்தியது[1]."

ஈண்டு அக்கண் என்றவிடத்துள்ள அகரச்சுட்டு[2] சுவையைச் சொட்டுதல் ரஸிகர்களுக்கு எளிதில் விளங்கும்.

அதற்கே மற்றோர் உதாரணம்:—

"அவ்விடத்து திடீரெனப் பொன்மானைக் காண உடனே மலர்ந்த தலைவிகண் சொரிந்த அப்பார்வையெல்லாம், காற்றான் அலைவுற்ற தாமரையினின்று சிதறும் இருமக்குவியல் போல், நினைக்க நினைக்க என்னை வருத்துகின்றன."[3]

ஈண்டும் அப்பார்வை என்றவிடத்துள்ள அகரச்சுட்டு உதாரண மாகும்.

சொல்லின் ஒருபகுதி நிமித்தமாதற்கு உதாரணம்:—

[4] தந்தைதாயரின் முன்னர் நாணத்தால் தலைகுனிந்து, தன கலச மசைவிக்குந் தன்கோபம் உள்ளடக்கி, கண்ணீர் சொரிந்து,

1. இப்பொருள் கொண்ட செய்யுள் தாபஸவத்ஸராஜம் என்ற நாடகத்தில் உளது. ஆங்கு, வாஸவதத்தைத் தீயால் எரியுண்டாள் எனக் கேட்ட வத்ஸராஜன் இதனைக் கூறுகின்றான். ஈண்டு கருணைச் சுவை அக்கண் என்றவிடத்துள்ள அகரச்சுட்டால் நன்கு விளங்குகின்றது.

2. அகரச்சுட்டு "அக்கண்ணின் சிறப்பு, தன்னாலே அறியப்படுமென்பதும், மிகுந்த அழகுற்ற தென்பதும், பலபோது அவற்றின் பார்வையைத் தான் எதிர்பார்த்திருந்தானென்பதும்" என இவ்வாறான பொருளை யெல்லாங் குறிக்கும்.

3. இச்செய்யுள் சீதை இராமனிட மில்லாதிருக்கும்போது இராமனாற் கூறப்பட்டதாகும்.

4. கணவன் பொருள் முதலியன தேடுங்காரணத்தால் தன்னை விட்டுப் பிரியுங்கால் மனைவியின் நிலையைப் பார்த்து கணவன் இச் செய்யுளை கூறும்.

அச்சமுறுமான்பேடுகவர்விழியாள்கண் திரிபாகம்[1] என்னிடமே நிலைபெறுதலால், நீ நில் என அவள் கூறியதாகாதோ?

ஈண்டு, திரிபாகம் என்பது வியஞ்சகம்.

இவை இருக்க, வாக்கியரூபமான[2] முறையில்தோற்றத் தொனி தனிப்பட்டதென்றும் அணியுடன் கூடியதென்றும் இருவகைப்படும்.

தனிப்பட்டதற்கு உதாரணம் ராமாப்யுதயத்திற் கூறப்பெற்ற செய்யுளாகும்: அதன்பொருள் வருமாறு:—

"அன்புடைத்தலைவியே போலிவெகுளியோடும் நீர்நிறைவோடும் தஞ்சநிலையைக் குறிப்பிக்கும் பார்வையோடும், தாய் அவ்வாறு நின்னைத் தடுக்கவும் நில்லாது, உன் அன்பிற்கு நிலைக்களனை எவனொடு காட்டிற்கு வந்தாயோ, அந்த நின தன்பனே நீயின்றி வன்னெஞ்சனாய் நீருண்ட முகில்கறுத்த திசைகளைக் கண்டும் உயிர்பிழைத்தேயுள்ளான்".[3]

1. திரிபாகம் என்பதற்கு மூன்றிலொருபாகம் என்பது பொருள். அச்சொல், நாணமும கோபமும் அவள்கண்ணின் இருபகுதிகளைக் கணவனைப் பார்த்தலினின்றும் தடுக்க, மூன்றாம் பகுதி பெரியோர் இருக்கின்றனர் என்பதையும் மதியாது கணவனைப் பார்த்தது என்பதைக் குறிக்கும். அதற்குக் காரணம் அவளது பேரன்பும், வெகுளியும், பிரிவு நிலையில் அவளிரங்கலுமாம். இதைக் கணவன் நினைக்க நினைக்க விப்பிரலம்பசிருங்காரம் சிறப்பிக்கப்படுகின்றது.

2. எழுத்து, சொல், சொற்பகுதி இவை சுவைக்கு நிமித்தமாகவே இருத்தலின் இவை இருக்க எனவும், வாக்கியம் முற்றும் விபாவாதியை உணர்த்திச் சுவைமயமாயிருத்தலின் வாக்கியரூபமான எனவுங் கூறினர்.

3. சீதை இராவணனாற் கொண்டுபோகப்பட, கார்காலத்தில் அவளின்றி வருந்தும் இராமனுடைய கூற்று இஃது ஆகும். போலி வெகுளியோடும் நீர்நிறைவோடும் தஞ்சநிலையைக் குறிப்பிக்கும் பார்வையோடும் என்ற பகுதி இராமன் சீதையைக் காட்டிற்கு வர வேண்டா என்று கூற, அப்போது அவளிருந்த நிலையைக் குறிக்கும். அதனை இப்போது இராமன் நினைக்க நினைக்க அது விப்பிரலம்ப சிருங்காரத்தைச் செழிக்கச் செய்யும். தாய் என்றது கோசலையைக்

## தொனிவிளக்கு

இவ்வாக்கியம் இருவரன்பும் மேன்மேல் வளர்ந்து வந்தது என்பதைக் காட்டி முழுப்பகுதியானும் மிகவும் சுவை யுண்மையை வெளிப்படுத்துகின்றது.

வேறு அணியுடன் கலந்திருத்தற்கு உதாரணம்:—

"காமக்கிழவனும் கிழத்தியும் காமக்கான்யாற்றுவெள்ளத்தால் கொண்டுபோகப்பட, அப்போது குருசேதுவால் தடுக்கப்பட்டு விருப்பம் நிறைவேறாது வருத்தமுற்று அவர் நிற்பினும், சுவரில் எழுதப்பெற்ற சித்திரம்போன்று அங்கங்கள் அசைவின்றி இருக்க ஒருவரை யொருவர் நோக்கிக் கண்டாமரை நூலாற் கொண்டுவந்த சுவையைத் தாமே நுகர்வர்".[1]

குறிக்கும்; தாய் அவ்வாறு நின்னைத் தடுக்கவும் நில்லாது என்ற பகுதி பெரியோர் சொல்லையும் மதியா திருக்குமாறு அவ்வளவு பேரன்பு தன்னிடம் கொண்டவன் என்பதைக் குறிக்கும். எவனேடு என்பது தன்னைக் குறைவாக நினைத்தலைக் குறிக்கும். காட்டிற்கு என்பது அரசன் மகளாயிருந்தும், சுகமான வாழ்விற்கே உரியவளாயிருந்தும் முள் விலங்குகள் நிறைந்த இடத்திற்கும் வந்தனள் என்றதனால் அவளுடைய பேரன்பைக் குறிக்கும். நீருண்ட முகில் நிறைந்த திசைகளைக் கண்டும் உயிர்பிழைத்தேயுள்ளான் என்ற பகுதி தான்படும் துன்பத்தையும் தன்னுயிர் நீங்கவில்லையே என நினைத்துக் தன்னுடலின் கண்ணுள்ள வெறுப்பையும், தான் அவளிடத்திற் கொண்ட அன்பு அவள் தன்னிடத்திற்கொண்ட அன்பைக்காட்டிலுங் குறைவுபட்ட தாயிற்றே என்ற வருத்தத்தையுங் குறிக்கும்.

1. காமக்கான்யாறு = காமமாகிய கான்யாறு; குருசேது = தாய் தந்தையாகிய அணைக்கட்டு; கண்டாமரைநூல் = கண்களாகிய தாமரையின் நூல்; ஈண்டு காமக்கான்யாறு குருசேது, கண்டாமரை இவை உருவக மாகும்.

பொருள், கல்வி முதலியவற்றுள் ஒன்று காரணமாகக் கணவன் மனைவியைப் பிரிதற்குச் சித்தனாயிருக்க, ஆங்கு அவனது தாய்தந்தையர் அவனை ஊருக்கு அனுப்ப, கணவனும் மனைவியும் ஒருவருக் கொருவர் அன்புமிகுதியால் சுவரில் எழுதிய ஓவியம் போன்று அசைவற்று ஒருவ ரொருவரைப் பார்த்து இன்பம் நுகரும் நிலையை இவ்வாறு கவி வருணிக்கின்றார்.

ஈண்டு சுவைக்கு அணி வியஞ்சகமாதற்கு முன் கூறப்பட்ட இலக்கணத்துடன்[1] பொருந்திய உருவகத்தால் அலங்கரிக்கப்பெற்ற சுவை சிறக்க விளங்குகின்றது.

சங்கடனை நிமித்தமா யிருக்க முறையில்தோற்றத்தொனி விளங்கு மெனக் கூறப்பட்டது. அதுகாரணமாக முதலில் சிலரான் சங்கடனையின் தன்மை விளக்கப்படுகின்றது.

தொகையிலது நடுத்தரத் தொகையை யுடையது
நீள்தொகை யஃதெனச் சங்கடனை மூவகை. (கா. 60)
சங்கடனை தானே மாதுரி யமாதி
குணங்களைப் பற்றிச் சுவைகளைக் குறிக்கும்
அந்நிய மத்தி னேது கூறுவோன்
வாச்சிய மிவற்றி[2]னௌசித் யமாகும். (கா. 61)

அச்சிலர்கூற்றை ஒட்டியே "சங்கடனை குணங்களைப்பற்றி நின்று சுவையைக்குறிக்கும்" எனக் கூறப்பட்டது "சங்கடனை... குணங்களைப் பற்றி" என்றவிடத்து குணங்களும் சங்கடனையும் ஒன்று[3] வெவ்வேறு என விகற்பிக்கத் தக்கது; வெவ்வேறெனின், ஆங்கும் குணங்களைப் பற்றுக்கோடாகக் கொண்டதா சங்கடனை, சங்கடனையைப் பற்றுக்கோடாகக் கொண்டனவா குணங்கள் என இருவகையாக விகற்பிக்கத்

1. உருவகத்தை வேண்டியமட்டிலும் கூறத் தலைவன் தலைவியை ஆண்பெண்ணன்னங்களாக உருவகப்படுத்தாது விடுதல். (கா.40, பக்.53)

2. ஔசித்யம் என்பதற்குப் பிரதியாக தகுதி என்பதை வழங்கலாமெனினும், தகுதி என்பதை யோக்யதை (योग्यता) என்பதன் பொருளில் சேனாவரையர்வழக்கினை நோக்கி 11 ஆவது காரிகையில் (பக். 16) வழங்கியிருத்தலால் ஔசித்யம் என்ற தற்சமச்சொல்லே ஈண்டு வழங்கப்பட்டது.

3. குணங்களும் சங்கடனையும் ஒன்று யிருப்பின் சங்கடனை குணங்களைப் பற்றிநின்று என்ற வழக்கு எவ்வாறு பொருந்து மெனின் தேமாவைப்பற்றியது மாத்தன்மை போன்ற வடமொழிவழக்கைப் பின்பற்றியது எனக் கொள்க.

தக்கது. இரண்டும் ஒன்று என்ற கூற்றில் "சங்கடனை தானே குணங்களைப் பற்றிச் சுவையைக் குறிக்கும்" என்பதற்குச்சங்கடனை தன்னோடு ஒன்றாகிய குணங்களைப் பற்றி நின்று சுவையை வெளிப்படுக்கும் என்பது பொருளாகும். "சங்கடனையைப் பற்றுக்கோடாகக் கொண்டன குணங்கள்" என்ற கூற்றில், அத்தொடர்க்குச் சங்கடனை தனக்கு [1] ஆதேயமாகிய குணங்களைப் பற்றிநின்று சுவையை வெளிப்படுத்தும் என்பது பொருளாகும். வெவ்வேறென என்ற பக்ஷத்தின் ஒருபகுதியாகிய "குணங்களைப் பற்றுக்கோடாகக்கொண்டது சங்கடனை" என்ற கூற்றில் சங்கடனை குணங்களுக்குப் [2] பரதந்திரமாயிருந்தது என்பது பொருளாகும்.

இவ்வாறு விகற்பித்தலாற் பயன் யாதெனின் அது கூறப்படும்:—சங்கடனையும் குணங்களும் ஒன்று என்ற கூற்றினையும் சங்கடனையைப் பற்றுக்கோடாகக் கொண்டன குணங்கள் என்ற கூற்றினையுங் கொள்ளின், சங்கடனைக்கு விடயம் எவ்வாறு நியதமின்றி இருக்கின்றதோ, அவ்வாறே குணங்களுக்கும் விடயம் நியதமின்று என்று ஆகும். ஆனால் குணங்களுக்குள் மாதுரியம், பிரசாதம் இவற்றின் மிகுதிக்கு விடயம், கருணச்சுவையும் விப்பிரலம்பசிருங்காரச்சுவையு மாம்; ஓஜஸ் என்ற குணத்திற்கு விடயம் ரவுத்திரம், அற்புதம் முதலியன.[3] மாதுரியம் பிரசாதம் என்பன சுவை, பாவம், சுவைப்போலி, பாவப்போலி இவற்றையே விடயமாகக் கொண்டன என நியமம் நிலைபெற்றுளது, சங்கடனையோ அவ்வாறு நியமிக்கப் பெற்ற விடயத்தைக் கொண்டதன்று.

உதாரண மாகச் சிருங்காரச்சுவையிலும் நீண்டதொகை கொண்ட சங்கடனையும், ரவுத்திரம் முதலியவற்றிலும் தொகையிலதான சங்கடனையும் காணப்படுகின்றன.

1. பூமியில் குடம் உளது என்றவிடத்து பூமி ஆதாரம் ஆகும், குடம் ஆதேயம் ஆகும் என்பது அறியத்தக்கது.

2. பாதந்திரமாயிருத்தல் = அடங்கியிருத்தல்; அரசர்க்குக் குடி அடங்கியிருப்பதுபோன்று சங்கடனை குணங்களுக்கு அடங்கியிருக்கும்.

3. முதலியன என்பதால் வீரத்தைக் கொள்ளல் தகும்.

சிருங்காரச்சுவை தோன்றுமிடத்து நீண்டதொகை கொண்ட சங்கடனையுள்ள இடம்:—

மந்தாரைப்பூந்துகட்பொன்னிறவளகத்நாள் என்பது. மற்றோர் உதாரணம்:—

கண்ணீ ரிடையறாப் பெருக்குக் கழுவு
கன்னத் திலக்கொடி வதனங் கைசாயக்
காரிகை [1] காய்க்கா தியாரைத் தானிஃது?

ரவுத்திரம் முதலியவற்றில் தொகையிலதான சங்கடனையுள்ள இடம்:—"பாண்டவர்தளத்து...யமனே." (பக். 46)

ஆகலின் குணங்களும் சங்கடனையும் ஒன்றல்ல; குணங்கள் சங்கடனையைப் பற்றுக்கோடாகக் கொண்டனவு மல்ல. சங்கடனை குணங்களுக்குப் பற்றுக்கோடன்று எனின், அவற்றிற்குப் பற்றுக்கோடு யாது? அஃது முன்னரே (கா. 28, பக். 44) கூறப்பட்டுள்ளது.

அவ்வாறின்றிக் குணங்கள் சொற்களைப் பற்றுக் கோடாகக் கொள்ளட்டும்; ஆங்கும் பொருளோடு இயைபு படாது சொற்களோடு மாத்திரம் இயைபுபட்டன அனுப்பிராஸாதிகள்; ஆதலின் அவற்றோடு குணங்கள் ஒற்றுமைப்படா. வீரத்தன்மை முதலியன மற்றொன்றைப் [2] பற்றுக்கோடாகக் கொண்டிருப்பினும் உடலைப் பற்றுக்கோடாகக் கொண்டன என்பதுபோலவே குணங்கள் சொற்களைப் பற்றுக்கோடாகக் கொண்டன என்பதும்.

"குணங்கள் சொற்களைப் பற்றுக்கோடாகக் கொண்டன எனின், குணங்களும் சங்கடனையும் ஒன்று என்றேனும் குணங்கள் சங்கடனையைப் பற்றுக்கோடாகக் கொண்டன என்றேனு மாகும். சேர்க்கையில்லாத சப்தங்கள் பொருள் விசேடத்திற்கு வாசகமல்ல, ஆதலின் பொருள்விசேடத்தால் குறிக்கப்படுஞ் சுவை முதலியவற்றைப் பற்றுக்கோடாகக்

1. காரிகை = அண்மைவிளி.
2. மற்றென்று என்பது சீவனைக் குறிக்கும்.

கொண்டுள்ள குணங்களுக்கு அவை பற்றுக்கோடாகா" எனின்: அற்றன்று, "சுவை முதலியன எழுத்து, சொல் இவற்றிற்கு[1] வியங்கியமாகலாம்" எனக் கூறப்பட்டமையான்; சுவை முதலியன வாக்கியத்திற்கே வியங்கிய மெனக் கொள்ளினும், இச்சங்கடனையே இக்குணங்கட்குப் பற்றுக்கோடு என நியமமின்மையின், நியமமில்லாத சங்கடனையைக்கொண்ட சப்தங்களே வியங்கியவிசேடத்துடனே நின்று குணங்களுக்குப் பற்றுக்கோடாதல் வேண்டும்.

"முற்கூறப்பட்ட காரணம் மாதுரியவிடயத்தில் இருப்பினும் இருக்கட்டும்; ஓஜஸ் நியமமில்சங்கடனைகொண்ட சொற்களை எவ்வாறு பற்றுக்கோடாகக் கொண்டதாகும்? தொகையில்சங்கடனை ஒருபோதும் ஓஜஸுக்குப் பற்றுக்கோடாக இருப்பதில்லையே!" எனின், அதற்கு விடை பின் வருமாறு:—அவர் வழக்கு ஒன்றனையே குரங்குப்பிடியாகக் கொள்ளாதிருப்பின், ஈண்டும் அவரது ஐயத்தை நீக்க முடியாதென்பது இல்லை. தொகையில்சங்கடனை ஓஜஸ்ஸிற்கு ஏன் பற்றுக்கோடு ஆகாது? எதனால் ரவுத்திரம் முதலியவற்றை விளக்கும் காவியத்தின் தீப்தி, ஓஜஸ் என முன்னர்க் கூறப்பட்டதோ, அவ்வோஜஸ் தொகையில்சங்கடனையிலுமுள்ளது எனின், யாது குற்றம்? ஆங்கு[2] அழகின்மை ரஸிகர்களுக்குப் புலப்படவில்லையே. ஆகலின், நியமமில்சங்கடனை கொண்ட சொற்கள் குணங்களுக்குப் பற்றுக்கோடு எனக் கொள்ளின் ஒரு குற்றமும் வாராது. விடயவிசேடத்தை நியதமாகக் கொண்ட கண் முதலிய இந்திரியங்களின் தன்மை போன்று, விடயவிசேடத்தை நியமமாகக் கொண்ட குணங்களின் தன்மைக்கு மாறுபாடு ஒருபோதும் இல்லை. ஆகலின், குணங்கள் வேறு, சங்கடனை வேறு; குணங்கள் சங்கடனையைப் பற்றுக்கோடாகக் கொள்ளுதலுந் தகாது.

அவ்வாறு இருப்பினும் குணங்களைச் சங்கடனையுருவமாகவே கொள்வோம். "அவ்வாறாயின், சங்கடனை நியமமின்றி இலக்கியங்களிற் காணப்படுகின்றமையான் சங்கடனை

1. (கா. 58, பக். 95)

2. பாண்டவர்தனத்து...யமனே (பக். 46.)

போன்று குணங்களுக்கும் நியமமில்விடயம் பெறப்படும்' எனின், அங்கும் இவ்வாறு கூறல் தகும் :— எங்கு இலக்கியத்தில் நியமித்த விடயத்திற்கு மாறுபாடு உள்ளதோ, அஃது இலக்கணத்திற்கு ஒத்ததன்று ஆகும். ஆங்கு அழகின்மை ரஸிகர்களுக்கு ஏன் புலப்படவில்லை எனின், கவியின் ஆற்றலால் மறைபடுதலால் ஆகும்.

குற்றமோ இருவகைப்படும் :—

முன்பின்னருள்ள அனைத்தையுஞ் சேர்த்து நினைவிற் கொள்ளாமையான் வருவது ஒன்று ; பிரதிபையின்மையான் வருவது மற்றொன்று. முன்னருள்ள குற்றம் கவியின் பிரதிபையான் மறைபட்டுச் சிலபோது புலப்படுத லில்லை. பின்னருள்ளதோ உடனே புலப்படுகின்றது. இக்கருத்துக் கொண்ட செய்யுள் :—

[1] நினைவிற் கொள்ளாத் தோன்றுங் குற்றம்
கவியின் [2] பிரதிபை தன்னின் மறைபடும்.
பிரதிபை யின்மையாற் றோன்றுங் குற்றமே
கடிதி னெளிதே நன்னர்ப் புலப்படும்.

விவரம் வருமாறு :—பெருங்கவிகள் சிறந்த தேவதைகளின் விடயத்தில் சம்போகசிருங்காரத்தை வருணித்தல் அனுசிதமாயிருப்பினும், அது அவருடைய பிரதிபையான் மறைபட்டுக் [3] கிராமியமாகத் தோன்றுவதில்லை. காளிதாஸன் குமாரஸம்பவத்தில் பார்வதியின் ஸம்போகத்தை வருணித்தல் இதற்கு உதாரண மாகும். இவ்வாறுள்ள விடயங்களில் அவுசித்தியமின்மை மேலே காட்டப்படும். பிரதிபையான் மறைவுபடுதல் அந்நுவயவியதிரேகங்களான் அறியப்படும். பிரதிபையில்லாக்கவியால் இவ்வாறுள்ள இடங்களில் சிருங்காரம் வருணிக்கப்படின் அது வெளிப்படையாய்க் குற்றமென

1. நினைவிற்கொள்ளாமை = अव्युत्पत्तिः
2. பிரதிபை = शक्तिः
3. கிராமியம் = இழிவழக்கு.

அறியவே படும். இந்த பக்ஷத்தில் "பாண்டவர் தளத்து..." (பக். 46.) என்றவிடத்து புலப்படாத அழகின்மையை நாம் ஏன் ஆரோபிக்கவேண்டும்?

ஆகலின், சங்கடனை குணத்தோடு ஒன்று யிருப்பினும் வேறு யிருப்பினும் சுவை நியதமாகத் தோன்றுதற்கு வேறு ஏது கூறப்படல்வேண்டும் எனின், அது இனிக் கூறப்படும். சங்கடனையின் நியமத்தில் காரணம் கூறுவோன், கூறப்படுவது இவற்றின் ஔசித்தியமே ஆகும். ஆங்குக் கூறுவோன் கவியோ கவியினாற் கூறப்படும் காவியநாடகங்களிலுள்ள [1]பாத்திரமோ ஆகலாம். பாத்திரம், சுவை முதலியவற்றுள் ஈடுபட்டவராக வேனும் ஈடுபடாதவராகவேனும் இருத்தல் கூடும். சுவையும் கதையின் நாயகனை ஒட்டியும், அவனுக்குப் பகைஞனை யொட்டியும் இருக்கலாம். கதையின் நாயகனும் முக்கிய நாயகனோ உபநாயகனோ [2]தீரோதாத்தன், [3]தீரோத்ததன், [4]தீரலலிதன், [5]தீரசாந்தன் என நான்குவகைப்பட்டவருள் ஒருவராக இருக்கலாம். இவ்வாறு கூறுவோன்விடயத்தில் விகற்பங்கள் உள. கூறப்படுவதில் சுவைத்தொனியுடையதும், போலிச்சுவையுடையதும், நடிக்கக்கூடியதும், நடிக்கக்கூடாத தும், சிறப்புள்ள பாத்திரத்தைப் பற்றியதும், சிறப்பில்லா பாத்திரத்தைப் பற்றியதும் ஆகப் பலவகைப்படும். ஆங்கு, கவி சுவையில் ஈடுபடாமலிருப்பின், சங்கடனை எவ்வாறாகவு மிருக்க லாம்; அவ்வாறே கவியினாற்கொள்ளப்பட்ட கூறுவோனும் சுவையில் ஈடுபடாதிருப்பின், முன்போலவே சங்கடனை எவ்வா றாகவும் இருக்கலாம். கவியோ, கூறுவோனோ எங்கு நியதமாய்ச் சுவையில் ஈடுபட்டவனோ, சுவையும் எங்குச் சிறந்து தொனி யான்மாவோ, அங்கு சங்கடனை தொகையிலதாகவேனும் நடுத்

1. பாத்திரம் = காவியம் நாடகம் இவற்றில் வருணிக்கப்பட்ட ஆண் பெண் முதலியோர்க்கு இடப்பட்ட பொதுப்பெயர்.

2, 3, 4, 5. ஆண்மை, நிறை; தகை, செருக்கின்மை இவை தீரோதாத்தனது பண்பு; மதம், செருக்கு, மாயாவித்தனம், பொறாமை, முதலியன தீரோத்ததனது பண்பு; கவலையின்மை கலைப்பற்று, இனிய சொற்கூறுதல், சுகியாயிருத்தல் இவை தீரலலிதனின் பண்பு; தீரத் தனம், அமைதி, தூய்மை இவை தீரசாந்தனின் பண்பு.

தரத்தொகையுடையதாகவேனும் இருத்தல் இன்றியமையா தது. கருணச்சுவை விப்பிரலம்பசிருங்காரச்சுவை இவை விளங்குமிடத்து சங்கடனை தொகையிலதாகவே இருத்தல் வேண்டும். அதற்குக் காரணம் யாதெனின், கூறுவோம்:— சுவை எங்குச் சிறந்ததாக விளங்கவேண்டுமோ அங்கு அது தோன்றுதற்கு இடையூருய் நிற்பனவும், அதற்கு மாருய் நிற்பனவும் அவசியம் நீக்கப்படல்வேண்டும். நீண்டதொகை யைப் பலவாருக விரித்துப் பொருள்கொள்ளலா மாகலின், ஒருகால் நீண்டதொகை கொண்ட சங்கடனை சுவை உண்டா தற்குக் காலதாமதத்தைச் செய்யுமாதலின், நீண்டதொகை கொண்ட சங்கடனையில் மிகப் பற்று இருப்பின் அது சிறவாது; இந்நியதியை நடிக்கப்படும் காவியத்தில் விசேடமாகக் கவனித் தல் வேண்டும்; மற்றும் நடிக்கப்படாத காவியத்திலும் கருணச்சுவை, விப்பிரலம்பசிருங்காரச்சுவை இவை இருப்பின், அந்நியதியை வெகுவிழிப்புடன் கவனித்தல் வேண்டும். ஏனெனில் அவ்விரண்டும் மிகவும் மென்மையுடைமையான், சிறிதேனும் தெளிவில்லாதிருப்பினும் சொற்பொருள்களி னுணர்ச்சி தடைபெறும். ரவுத்திரம் முதலான வேறு சுவை குறிக்கப்படும்போது நடுத்தரத்தொகைகொண்ட சங்க டனையோ சிலபோது நாயகன் தீரோத்ததனுயிருக்க அவன் வியாபாரத்தையொட்டிய நீண்ட தொகைகொண்ட சங்க டனையோ அதன் கவர்ச்சிக்கு ஈடுபட்டு அதனை விட்டுப் பிரியாததும் சுவைக்குத் தக்கதும் ஆன வாச்சியத்திற்கு வேண்டுமாயின் குற்றமாகாதாகலான், அவை முற்றிலும் நீக்கப்படத் தகா. சங்கடனை எல்லாவற்றிலும் பிரஸாதம் என்ற குணம் வியாபித்திருக்கும். அது சுவையெல்லாவற்றிற் கும் சங்கடனையெல்லாவற்றிற்கும் பொதுவாயிருப்பது எனக் கூறப்பட்டது. பிரஸாதம் என்ற குணத்தோடிராத தொகை யில்சங்கடனையும் கருணம், விப்பிரலம்பசிருங்காரம் இவற் றைக் குறிக்க நிமித்த மாகாது; அக்குணத்தை விடாத நடுத்தரத்தொகை கொண்ட சங்கடனையும் கருணம் விப்பிர லம்பசிருங்காரம் இவற்றைக் குறிக்க நிமித்த மாகும். ஆகலின், எங்கும் பிரஸாதம் என்ற குணம் இருத்தல்வேண்டும். ஆகலின், "பாண்டவர்தளத்து...யமற்கும் யான் யமனே" (பக். 46) என்ற செய்யுள் முதலியவற்றில் ஓஜஸ் என்ற குணம் இல்லை யெனக் கொள்ளின், பிரஸாதம் இல்லை யெனக் கொள்ள

வேண்டி யிருக்குமேயன்றி, மாதுரியம் இல்லை எனக் கொள்ள வேண்டியிராது. ஆங்குக் குறிக்குஞ் சுவை நன்கு வெளிப் படுத்தப்படுதலால், அழகின்று எனக் கூறுதலும் இயலாது. ஆகலின், சங்கடனை குணங்களோடு ஒன்றுபட்டிருப்பினும் கூறப்பட்ட அவுசித்தியங் காரணமாக அதற்கு விடயம் நியமிக்கப்படுதலான், அஃதும் சுவைக்கு வியஞ்சகமாகும். சுவை வெளிப்படுதற்கு நிமித்தமான சங்கடனைக்கு விடயத்தை நியமிக்கும் முற்கூறப்பட்ட கூறுவோனுதியின் ஔசித்யமே குணங்களுக்கும் விடயத்தை நியமித்தலான் சங்கடனை குணங் களுக்குப் பரதந்திரமெனக் கொள்ளினும் இழுக்காகாது.

செய்யுட் கூட்ட மொட் டியவௌ சித்யமும்
சங்கட னையை நியமித் தலாகும்,
பல்வகைக் காவியத் திலங்கு சங்கடனை
பல்வகை யாச்சிறப் புற்றே நிற்றலின். (கா. 62)

கூறுவோன், கூறப்படுவது இவற்றின் அவுசித்தியம் இருப் பினும் செய்யுட்கூட்டம் தொடர்க்கூட்டம் இவற்றின் அவுசித்தியமும் சங்கடனையை நியமிக்கும். ஏனெனில், காவி யத்தின் வகைகள் பல.

அவை : ஸம்ஸ்கிருதம், பிராகிருதம், அபப்பிரம்சம் இம் மொழிகளில் இயன்ற [2] முத்தகம், [3] சந்தானிதகம், [4] விசேடகம்,

1. செய்யுட்கூட்டம் என்பது தொடர்க்கூட்டம் என்பதற்கு உபலக்கணம். இவற்றை விஷயம் என்ற சொல்லால் வடமொழி மூலநூலில் வழங்கினர்.

2. முத்தகம் = தனிப்பாடல்.

3. சந்தானிதகம் = ஒரே முற்றுவினையான் முடியும் இரண்டு செய்யுட்கள்.

4. விசேடகம் = ஒரே முற்றுவினையான் முடியும் மூன்று செய் யுட்கள்.

[1] கலாபகம், [2] குலகம், [3] பரியாயபந்தம், [4] பரிகதை, [5] சகலகதை, [6] கண்டகதை, [7] சருக்கபந்தம், நடிக்கக்கூடிய காவியம், [8] ஆக்கியாயிகை, [9] கதை முதலியன [10] ஆகும். அவற்றை ஒட்டியும் சங்கடனை வேறுபடும்.

முத்தகங்களைக் கூறுங் கவி சுவையில் ஈடுபட்டவனாயிருப்பின் அதற்குத் தகுந்த அவுசித்தியத்தைக் கொள்ளவேண்டும். அது முன்னர்க் கூறப்பட்டது. சுவையில் ஈடுபடாதிருப்பின் வேண்டியவாறு இருத்தல்கூடும். முத்தகங்களிலும் பிரபந்தங்களிற்போன்று சுவையில் ஈடுபட்ட கவிகளுமுளர். அவ்வாறுள்ள கவிகளுள் ஒருவரான அமருகரின் முத்தகங்கள் சிருங்காரச்சுவையைச் சொரிந்து காவியம்போன்றிருப்பதை எல்லோரும் அறிவர். சந்தானிதகம் முதலியவற்றில் செய்யுட்களைத்

1. கலாபகம் = ஒரே முற்றுவினையான் முடியும் நான்கு செய்யுட்கள்.

2. குலகம் = ஒரே முற்றுவினையான் முடியும் ஐந்து அல்லது ஐந்திற்கு மேற்பட்ட செய்யுட்கள்.

3. பரியாயபந்தம் = இடையிற் பலவினைகளான் முடிவு பெறினும் இளவேனில் போன்ற ஒன்றைப்பற்றி வருணிக்கப்படும் செய்யுட்டொகுதி.

4. பரிகதை = உறுதிப்பொருள்கள் நான்கனுள் ஒன்றையே குறித்துப் பலசெய்திகளை வருணிக்கும் செய்யுட்டொகுதி.

5. சகலகதை = பயனெல்லாம் முடிவுபெற இதிவ்ருத்தம் (சரிதை இவ்வாறு நடந்ததென) கூறுஞ் செய்யுட்டொகுதி.

6. கண்டகதை = செய்தியின் ஒருபகுதியைப்பற்றிக் கூறுஞ் செய்யுட்டொகுதி.

7. சருக்கபந்தம் = மஹாகாவியம்.

8. ஆக்கியாயிகை = உச்சுவாஸம் முதலிய பிரிவுகொண்ட ஹர்ஷசரிதம் போன்ற உரைநடைநூல்.

9. கதை = முற்கூறப்பட்டனவன்றி காதம்பரிபோன்ற உரைநடைநூல்.

10. முதலியன என்பது சம்புவைக் குறிக்கும்.

தொடர்புற இணைத்தல் உசிதமாகலின் நடுத்தரத்தொகை கொண்ட சங்கடனையும் நீண்டதொகை கொண்ட சங்கடனையுமே சிறந்தன; சந்தானிதகம் முதல் குலகம்வரை கொண்ட பிரபந்தங்களில் அவ்வவற்றின் ஔசித்யத்தை ஒட்டிச் சங்கடனை இருத்தல்வேண்டும். பரியாயபந்தத்தில் தொகையில் சங்கடனையும் நடுத்தரத்தொகை கொண்ட சங்கடனையுமே சிறந்தன; ஒருசமயம் பொருளின் அவுசித்தியத்தை ஒட்டி நீண்டதொகை கொண்ட சங்கடனையை வழங்கினும் பருடை[1], கிராம்மியை[2] ஆகிய விருத்திகளை நீக்கல்வேண்டும். பரிகதையில் பலசெய்திகளை மாத்திரம் வருணித்தலான் கவி சுவையில் முற்றும் ஈடுபடாமையான் சங்கடனை எவ்வாறாக வேனு மிருக்கலாம். பிராகிருதமொழியிலே பிரசித்தமான கண்டகதை, சகலகதை இவ்விரண்டும் குலகம் மிகுதியாக இருக்குமாறு இயற்றப்படுதலின், நீண்டதொகை கொண்ட சங்கடனை இருப்பினும் இழுக்காகாது. உபநாகரிகாதி விருத்திகளை மாத்திரம் சுவைக்குத் தக்கவாறு பயில வேண்டும். சருக்கபந்தம் இயற்றிய கவி சுவையில் ஈடுபட்டவராயிருப்பின் சுவைக்குத் தக்கவாறு சங்கடனை வேண்டும்; அவ்வாறு இராராயின் நினைத்தவாறு சங்கடனை இருக்கலாம்; இருவகையாகவும் கவிகள் இருக்கின்றனரன்றோ! சுவையில் ஈடுபடுதலே சிறந்த தாகும். நடிக்கப்படும் காவியத்தில் எல்லாவகையிலும் சுவையில் ஈடுபடல் வேண்டும்.

ஆக்கியாயிகை, கதை இவ்விரண்டும் உரைநடை மிகுந்த நூல்களாதலானும், உரைநடையில் செய்யுள்நடைக்கு மாறுபட்ட வழி இருத்தலானும் அவற்றை நியமித்ததற்கு ஏது முன்னர்க் கூறப்படாதிருப்பினும் இப்போது சிறிது கூறப்படும்.

முற்கூ றியவௌ சித்யந் தாமே
செய்யு ளன்றி யுரைநடை நூலி
லெங்குஞ் சங்கட னைக்கு நியாமகம். (கா. 63)

1 & 2. இவற்றின் இலக்கணத்தை முதற்கதிரில் (பக். 3) பார்க்க.

கூறுவோன், கூறப்படுவது இவற்றின் ஔசித்தியம் முற் கூறியவாறே செய்யுளின்றி உரைநடையைக்கொண்ட நூல் வகைக்குத் தக்கவாறு சங்கடனைக்கு நியாமக மாகும். இங்குங் கவியோ கவியாற் கூறப்பட்ட பாத்திரமோ சுவையில் ஈடு படாமலிருப்பின் நினைத்தவாறு சங்கடனை இருத்தல் கூடும்; சுவையில் ஈடுபட்டிருப்பின் முற் கூறப்பட்ட ஔசித்தியத் தையே அனுசரித்தல் வேண்டும். ஆங்கும் உரைநடை வகைக்குத் தக்கவாறுள்ள ஔசித்தியம் பின்வருமாறு :—

உரைநடை தொடர்புற்றிணைக்கப்பட்டிருப்பின் அழகு தருதலானும், ஆங்கு அது சிறப்புற்றிருத்தலானும் ஆக்கியா யிகையில் பெரும்பாலும் நடுத்தரத்தொகைகொண்ட சங்க டனையும் நீண்ட தொகைகொண்ட சங்கடனையுமே சிறந்தன. கதையில் தொடர்பிணைப்பு மிகுதியாயிருப்பினும் சுவையை யொட்டி ஔசித்தியம் கொள்ளுதல் வேண்டும்.
[1] சித்தாந்தத்தில்,

> உரைநடை நூலிற் சுவையினோள சிதியை
> விரவி னிரசனை யெங்கும் விளங்கும்
> சொற்செறி வகையை யோட் டித் தொடரின்
> சிறப்புறுஞ் சில்விதத் தென்பது தெளிவே. (கா. 64)

உரைநடைநூலிலும் செய்யுள்நடைநூலிற்போலச் சுவையின் ஔசித்தியத்தை ஒட்டிய சங்கடனையே எங்கும் விளங்கும். சொற்செறிவுவகைக் குரிய ஔசித்தியத்துடன் ஒட்டி யிருப்பின் சிலவகையிற் சிறப்புறுமேயன்றி எல்லாவகையிலுஞ் சிறப்புறுது. உதாரணமாக உரைநடைநூலில் விப்பிரலம்ப சிருங்காரம் கருணம் இச்சுவைகளைக் கொண்டிருப்பின், ஆங்கு வெகுநீண்ட தொகை கொண்ட சங்கடனை விளக்க முறுது; ஆக்கியாயிகைவகையிலும் அவ்வாறே. நாடகம் முதலிய வற்றில் தொகையில்சங்கடனையே சிறக்கும்; ரவுத்திரம் வீரம் முதலியவற்றை வருணிக்கும்போதோ அது சிறவாது. சொற்செறிவுவகையில் சங்கடனையின் ஔசித்தியம் சுவை

1. சித்தாந்தம் = ஆசிரியரின் முடிவு.

## தொனிவிளக்கு

யௌசித்தியத்தை யொட்டிச் சிறந்தும் சிறவாதும் நிற்கும்; ஆக்கியாயிகையில் கருணவிப்பிரலம்பத்திலுங்கூட முழுவதும் தொகையில்சங்கடனையும், நாடகம் முதலியவற்றில் வீரம், ரவுத்திரம் முதலியவற்றிலுங்கூட வெகுநீண்ட தொகை கொண்ட சங்கடனையுஞ் சிறவா. இவ்வாறு சங்கடனையின் தன்மையைக் கொள்ளல்வேண்டும்

மனமகிழ்ச்சியைத் தரும் இந்த காவியார்த்தவிவேகம் ஆநந்தவர்த்தனரிடமிருந்து தொடங்கியது என்பது ஸாரத்தையே நோக்கும் புலவரால் மறக்கற்பாலதன்று.

பிரபந்தம் நிமித்தமாயிருக்க முறையில்தோற்றத்தொனி விளங்குவது வான்மீகிராமாயணம், வியாஸமஹாபாரதம முதலியவற்றுள் நன்கு அறியப்படும், அது எங்ஙிலையில் தோன்றுமென்பது ஈண்டு கூறப்படும்.

விபாவ மனுபாவ முதலிய வற்றின்
ஔசித் யத்தா லழகினைப் பெறும்
பழைய கதையினும் புனையுறு கதையினும்
உடலைச் செய்தலு முன்னர் வழங்குங்
கதையிற் றகுதி யற்றதை நீக்கித்
தகுதி யுள்ளதைப் புதிதா நுழைத்தலும்
நாடகச் சந்தி, சந்தியங் கங்களைச்
சுவையை யொட்டி யன்றி நாடக
விலக்கண மார்க்கம் நிலைக்கவேண் டுமென
அச்சுவைக் கியைபில வமைக்கா திருத்தலும்
அங்கிச் சுவையைத் தக்கவா றிடையில்
வளர்த்துந் தளர்த்து மங்கச் சுவையான்
அமுங்கிய வங்கியை யநுஸந் தித்தலும்
அணியை யமைக்க ஆற்ற லிருப்பினும்

1. முதலிய என்பது பாவம், ஸஞ்சாரிபாவம் இவற்றைக் குறிக்கும். பாவம் = ஸ்தாயீபாவம்.

## மூன்றாங்கதிர்

சுவைக்குத் தக்கவா றவற்றை யமைத்தலும்
பிரபந்தஞ் சுவைக்கு வியஞ்சகமா நிபந்தனம்.[1]
(கா 65-69)

பிரபந்தமும் சுவை முதலியவற்றிற்கு வியஞ்சக மென்று கூறினோம். அது சுவைக்கு வியஞ்சக மாதற்கு முதலாவது நிபந்தனம், வருணிக்க விரும்புகின்ற சுவை பாவம் முதலியவற்றிற்குத் தக்க விபாவம், பாவம், அனுபாவம், ஸஞ்சாரிபாவம் இவற்றின் ஔசித்தியத்தால் அழகுபெற்றதாகக் கதையுடலைச் செய்தல்: அவற்றுள் விபாவத்தின் ஔசித்யம் உலகிலும் பரதநாட்டியசாஸ்திரத்திலும் வெளிப்படையாய்த் தெரியும்; பாவத்தின் ஔசித்யம் பிரகிருதியின்[2] ஔசித்யத்தை ஒட்டியது; பிரகிருதி, உத்தமம், மத்திமம், அதமம் எனவும், தேவப் பிரகிருதி, மனிதப்பிரகிருதி எனவும், பலவகைப்படும். அப்பிரகிருதியை அனுசரித்துக் கலப்பின்றி யிணைக்கப்படும் ஸ்தாயீபாவம் தக்கதா யிருக்கும். அவ்வாறின்றிக் கேவல மனிதரிடத்தில்[3] தேவர்களின் உற்சாகம் முதலியவற்றையும் கேவலதேவரிடத்தில்[4] மனிதர்களின் உற்சாகம் முதலியவற்றையும் வருணித்தல் தகாதது ஆகும். அவ்வாறே கேவல மானிடப்பிறப்பா யிருக்கும் அரசனிடத்தில் எழுகடலைத் தாண்டல் முதலிய செயலை வருணித்தல் சிறந்ததா யிருப்பினும் சுவையற்றதாகவே திண்ணமாய் விளங்கும். அதற்குக் காரணம் ஔசித்யமின்மையே. சாதவாஹனன் முதலியோ

1. நிபந்தனம் (எது) ஐந்து ஆகும் :—(1). கதையினும் உடலைச் செய்தலும் வரை முதல் நிபந்தனம்: (2) நுழைத்தலும் வரை இரண்டாம் நிபந்தனம்: (3) அமைக்காதிருத்தலும் வரை மூன்றாம் நிபந்தனம்: (4) அநுஸந்தித்தலும் வரை நான்காம் நிபந்தனம்: (5) அமைத்தலும் வரை ஐந்தாம் நிபந்தனம்.

2. பிரகிருதி = பாத்திரங்களின் தன்மை.

3. கேவலமனிதர் = தெய்வத்தன்மை கலப்புறாத மனிதத்தன்மையுடையோர்.

4. கேவலதேவர் = மனிதத்தன்மை கலப்புறாத தெய்வத்தன்மையுடையோர்.

ரைப்பற்றி நாகலோகத்திற்குச்[1] செல்லுதல் முதலியன கூறப்பட்டிருத்தலின், புவியனைத்துங் காக்கு மாற்றலுடைப்பேரரசரிடத்துப் பொதுமக்களிடங் காணப்பெறாத அரும்பெரும் பிரதாப முதலியவற்றைக் கூறுதலில் ஔசித்யமின்மையுாதெனின்; அற்றன்று, பேரரசரிடம் பேராற்றலை வருணித்தல் தகாதது எனக் கூறவில்லை. கேவலமனிதனைப் பற்றிப் புதிதாப் புனையப்பட்ட கதையில் அவனிடம் தெய்வத்தன்மையவுசித்தியத்தை இணைத்தல் தகாது எனவே கூறினோம். எங்குக் கதை தெய்வத்தன்மை பொருந்திய மானிடனைப்பற்றியதோ ஆங்கு இருதன்மையின் அவுசித்தியத்தை இணைத்தல் இழுக் காகாது. இதற்கு உதாரணம் பாண்டவர்கதையில் காணலாம். சாதவாகனன் முதலியோரிடத்தில் அவர் செய்த திவ்வியச்செயலை யொட்டி அவ்வாறே கூறின், அது தக்கதேயாகும்; அதற்குமேல் அவரைப்பற்றி வருணிப்பின், அது தகாததாகும். ஆதலின் ஈண்டு உண்மைக்கொள்கை யாதெனின்,

ஔசித் யமின்மை யைத்தவிர்த் தியாதொன்றும்
சுவைக்கேடு தனக்கே காரண மாகாது.
[2]சுப்பிர சித்தௌ சித்ய பந்தமே
சுவைக்குச் சிறந்த மறையா மென்ப.

ஆகலினன்றே நாடகத்தினுள்ள வஸ்து நன்கு அறியப்பட்டதாயும் நாயகன் நன்கு அறியப்பட்ட உதாத்தனாகவும் இருத்தல்வேண்டு மென பரதசாஸ்திரங் கூறும். ஆங்கு நாயகன் விடயத்தில், இஃது உசிதம் இஃது அனுசிதம் எனப் பகுத்தறிவதில் கவி மயங்கார். எவன் வஸ்து புதிதாய்ப் புனையப்படும் பிரகரணம்[3] முதலியவற்றில் ஒருவரு மறியாத நாயகனுடைய தன்மையை வருணிக்கின்றானோ அவனுக்குத் தவறு மிகும்.

1. நாகலோகம் = नाकलोकः, नागलोकः

2. சுப்பிரசித்தௌசித்யபந்தம் = எல்லோரும் நன்கு அறியும் அவுசித்தியத்தையொட்டி யியற்றப்பட்டது.

3. முதனூலில் नाटकादि என்பது பாடம். அதனைத் தற்குணசம் விஞ்ஞானவெகுவிரியனாகக் கொள்ளின், நாடகத்தில் வஸ்து புதிதாய்ப் புனையப்படாது எனத் தொடர்க்கு வருந்திப் பொருள் கொள்ளல் வேண்டும். ஆகலின் அதனை அதற்குணசம்விஞ்ஞானவெகுவிரியனாகக் கொண்டனர் அபிநவகுப்தர். नाटिकादि என்பதும் பாட முண்டு என்பர்.

உற்சாகம் முதலிய பாவங்களை வருணிக்கும்போது இது தேவற் குரித்தா இது மானிடர்க் குரித்தா என்று ஆராய்தல் நிகழின் நிகழுக; [1] ரதி முதலியவற்றையோ இந்தப் பரத நாட்டிற்கு உரித்தான வழக்கை யொட்டியே தேவர்களுக்குங் கூறவேண்டுமாதலின், ஆங்கு அவ்வாறு ஆராய்வதிற் பயனொன்று மில்லையே எனின்: அற்றன்று, ஆங்கு ஔசித்யத்தை மீறி வருணித்தாற் பெருங்குற்றம் விளையும். அதனைப் பின் வருமாறு விரிவாய் விளக்கிக் கூறல் தகும்:—கீழ்மக்கட்குத் தகுந்த சிருங்காரச்செயல்களை மேன்மக்கட்கு ஒருவன் கூறின், யார்தான் இகழார்? இந்தப் பரதநாட்டிலும் சிருங்கார விடயத்தில் மக்கட்குரிய ஔசித்யம் பலவகைப்பட்டுள்ளது. தேவர்களுக்குரிய ஔசித்யம் வேறெனக் கொள்ளின், அது ஈண்டுப் பயன்படாதெனின்: அற்றன்று, தேவர்களுக்குரிய ஔசித்யம் வேறென யாம் கொள்ளவில்லை. பரதநாட்டின் மேன்மையுற்ற நாயகராகிய அரசர்க் குரியதே தேவர்க்கு மெனக் கொள்ளின் சிறக்கும். நாடகம் முதலியவற்றில் பேரரசர்களின் சிருங்காரத்தை வருணிக்கும்போது கீழ் மக்கட்குரிய கிராமியச்சிருங்காரத்தை எவ்வாறு வருணிப்பதில்லையோ, அவ்வாறே தேவர்களை வருணிப்பதிலும் அதனை நீக்கல்வேண்டும். நாடகம் முதலியன நடிக்கப்படுவதாலும், நடிக்கப்படுதற்கு விடயம் சம்போகசிருங்கார மாகாமையானும் ஆங்கே நீக்கல்வேண்டும் எனின், அற்றன்று, நாடகத்துள் அது தகாதெனின், காவியத்துள்ளும் அது தகாதென்பதை யார் தடுத்தல்கூடும்! ஆகலின், நடிக்கப்படும் நூல்களிலும் காவியங்களிலும் மேன்மக்களாகிய அரசர்கட்கு மேன்மைபொருந்திய அரசிகளுட னுள்ள சம்போகசிருங்காரத்தைக் கீழ்மக்கட் குரியனவற்றால் வருணிப்பின், அது தாய்தந்தையரின் சம்போகத்தை வருணிப்பதுபோன்று மிகப் பொருந்தாதது ஆகும். மேன்மையுற்ற தேவதைகளுடைய அந்தச் சிருங்காரத்தை வருணிப்பதும் அவ்வாறனதே. சம்போகசிருங்காரம் புணர்ச்சியாகிய ஒருவகையையே யுடையது எனக் கூற இயலாது. அதனில் நாயகநாயகிகளின் அன்புறுநோக்கல், முதலிய பல வகைகள் உள. அவற்றை மேன்மக்களிடத்து ஏன் வருணித்

1. சிருங்காரச்சுவையின் ஸ்தாயீபாவம் ரதியாகும்.

தல் கூடாது? ஆகலின் உற்சாகத்திடத்துப்போல் ரதியிலும் பிரகிருதியவுசித்தியத்தைக் கவனித்தல்வேண்டும். அவ்வாறே விஸ்மயம்[1] முதலியவற்றிலுங் கவனித்தல்வேண்டும்.

இவ்வாறுள்ள விடயங்களில் பெருங்கவிகளும் தவறியது இலக்கியங்களில்[2] காணப்படுகின்றது; அது பிழையே யாகும். ஆயினும் அத்தவறுகள் அவர்களுடைய பிரதிபைவிசேடத்தான் மறைவுபட்டு நமக்குப் புலப்படவில்லை, என முன்னரே கூறினோம்.

அனுபாவத்தின் ஔசித்யம் பரதநாட்டியசாஸ்திரம் முதலியவற்றுள் கூறப்பட்டது. ஆயினுஞ் சிறிது ஈண்டுக் கூறப்படும்:—நாட்டியசாஸ்திரத்திற் கூறப்பட்டதை மனத்துள் வைத்துக்கொண்டும், பெருங்கவிகளின் நூல்களை ஆய்ந்தும், தன்னுடைய பிரதிபையை அனுசரித்தும் இருக்கின்ற கவியால் விபாவம் முதலியவற்றின் ஔசித்யம் தவறாது இருக்குமாறு கண்ணுங்கருத்துமாய் அவற்றிலே ஈடுபடுமாறு முயற்சி செய்யப்படல்வேண்டும்.

வழங்கப்பட்ட கதை, அல்லது புதிதாய்ப் புனையப்பட்ட கதை இவ்விரண்டின் அவுசித்தியமுறுமுடலைக் கவி கொள்வது சுவையின் வியஞ்சகத்து ளொன்று, என்றதனாற் பெறப்பட்ட பொருள் யாதெனின், இதிகாசம் முதலியவற்றுள் சுவை பெருக்குங் கதைகள் பல இருப்பினும், அவற்றுள் காவியத்தின் விபாவம் முதலியவற்றின் அவுசித்தியம் பொருந்திய கதையுடலையே கொள்ளல்வேண்டும், பொருந்தாதன

1. விஸ்மயம் அற்புதத்திற்கு ஸ்தாயீபாவம்.

2. காளிதாஸனது ரகுவம்சம் எட்டாவது சருக்கத்தில் இல்லறத்துள்ள அஜனைப்பற்றியும் துறவறத்துள்ள ரகுவைப்பற்றியும் ஒரே சுலோகத்தில் வருணித்தலும், ஸந்நியாஸியாகிய ரகு (समुपास्यत पुत्रभोग्यया स्नुषयेवाविकृतेन्द्रियः श्रिया) ஐம்புலனை யடக்கியவர் மணமுடிப்பெண் போன்ற திருவால் உபாஸிக்கப்பட்டார் என்று கூறுதலும் ஔசித்தியத்திற்குக் குறைவாதல் கூடும்.

வற்றை நீக்கலும்வேண்டும். ஏற்கனவே வழங்கப்பட்ட கதைகளிடத்திற்காட்டிலும் புதிதாய்ப் புனையப்பட்ட கதைகளில் ஔசித்யம் தவறாது இருக்கக் கவிஞன் பெருமுயற்சியெடுத்தல் வேண்டும். ஆங்கு அசாக்கிரதையால் தவறுங் கவியை முன் பின்னாய்தல்வன்மையற்றவன் எனப் பலருங் கருத இடம் தரும். இப்பொருளைக் கொண்ட பரிகரச்செய்யுள் :—

கதையுடல் கற்பிக்கி னுங்கது முற்றுஞ்
சுவைமய மாதல்வேண் டும்.

ஆங்குச் சிறந்த உபாயம் விபாவம் முதலியவற்றின் ஔசித்தியத்தை யொட்டிக் கூறுகையே யாகும். அஃதும் முன்னர்க் காட்டப்பட்டதே.

அன்றியும்,

எளிதிற் சுவையோழுகு மிராமா யணாதி
ஒட்டிய கதைளுட் சுயேச்சை யாலே
சுவைக்கு மாறாப் புனைதல் வேண்டா. (கா. 70)

அவ்விதிகாசக்கதைகளுள் தம் விருப்பப்படி புதிதாய் ஒன்றைச் சேர்த்தல் தகாது. ஏனெனில், கதைவழியில் அதிக்கிரமங் கூடாது[1] என்பது பெரியோர் வாக்கன்றோ? ஒருகால் சேர்ப்பினும் அஃது ஆங்குள்ள சுவையை யொட்டி அதற்குப் பொருந்தியிருத்தல் வேண்டுமே யன்றி, அதற்கு மாறாக இருத்தல் கூடாது.

பிரபந்தம் சுவைக்கு வியஞ்சக மாதற்குப் பின் கூறப் படுவது இரண்டாம் நிபந்தனம் ஆகும். அஃதாவது முன்னர் வழங்கப்பட்டுள்ள கதையில் ஒரு பகுதி தற்போது இயற்றப்

1. कथामार्गे न चातिक्रमः என்ற செய்யுட்பகுதி முதனூலிற் கூறப் பட்டுளது. அது போஜன் இயற்றிய சிருங்காரப்பிரகாசத்தில் O. M. L. M II 411 பக்கத்தில் உதாகரிக்கப்பட்ட “औचित्यं वचसाम्” என்று தொடங்கும் செய்யுளின் முற்பகுதியிற் காண்க. இச்செய்யுள் யசோவர்மன் இயற்றிய இராமாப்யுதநாடகத்தின் பிரஸ்தாவனையில் இருக்கலா மென்பது என் ஆசிரியரது கொள்கை.

படும் காவியத்தின் சுவைக்கு மாறுகக் காணப்படின், அதனை நீக்கி அச்சுவைக்குத் தக்க புதியதொரு பகுதியைப் புனைந்துரைத்தலும் தகும். இதற்கு உதாரணம் காளிதாஸன் இயற்றிய நூல்களிலும், ஸர்வஸேனன் இயற்றிய ஹரிவிஜயத்திலும், ஆநந்தவர்த்தனர் இயற்றிய அர்ச்சுனசரிதமாகிய பெருங்காவியத்திலும் உள்ளன. நூல்களை இயற்றும்போது கவி எல்லா வகையானுஞ் சுவையில் ஈடுபட்டவருகவே இருத்தல் வேண்டும். பழங்கதையில் சுவைக்குப் பொருந்தாத இடத்தைக் காணின், உடனே அதனை நீக்கியாவது சுதந்திரமாக ஒரு பகுதியைப் புதிதாக இணைத்தல் வேண்டும். கவி இதிகாசத்துள் உள்ளவாறே கதையை மாத்திரங் கூறின், அக்கதை இதிகாசத்துள்ளே காணப்படுகின்றமையான் அவரது காவியத்தாற் பயன் ஒன்று மில்லை.

பிரபந்தம் சுவைக்கு வியஞ்சக மாதலில் மூன்றும் நிபந்தனமாவது :—[1] முகம், பிரதிமுகம், கர்ப்பம், அவமரிசம், நிர்வஹணம் என்ற நாடகச்சந்திகளையும் அவற்றின் அங்கமான உபக்ஷேபம் முதலியவற்றையும் ரத்நுவளியிற்போல் சுவைக்குப் பொருந்துமாறு இணைத்தலும், [1] வேணீஸம்ஹாரத்தில்

1. வடமொழி நாடகத்துள் ஐந்து பகுதிகள் உள. அவை.— முகம், பிரதிமுகம், கர்ப்பம், அவமரிசம், நிர்வஹணம் என்பனவாம் முகம் = நாடகக்கதையாகிய மரத்திற்கு விதைபோன்ற பகுதி யாகும். பிரதிமுகம் என்பது அவ்விதை சிறிது வெளிப்பட்டுக் கிளம்பிப் புறத்தோர்க்குத் தோன்றலும், சிறிது வெளிப்படாதலு மாகிய பகுதி யாகும். கர்ப்பம் = முளைத்த விதை சில இடையூறுகளான் மறைய அதைத் தேடும் பகுதி யாகும். அவமரிசம் = விதை மரமாகிப் பழுக்கும் உபாயத்தைக் கூறும் பகுதி யாகும். நிர்வஹணம் = அவ்விதை மரமாகிப் பழுத்ததா லுண்டாம் பயனைக் கூறும் பகுதி யாகும். உபக்ஷேபம் என்பது விதையைத் தெளிக்கும் சிறு பகுதி யாகும். விலாஸம் என்பது புணர்ச்சியை வேண்டி நாயகநாயகியர் ஒருவர் ஒருவரிடம் வரும் சிறு பகுதி யாகும். சந்தி, முகம், பிரதிமுகம் முதலியன பொருளொடு பொருந்தும் பெயர்கள். கதையுடலின் முக்கிய பகுதிகட்குச் சந்தி என்பெயர். உபக்ஷேபம் விலாஸம் முதலியன பகுதிகளின் உட்பகுதிகள். அவற்றிற்குச் சந்தியங்கமெனப் பெயர்.

பிரதிமுகசந்தியில் விலாஸம் என்ற அங்கத்தை, கவி கொண்ட சுவைக்கு மாறாக இருப்பினும் நாடகவிலக்கணத்தையே முற்று மனுசரிக்கவேண்டு மென, இணைத்தல்போல் இணைக்காமையு மாம்.

பிரபந்தம் வியஞ்சக மாதலில் நான்காம் நிபந்தனை யாவது:-

[2] ரத்தினுவளியிற்போல் ஔசித்தியத்திற்குத் தக்கவாறு சுவையை நடுவில் வளர்த்தலும் தணித்தலும், தாபஸவத்ஸ ராஜத்திற்[3] போல் கதைவரலாற்றால் முறிவுற்றதோ என ஐயுறுமாறு நிற்கும் அங்கிச்சுவையை நினைப்பூட்டுதலு மாம்.

கவிக்குப் பலவகையணிகளை யமைக்க ஆற்றலிருப்பினும் சுவைக்குத் தக்கவாறு அணியை அமைத்த லென்ற இதுவும் பிரபந்தவிசேடமான நாடகாதிக்குச் சுவையை விளக்கமுறுவிக்க மற்றொரு நிபந்தன மாகும்:-கவிகள் ஆற்றலோடு இருப்பினும் சிலசமயம் அணியமைத்தலிலே ஈடுபட்டுச் சுவையைப் பேணாது நூல்களை இயற்றத் தொடங்குகின்றனர். அவரைக் கருதி இது கூறப்பட்டது. அணியிலே மூழ்கிச் சுவையை மறந்து நூல்களியற்றும் கவிகள் பலர் உளர்.

அன்றியும்,

மணியொலி யொத்த தொனியுந் தானே
இலங்கச் சிற்சில பிரபந்த நிமித்தமா
விளங்குஞ் சுவையாந் தொனி யதுவழியே. (கா. 70)

1. வேணீஸம்ஹாரம் பட்டநாராயணன் இயற்றிய நாடகம். பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் போர் நிகழ்ந்துகொண்டிருக்க, போரில் துரியோதனன் வெற்றிபெறவேண்டு மென்று அவன் மனைவியாகிய பானுமதி விரதம் பூண்டிருக்க, அப்போது அபிமன்யு இறந்தானெனச் செய்தியைத் தன் மனைவிக்குக் கூறி அவளுடன் மகிழவேண்டும் எனத் துரியோதனன் அவளிருக்கு மிடம் செல்லுகின்றான். மனைவி விரதம் பூண்டிருக்கும்போது கணவன் புணர்ச்சியை நோக்கி வருதலும், போர் நிகழ்ந்துகொண்டிருக்கும்போது புணர்ச்சியைப்பற்றி நினைத்தலும் மிகத் தீகாதன வாகும் என்பது வெளிப்படை.

2. ரத்தினுவளி = ஹர்ஷன் இயற்றிய நாடிகை.

3. தாபஸவத்ஸராஜம் = மாயூராஜன் இயற்றிய ரூபகம்.

கருதிவேறின்னோக்குந்தொனியின் பிரிவும் இருவகையாகக் கூறப்பட்டதுமான மணியொலியொத்ததொனி சிற்சில பிரபந்தம் நிமித்தமா யிருக்க விளங்கிச் சுவைத்தொனியைத் தோற்றுவிக்கும். அவ்விடங்கள் மதுமதனவிஜயத்திலுள்ள பாஞ்சசன்னியன்கூற்றும், ஆனந்தவர்த்தனரே[1] இயற்றிய விஷமபாணலீலையில் மன்மதனுக்கு அவன் தோழனுடன் சேர்க்கையும், வியாஸமகாபாரதத்தில் கழுகுநரிஸம்வாதமும்[2] முதலியன ஆகும்.

வேற்றுமை யுருபான் வினையின் விகுதியான்
வேற்றுமைப் பொருளை விளம்புஞ் சொல்லான்
[3] கிருத்தத் திதனெனும் விகுதியாற் பிறவான்[4]
[5] தொகையா னுடன்தோற்றத் தொனிவிளங் கும்மே.
(கா. 71)

முறையில் தோற்றச்சுவைத்தொனி, வேற்றுமையுருபுகளாலும், வினைவிகுதிகளாலும், வேற்றுமைப்பொருளைக் கூறுஞ் சொற்களாலும், கிருத்து, தத்திதன் என்ற விகுதிகளாலும் தொகையாலும் மற்றும் இடைச்சொல் முதலியவற்றானும் தோன்றும். உ-ம்.

இஃதேயோ ரவமான மெனக்கும் பகைஞரென
வாங்கும வனொரு தாபசனும்
இங்கேயே யவனுமே யழிக்கின்று னிராக்கத
குலத்தை யிராவணனுஞ் சீவிக்கும்

1. ஏகாரத்தின் பொருள் :—மதுமதனவிஜயம், விஷமபாண லீலையின் ஒரு பகுதி என்பது. இது லோசனவுரையால் அறியப் படுகின்றது.

2. சாந்திபர்வம் 152 ஆவது அத்தியாயம்.

3. தாதுவினின்றும் பெயர்ப்பகுதியாதற்குத் தாதுவிற்குச் சேர்க்கும் விகுதி கிருத்தாகும். பெயர்ப்பகுதியினின்றும் மற்றோர் பெயர்ப்பகுதியுண்டாக அதற்குச் சேர்க்கும் விகுதி தத்திதனாகும்.

4. பிற என்பது இடைச்சொல் முதலியவற்றைக் குறிக்கும்,

5. தொகை = ஸமாஸம்.

இந்திரனைச் சயித்தலாலென் கும்பகரு ணனும்விழித்
திருத்தலாலென் சுவர்க்கத் தைக்குக்
கிராம மேய்ப்பகன் கிழித்து வீணே
பெருத்த இக்கைகளாற் றுமென்.[1]

இச்செய்யுளுள் பெரும்பான்மை எல்லாப்பகுதியும் வியஞ்சக மாதல் வெளிப்படை. ஆங்கு எனக்கும் பகைஞர் என்ற விடத்து வேற்றுமையுருபு, கு உருபின் கிழமைப்பொருள், பன்மைவிகுதி, உம்மை இவையும், ஆங்கும வனொரு தாபசனும் என்றவிடத்து உம்மையாகிய இடைச்சொல்லும், தாபசன் என்றவிடத்துள்ள தத்திதப்பிரத்தியமும் வியஞ்சக மாகும். இரண்டா மடியில் அழிக்கின்றான். சீவிக்கும் என்றவிடத்

1. முதற்போரில் இராமபிரான் இராக்கதகுலத்தை அழிக்க அப்போது இராவணன் கூறுவது இது:—எனக்கும் பகைஞர் என்பது ஒரு பெரிய அவமானம். எனக்கும் என்றவிடத்துள்ள உம்மை இராவணன் முன்னர்க் குபேரனை அடக்கியதும், கைலாயமலையை அசைத்ததும் போன்ற சிறப்புச்செயல்களைச் செய்தவனென்பதைக் குறிக்கும் எனக்கும் பகைஞர் என்பது, தனக்குப் பகைஞர் இருத்தல் தகாது என்பதைக் குறிக்கும்; பகைஞர் இருப்பின், அவன் தன்னை யான் எனக் கூறுதல் தகாது என்பதையுங் குறிக்கும். அவன் என்பது அவனிடத்தில் இவனுக்குள்ள அவமதிப்பைக் குறிக்கும். இங்கேயே, அவனுமே என்ற விடத்துள்ள ஏகாரம் செயலின் தகுதியின்மையைக் குறிக்கும். இராவணனும் என்றவிடத்துள்ள உம்மை தன்னிடமுள்ள இழிவைக் குறிக்கும். சயித்தலாலென் விழித்திருத்தலாலென் என்ற இடத்துள்ள என் என்பது அவற்றின் பயனின்மையைக் குறிக்கும். வீணே என்பது தன்னிடத்தில் இழிவைக் குறிக்கும். கைகளால் என்றவிடத்துப் பன்மை அவை பூமிக்குப் பொறையே யன்றி அவற்றால் வேறொரு பயனு மில்லை என்பதைக் குறிக்கும். எனக்கும் என்ற விடத்து கு உருபின் கிழமைப்பொருள் தகாத பொருள் தன்னுடன் இயைபுபட்டது என்பதைக் குறிக்கும். கு‌க்கிராமம் என்றவிடத்து கு என்பது தன் ஆற்றல்மிகுதியைக் குறிக்கும். இச்செய்யுளில் இங்ஙன் ஒவ்வொரு பகுதியும் வியஞ்சகமாதலை அவரவர் ஆய்ந்து அறிந்து கொள்க. இங்குத் தோன்றுந் தொனி இராவணனது சின மாகும்.

துள்ள வினைவிகுதிகளும் இராக்கதகுலம் என்றவிடத்துள்ள தொகையும் வியஞ்சகமாம். ..குக்கிராமம் என்றவிடத்து அதன் ஒருபகுதியாகிய கு என்பது வியஞ்சகமாகும் இவ்வாறு எல்லாப்பகுதிகளும் வியஞ்சக மாகுமாறு காவியஞ் செய்யப் படின், அது மிகவும் சிறப்புற்று விளங்கும். எச்செய்யுளுள் ஒரே சொல் வியஞ்சக மாயிருக்குமோ அதனையே சிறந்தது எனச் சொல்லும்போது, எல்லாப்பகுதியும் வியஞ்சக மாயிருப் பின் அச்செய்யுள் மிகச் சிறந்ததெனக் கூறவும் வேண்டுமோ? அதற்கு உதாரணம் இச்செய்யுளே யாகும். ஈண்டும் இராவணன் என்பது அர்த்தாந்தரசங்கிரமிதவாச்சியத்தொனி யால் அழகு பெறினும், மற்றும் ஏனைய வெல்லாமும் வியஞ்சக மாதல் வியக்கத்தக்கதாகும். மேன்மையுற்ற பிரதிபையொடு விளங்கும் மகான்மாக்களின் செய்யுட்கள் பெரும்பான்மையும் இவ்வாறுதான் உள. இவற்றிற்கு உதாரணம் வியாஸமகா பாரதத்திலும், காளிதாஸனின் நூல்களிலும், காதாஸப்தசதி, ஸௌரியசதகம் முதலியவற்றிலுங் காண்க.

* 1

வியஞ்சகமாதலைக் குறித்துச் சிலவிடத்துக் கூறியதையே கூறுதல் பேரழகைத் தரும். உ-ம்.

"வஞ்சனையே குடிகொண்ட மனத்துடைப் போக்கிலிகள் காரியக்குறியராய்ப் பல்வகை இனிய சொற்கள் அமைத்த பொய்மொழியைக் கூறுதலைச் சாதுக்கள் அறிந்திலரில்லை; அறிந்தனரே; ஆயினும் அவரது விருப்பம் வீணாய்ப்போகு மாறு செய்வதில் இவர் ஈடுபடுவதில்லை."

ஈண்டு அறிந்திலரில்லை அறிந்தனரே என்றதனுன் நன்கு அறிந்தனர் என்ற பொருள் குறிக்கப்படும்.

1. கிருத்து, தந்திரம் முதலிய பிரத்தியயங்கள் தமிழில் வழங்கப் படாமையின் அவை, வியஞ்சக மாதலைக் கூறும் பகுதிகள் தமிழில் மொழிபெயர்க்கப்படவில்லை.

காலம் வியஞ்சகமாதற்கு உதாரணம்:—

"சமனுஞ் சமனின்றியும் அமைந்தும் எங்கும் மெல்ல மெல்லச் செலற்குரிய வழிகள் விரைவில் மனோரதங்களாலுங் கடத்தற்கு அரியன வாய்விடும்."

ஈண்டு ஆய்விடும் என்றவிடத்துள்ள எதிர்காலம் சுவையைப் பெருக்கும். இதன் பொருள் பிரிவான் நிகழ்ந்த விப்பிரலம்பசிருங்காரத்திற் குரிய விபாவத்தைக் குறிப்பதாகி மிக்க சுவையுற்றதாகும்.

ஈண்டு எவ்வாறு விகுதி வியஞ்சக மாயிற்றோ அவ்வாறு பகுதியும் வியஞ்சகமாதற்கு உதாரணம்:—

"இடிசுவர்த் தம்மனை யிம்மனை வானினை
யெட்டுமவ்வான்
கடிமுதிர் வுற்றதிக் கன்றுகள் கார்நிறக்
களிற்றினங்காண்
ஓடியுலக் கையொலி யஃதிதின் மகளிர்பண்
ணுய்வியப்பே
படியினிற் சிலதினத் திருபிறப் பினனிவன்
பயிலினிலையே." [1]

ஈண்டு தினத்து என்ற சொல்லின் பகுதியாகிய தினம் வியஞ்சகமாகும். ஈண்டே சுட்டுப்பெயர்களும் வியஞ்சகமாதல் வேண்டும் எனக் கருதியே கவி 'அஃதெங்கே" என்ற தொடரை வழங்காராயினர். இவ்வாறே வியஞ்சகங்கள் ரஸிகர்களால் தம்மறிவுகொண்டு காணப்படவேண்டும்.

1. இச்செய்யுள் கண்ணபிரான்தோழராகிய குசேலருடைய இருநிலையைப் பற்றியது. மூன்றடிகளிலும் முற்பகுதி அவர் கண்ண பிரானைக் காண்டற்கு முன்னிருந்த நிலையையும், பிற்பகுதி அவரைக் கண்ட பின்னரிருந்த நிலையையுங் குறிக்கும். இடிசுவர்த்து என்ற சொல்லின் பகுதியோடு கூடிய அம்மனை என்ற சுட்டுப்பெயர், அஃது எல்லாத்துன்பத்திற்கும் இடமாய்ப் பாம்பு முதலியவற்றால் சூழப்பட்டு, குழந்தைகள் மழைக்காலத்து மழையானும், வெயிற்காலத்து வெயிலானும் பனிக்காலத்துப் பனியானும் வருந்துமாறு இருந்தது என்பதைக் குறிக்கும். வானினையெட்டும் என்றதனோடு கூடிய இம்மனை என்பது

இவையெல்லாம் முன்னரே சொல் தொடர் சங்கடனை இவை நிமித்தமாயிருக்க, முறைத்தோற்றத்தொனி விளங்கும் என்பதை விரிவாய்க் கூறியவிடத்துப் பெறப்படினும், வேறு வகையான் அவற்றை அறிதற்காகப் பின்னருங் கூறப்பட்டன.

"பொருளின் ஆற்றலால் சுவை விளங்கும் என முன்னர்க் கூறப்பட்டமையான், வேற்றுமையுருபு முதலிய சொல்லுறுப்புக்கள் அச்சுவைக்கு வியஞ்சகமாகும் எனக் கூறுதல் பொருந்தாது" எனின்: அற்றன்று, அதற்கு விடை முன்னரே சொல் வியஞ்சக மாகும் என உணர்த்தியவிடத்திற் கூறப்பட்டது. அன்றியும், சுவை பொருளாற்றலான் விளங்கினும், அப் பொருள்விசேடங்கள் சொற்களைவிட்டுத் தனித்திராமையின், சொற்களையும் தனித்து வியஞ்சகமாக நினைத்து அனுபவித்தல் தவறாகாது. ஓரிடத்துச் சொற்களின் அழகும் வேறிடத்து அழகின்மையும் பிரித்துக் கூறியது அவை வியஞ்சக மெனக் கருதியே யாகும். எங்கு அவற்றி னழகு நன்கு விளங்க வில்லையோ, ஆங்கும் அவை வேறிடத்து வியஞ்சகமாய் அழகு பெற்றதை மனத்துள் நினைத்து நினைத்துப் பழகியவர் அழகுற்றன எனக் கொள்கின்றனர் எனக் கூறல்வேண்டும். அவ்வாறு கொள்ளாவிடின், ஒருசொற்கு வாசகத்தன்மை ஒரேவிதமாயிருக்க, ஓரிடத்து அழகுதரும் விசேடம் எங்ஙன் தோன்றும்? அது தனியாயிருந்தே ரஸிகருக்குத் தோன்று மெனின், ரஸிகத்துவம் என்பது யாதென ஆய்தல்வேண்டும். அஃது சுவை பாவம் இவையின்றிச் சொற்பொருளையுடைய காவியத்துள்ள கட்டுப்பாடுவிசேடத்தை அறியுந்தன்மை என்றேனும், சுவையுடைச்சொற்பொருள்கொண்ட காவியத்தை அறியுந்தன்மை என்றேனும் கூறல்வேண்டும். முதற்கூற்றைக் கொள்ளின், அவ்வாறுள்ள ரஸிகர்களாற் கொள்ளப்பட்ட சொற்களே அழகுற்றன என நியமித்தல் தகாது, கொள்கை வேறுபாட்டால் அவை அழகு பெறவில்லை எனவும் முடியுமாகலான்.

தற்போது அஃதே எல்லாவின்பத்திற்கும் இடனாகிப் பலவகைச் சிறப்புற்றதாயிற்று என்பதைக் குறிக்கும். அவ்வாறே இரண்டு மூன்றும் அடிகள் குறிப்பதைக் காண்க. தினம் என்ற சொல் பல ஆண்டுகளிலும் கட்ட முடியாதது சிலநாட்களில் ஆயிற்று என்ற வியப்பைக் குறிக்கும்.

இரண்டாங் கூற்றைக் கொள்ளின், சுவையி லீடுபடுதலே ரஸிகத்துவமாகும். அவ்வாறுள்ள ரஸிகர்களால் அனுபவிக்கத் தக்கது ஆகிய இயற்கையாச் சுவையைப் பெருக்கித் தரும் ஆற்றலே சொற்களுக்கு விசேடமாகும். ஆகலின் சொற்களுக்குப் பேரழகைத் தருவது வியஞ்சக மாயிருத்தலே. பொருளை யொட்டி வாசகமா யிருத்தலினின்றும் வருவது, பிரஸாதம் என்ற குண மாகும். பொருளை யெதிர்பாராது வாசகமாயிருத்த லினின்றும் வருவது அனுப்பிராஸம் முதலியன வாகும்.

இவ்வாறு சுவை முதலியவற்றின் வியஞ்சகங்களின் தன்மையைக் கூறி, இனி அவற்றின் விரோதிகளின் தன்மையைக் கூற இப்போது தொடங்கப்படுகின்றது.

> பிரபந்தத் தேனு முத்தகத்தேனு மின்சுவை
> நிரம்ப வியற்றுமா நினையின்
> விரோதியை நீக்க முயல்கநல் லறிஞன். (கா. 73)

பிரபந்தத்தையேனும் தனிப்பாடலையேனும் சுவை சொரியுமாறு இயற்றவேண்டுமாயின், கவி சுவைகளுள் விரோதியாகியவற்றைச் சேர்த்துக் கூறுமலிருக்கச் சிறந்த முயற்சியைக் கொள்ள வேண்டும். இல்லையேல் ஒரு செய்யுள்கூடச் சுவையுற்றதாக இராது.

கவி தன்முயற்சியால் நீக்கவேண்டிய விரோதிகள் யாவை எனின்,

> விரோதிச் சுவையின் விபாவாதி கோளலும்
> இயைபுறும் வேறொரு பொருளை விரித்தலும்
> வேண்டிடத்து விடலும்வேண் டாவிடத்து விளக்கலும்
> முற்றிய சுவையைப் பன்முறை சுடர்த்தலும்
> விருத்தி யவுசித்திய மின்மையுஞ் சுவைப்பகை.
> (கா. 74-75½)

1. இலக்கியத்தின் அங்கிச்சுவைக்குப் பகையாகிய சுவையின் விபாவம், அனுபாவம், வியபிசாரிபாவம் இவற்றை வருணித்தல் சுவை கெடுதற்கு முதற்காரண மாகும். சாந்தச் சுவையின் விபாவங்கள் வருணிக்கப்படும்போது சிருங்காரச் சுவையின் விபாவங்களை வருணித்தல் பகைச்சுவையின் விபா

வத்தை வருணித்தற்கு உதாரண மாகும்; கணவனிடத்து ஊடல்கொண்ட காதலிக்கு உலகத்தின் நிலையாமை முதலிய வற்றைக் கூறிச் சமாதானஞ்செய்தல், பகைச்சுவையின் பாவத்தை வருணித்தற்கு உதாரண மாகும்; மனைவி ஊடல் கொண்டிருக்கக் கணவன் கோபாவேசங்கொண்டு அவளை அடிக்கப்போதல் பகைச்சுவையின் அனுபாவத்தை வருணித் தற்கு உதாரண மாகும்.

2. அங்கிச்சுவைக்கு ஒருவகையான் இயைபுபட்ட மற் றொருபொருளை விரிவாய்க் கூறுதல் சுவை கெடுதற்கு இரண்டாங் காரணமாகும்; விப்பிரலம்பசிருங்காரம் அங்கிச் சுவையாயிருக்க, நாயகன் எதையேனுங் கூறவேண்டும் என நினைத்து மலையை வருணிக்கத் தொடங்க, கவி ஆங்கு யமகம் முதலிய சொல்லணியில் ஈடுபட்டிருத்தல் அதற்கு உதாரண மாகும்.

3. வேண்டியவிடத்து, சுவையை நன்கு வருணியாமையும் வேண்டாவிடத்து அதனை நன்கு வருணித்தலும் சுவை கெடு தற்கு மூன்றாங் காரணமாகும். வேண்டியவிடத்து, சுவையை நன்கு வருணியாமைக்கு உதாரணம் பின் வருமாறு :- நாயகன், தக்க நாயகி இருவருக்கும் ஒத்த அன்பு உண்டாகி அவ்விரு வரும் புணர்ச்சியின்பால் பேருவகையராய் இருக்க நாயகன் அதற்கு வேண்டிய உபாயந் தேடுவதற்குத் தக்கவைற்றைக் கூறாது அவன் தனியாக ஈடுபட்ட மற்றொரு பொருளைக் கவி வருணித்தல். வேண்டாவிடத்துச் சுவையை நன்கு வருணித் தற்கு உதாரணம் பின் வருமாறு :—உலகத்தை யெல்லாம் அழிக்கக்கூடிய போர் நடக்க, விப்பிரலம்பசிருங்காரந்தோன்று தற்குத் தக்க காரணம் இல்லாதிருக்க, ஆங்குள்ள நாயகன் சிருங்காரத்தில் மூழ்கி அதற்குத் தக்கவாறு கூறத் தொடங்கல். ஈண்டு ஊழ்வினையான் நாயகன் அவ்வாறு மயக்குற்றான் எனக் கூறலாம் எனின் : அற்றன்று, கவி சுவையுடைப்பொருளையே சிறப்பாக வருணித்தல் வேண்டுமாகலா னென்க. பொருள் விளக்கத்தை யறிய மனிதர் விளக்கைக் கைக்கொள்வதுபோன்று பழங்கதையைக் கொள்ளுதல் சுவையுடைக்காவியத்திற்கு உபாயமேயாம். ஆகலினன்றே கவி கதையை மாத்திரஞ் சிறப் பாகக் கூறத் தொடங்கின், ஆங்கு அங்கிச்சுவை அங்கச்சுவை

என்றறியதியில்லாமையான் முற்கூறப்பட்ட குற்றங்களுக்கு இலக்கு ஆகின்றனர் என நினைத்து, அக்கவிக்குச் சுவையில் ஈடுபடுதலே சிறந்த நோக்கமாதல் வேண்டும் என்றற்கே தமக்கு இந்த முயற்சியன்றித் தொனியின் தன்மையை மாத்திரம் கூறுதல் இன்று என ஆனந்தவர்த்தனர் கூறுவர்.

4. நன்கு வருணிக்கப்பட்ட சுவையை மறுபடியும் அடிக்கடி வருணித்தல், சுவைக்கேட்டிற்கு நான்காம் ஏது வாகும். நன்கு முதிர்ச்சியடைந்த சுவையை அடிக்கடி மறுபடியும் வருணித்தல் பூவைக் கசக்கி மோத்தற்கு ஒப்பாகு மென்க.

5. விருத்தியின் அவுசித்தியமின்மை சுவைக்கேட்டிற்கு ஐந்தாம் ஏதுவாகும். விருத்தியின் அவுசித்தியமின்மை என்பதை இருவகையாகப் பொருள்கொள்ளலாம். புணர்ச்சியை வேண்டும் மனைவி தன் நடையுடைபாவனையாற் கணவனுக்கு அதனை விளக்காது அதனை வெளிப்படையாகக் கூறுதல் போல்வது செயலின் அவுசித்தியமின்மை என்பது ஒன்று. பரதமுனிவராற் கூறப்பட்ட கைசிகீ முதலிய பொருள்விருத்திகளையும் ஏனையோராற் கூறப்பட்ட உபநாகரிகை முதலிய சொல்விருத்திகளையும் எங்கு எவ்வாறு வழங்கவேண்டுமோ அவ்வாறு அங்கு வழங்காது மாறுபட்டு வழங்குதல் என்பது மற்றொன்ருகும். சுவைக்கேட்டினை விளைக்கும் இவற்றையும் இவைபோன்றவற்றையும் நற்கவிகள் நன்கு ஆய்ந்து நீக்கக் கவனத்துடன் முயலவேண்டும். இப்பொருளைக் கொண்ட செய்யுட்கள் பின் வருமாறு :—

நற்கவி செயற்கு நாட்ட மிரசாதிகள்
மற்றவை வருணிக்க வவரே கருத்தொடு
நிற்றல் வேண்டுமால் நீரசக் காவியம்
நற்புக ழின்மைக்கு நல்ல காரணமாம்
மறக்கப் படுமே யக்கவி யதனல்
முன்னர்க் கவியெனப் பெயர்பெற்ற பலரும்
நன்னர் நியதியில் வருணனை நடத்தினர்
என்றிவ் வொருகவி யிருத்த லாகாது
பெரும்பேர் பெற்ற வான்மீகி வியாஸன்
உருவக் குறித்த வழியென் பதிஃதே.

அங்கிச் சுவைவேரூன் றிநிலைபெற் றபின்னர்ப்
பகைச்சுவையி னங்கத்தை வருணித்தல் குற்றமாகா
பாதிக்கப் படுமாயி னவையங் கமாயின். (கா. 7(64/2))

தனக்கு வேண்டிய உபகரணங்களான் அங்கிச்சுவை நன்கு நிலை பெற்றபின்னர் பாதிக்கப்படவேண்டும் என்ற கருத்துடனோ, அன்றி அங்கமாகவே வருணிக்கவேண்டும் என்ற கருத்துடனோ பகைச்சுவைகளோ, பகைச்சுவையுறுப்புக்களோ கோக்கப்படின் குற்றமாகாது. ஏனெனின், விரோதிச்சுவையின் அங்கங்கள் [illegible]டனே அங்கிச்சுவையின் அங்கங்களான் மறுக்கப்படுமாயின், அப்போதே அவை பாதிக்கப்பட்டன எனக் கூற இயலும். அவ்வாறு அவற்றைக் கோத்தல் அங்கிச்சுவைக்கு அழகினையே தரும். விரோதிச்சுவையின் அங்கங்கள் அங்கிச்சுவைக்கு அடங்கியே சிறப்பின்றி அதற்கு அங்கமாயிருப்பின், அதுவுங் குற்றமாகாது, உதாரணமாக விப்பிரலம்பசிருங்காரத்தை வருணிக்கும்போது வியாதி முதலியன அதற்கு அங்க மாகவே இருக்குமாறு வருணித்தல் குற்றமாகாது; அங்கமாக இராது வருணித்தலோ குற்ற மாகும். வியாதியை அங்கமாக வருணிக் கும்போதும் மரணத்தைக் கூறுதல் தகாது, ஆலம்பனவிபா வத்துள் ஒன்று அழியின் சுவை முழுதுங் கெடுமாகலான். அது கருணைச்சுவைக்கு ஏற்ற கருவியாகு மெனின், அச்சுவையைப் பற்றி ஈண்டு வருணிக்கப்படாமையானும், வருணிக்கப்பட்ட அங்கிச்சுவை கெடுமாகலானும் என்க. எங்குக் கருணைச்சுவை அங்கியா யிருக்கின்றதோ ஆங்கு அது சிறக்கும். சிருங்காரச் சுவை அங்கியா யிருக்கும்போதும் விரைவில் பிழைப்பு உண் டாவதாக வருணிக்கப்படின் மரணத்தை ஒருவாறு எங்கேயோ கூறுதல் சுவையை மிகவுங் கெடுக்காது; நெடுநாள் கழித்துப் பிழைப்பு உண்டாயின், இடையில் சிருங்காரச்சுவைக்குத் தடை நிகழ்கின்றமையான், அதனைக் கவி வருணிக்காது நீக்கல் வேண்டும்.

அங்கிச்சுவை நிலைபெற்றபின்னர் பாதிக்கப்பட்ட விரோ திச்சுவையைக் கொண்டதற்கு உதாரணம்:—

" தீச்செயல் எங்கே, மதிக்குடி எங்கே, மற்று மொருமுறை அவளைப் பார்க்க இயலுமோ? தீச்செயலைப் போக்கவே கல்வி பயின்றேன், வெகுளியிலும் இனியதே அவளது முகம். குற்ற

மற்ற பேரறிஞர் யாது சொல்வர், சொப்பனத்தும் அவள் அரியள் ஆவாள். மனமே, நீ அமைதியுற்றிரு, எச்செல்வன் அவளிதழின் அமுதையுண்டு களிப்பான்?"[1]

காதம்பரியிலும் மகாசுவேதையினிடம் பெருங்காதல் கொண்ட புண்டரீகனிடம் தோன்றிய இன்பச்சுவை வைராக்கியத்தைக் கற்பிக்கும் முனிகுமாரனுடைய கூற்றுக்களை யெல்லாம் பாதித்தது காண்க.

இயற்கையாக விரோதிச்சுவை அங்கமா யிருப்பின் குற்றமின்று என்பதற்கு உதாரணம்:—

"[2]காரரவத்தான் உண்டாம் விடம்[3] பிரிவுற்றோர்க்கு அவர் அறியாது வலியவே மயக்கம் மகிழ்ச்சியின்மை மனத்தெளிவின்மை பிரளயம் இருளல் மதிதவறுகை உடலசைவு மரணம் முதலியவற்றைச் செய்யும்."

விரோதிச்சுவை அங்கமாக ஏற்றப்பட்டு வருணிக்கப்படினுங் குற்றமின்று என்பதற்கு உதாரணம்:—

1. சந்திரகுலத் துதித்த ஒரு பெரியன் தனக்கு உரியளல்லாத ஒருத்தியைக் கண்டு காமுற, அப்போது இவ்வாறு கூறும்:—தீச்செயல் எங்கே மதிகுடி எங்கே என்றது அச்செயல் தான் செய்யத் தகாதது என விதர்க்கத்தைக் குறிப்பிக்குமியல் நிலையைக் கூறுவதாகும். மற்றொருமுறை யவளைப் பார்க்க வியலுமோ என்றது அவளிடத்துள்ள ஆவலைக் குறித்து முன்னருள்ள விதர்க்கத்தைப் பாதிக்கும். தீச்செயலைப் போக்கவே கல்வியறிந்தோர் என்றது அவனது அறிவைக் காட்டும். வெகுளியிலு மினியதே யவளது முகம் என்றது அவளைப்பற்றிய நினைவைக் குறித்து முன்னருள்ள அறிவைப் பாதிக்கும். குற்றமற்ற பேரறிஞர் யாது சொல்வர் என்றது அவனது அச்சங்கலந்த ஐயத்தைக் காட்டும். சொப்பனத்து மரியள் ஆவாள் என்றது அவனுடைய பரிதபிக்கும் நிலையைக் குறித்து ஐயத்தைப் பாதிக்கும். எச்செல்வன் அவளிதழின் அமுதை யுண்டு களிப்பான் என்றது அவனுடைய சிந்தையைக் குறித்து அஃதே ஈண்டுச் சிறப்புற்றது என்பதை விளக்கும்

2. காரரவம் = காராகிய அரவம்.

3. விடம் = விஷம்; நீர்.

"கோபத்தால் இளங்கொடிக்கயிற்றால் இறுகக் கட்டி ...பேறுபெற்றான் அவனே." (பக். 58.)

செய்யுளின் சிறப்புடைப்பொருள் ஒன்றாயிருக்க அதற்கு அங்கமாக இரண்டு முரணான சுவைகள் வருணிக்கப்படினும் குற்ற மாகா என்பதற்கு உதாரணம்:—

"சிவபிரானது கண்ணயினின்றும் பிறந்த தீ.. நும் பாவத் தைப் போக்குக." (பக். 41).

ஈண்டு ஏன் முரண் இன்றெனின், இரண்டும் மற்றொன் றற்கு உறுப்பாயிருத்தலான் என்க. மற்றொன்றற்கு உறுப் பாயின் முரண்பட்ட அவை ஏன் முரணாகா வெனின், இரண்டுஞ் சிறப்புறக் கூறப்படினே முரணாகுமேயன்றி மற் றொன்றற்கு அங்கமாகக் கூறப்படின் முரணாகா என்க.[1]

உதாரணமாக,

"வா, போ; விழு, எழு; கூறு, மௌனமுற்றிரு; எனப் பணம்படைத்தோர் பேராசைப்பேயுற்ற யாசகருடன் விளை யாடுகின்றனர்".

என்றவிடத்து வா, போ: விழு, எழு: கூறு, மௌனமுற்றிரு: என்பன ஒன்றுக்கொன்று முரணாயிருப்பினுந் தொடரின் சிறப்புப்பொருள் வைராக்கியத்தைப்பற்றி யாகலானும், அவை அதற்கு அங்கமாயினமையாலும் அவற்றில் ஒன்றுக்கொன்று உள்ள மாறுபாட்டால் ஈண்டு ஒரு கேடும இல்லை யென்க.

அவ்வாறே, முன்னருள்ள செய்யுளிலும் திரிபுரத்தை எரித்த சிவபிரானது ஆற்றல்மிகுதியைக் கூறுதலே சிறப்புப் பொருளாயிருக்க, அதற்கு அங்கமாயனவும் ஒன்றுக்கொன்று முரணாயினவுமான பொருமையான் வந்த விப்பிரலம்பசிருங்

1. மயிலும் பாம்பும் ஒன்றுக்கொன்று தனிப்பட்ட நிலையில் பகை யாயினும், முருகக்கடவுளிடம் ஒருங்கு இருக்கும்போது அப்பகையைக் காட்டுதற்கு இடனில்லாமை நோக்கத் தக்கது.

காரமும் கருணமும் சிறந்தனவல்ல. சுவையில் [1]விதி, [2]அநுவாதம் என்ற வழக்கு இல்லை யெனக் கூறல் இயலாது, அவற்றைத் தொடர்ப்பொருளாக உலகங் கொண்டமையான். கருத்துப் பொருள், வாச்சியப்பொருள் இவ்விரண்டினிடமு முள்ள விதியும் அனுவாதமும் அவற்ருற் குறிக்கப்பட்ட சுவைக்கு இல்லை யென யாரார் கூற இயலும்?

காவியத்திற்குச் சுவைகள் நேரில் பொருளாகா என்ற கொள்கையுடையோரும், காவியத்திற்கு நேர்பொருளாகிய விபாவம் முதலியவற்றைச் சுவைகள் தங்கட்குக் காரணமாகக் கொண்டன எனக் கொள்ளல்வேண்டும். அவ்வாறு கொள்ளினும், இச்செய்யுளில் ஒன்றுங் குற்றமில்லை; ஏனெனில் அங்கமாகிய விபாவமுதலியவற்றைக் கொண்ட இரண்டு சுவைகளையுடைய காவியப்பொருளினின்று சிறப்புப்பொருள் உண்டாகின்றது. ஒன்றுக்கொன்று முரணுகிய இரண்டு பொருளைத் தனக்கு உதவியாகக் கொண்ட ஒரு காரணத்தான் காரியம் நிகழ்வதை உலகிற் பார்க்கலாம். ஒரே காலத்தில் மாறுபட்ட பயனைத் தருவன இரண்டும் காரணமாயிருப்பின், காரியம் நிகழாது, முரண்பயனுடையதாகும்; அவ்விரண்டும் மற்ருெரு காரணத்திற்குத் துணையா யிருப்பின் காரியம் நிகழும், அவ்விரண்டிற்குமுள்ள முறண் பயனற்றதாகும். இங்ஙன் முரண்பட்ட பதார்த்தவிஷயமான அபிநயத்தை எங்ஙன் நிகழ்த்தல் கூடும் எனின், பகைப்பொருளை உதவியாகக் கொண்ட வாச்சியப்பொருள் இருக்குமிடத்து எவ்விதியைக் கொள்வோமோ அவ்விதியே இங்கு மாகும்.

அன்றியும் மிகவுஞ் சிறப்புற்ற நாயகனது ஆற்றல் மிகுதியை வருணிக்கும்போது அவன் பகைவரிடத்தில் கருணச்

1. விதி = சிறப்பாகக் கூறுதல்; விதேயத்தன்மை இருக்குமிடத்து சிறப்புற்ற தன்மையிருத்தலால் விதி என்ற சொல் அப்பொருளில் வழக்கப்பட்டது.

2. அநுவாதம் = அங்கமாகக் கூறுதல்; அநுவாத்தியத்தன்மை இருக்குமிடத்து சிறப்பில்தன்மையிருத்தலால் அநுவாதம் என்ற சொல் அப்பொருளில் வழங்கப்பட்டது.

சுவையை வருணித்தல் ஆராய்வோர்கண்ணில் ஒரு குறைவுற்ற தாகவுங் காணப்படவில்லை, மற்றும் பெருமகிழ்ச்சியையே விளைக்கின்றது.

இக்காரணத்தான் அங்கிச்சுவைக்கு மாறுன அங்கச்சுவைகள் ஆற்றல் குன்றினவாதலால் அவற்றை வருணித்தலான் ஒரு குற்றமு மில்லை. ஆகலின் வாக்கியார்த்தமாக வுள்ள அங்கிச் சுவைக்கும் அங்கிபாவத்திற்கும் மற்ருெருபகைச்சுவையேனும் பகைபாவமேனும் அங்கியாகவே இருப்பின் குற்றமாம், அவ்வா றின்றி அங்கமாக இருப்பின் குற்றமாகாது.

மேலும் அங்கிச்சுவை கருணமாயிருக்க ஓரற்குற்ற முறை யான் சிருங்காரச்சுவையை வருணித்தலும் சுவையைப் பெருக்கு கின்றது, ஏனெனில், இயற்கையாய்ச் சிறப்புற்ற பொருள்கள் வருந்தத்தக்க நிலையைப் பெற, அப்போது அவற்றின் முன்னி லையை நினைத்து நினைத்து அவற்றைக் கூறுதல் சோகத்தை மிகுதிப்படுத்துகின்றது. இதற்கு உதாரணம் வியாஸமகா பாரதத்தில் போர்க்களத்தில் வீழ்ந்துகிடக்கும் பூரிச்சிரவஸின் கையைப்பற்றிய தொடராகும். அஃதாவது

"இக்கையே அப்போது அரையணியை இழுத்தது, பருத்த முலையைக் கசக்கியது; கொப்பூழ், தொடை, அல்குல் இவற்றைத் தொட்டது; இடையாடையை அவிழ்த்தது."

அதுபோன்று திரிபுரத்திலுள்ள பெண்டிர்களிடத்துச் சிவபிரான் அம்புத்தீ சிறுகுற்றஞ்செய்த தலைவனைப்போன்று நடந்தது எனக் கூறிய முறையான், முரண் ஒன்றுமில்லை. ஆக லின், எவ்வாறு அதனை ஆயினும் ஆங்குக் குற்ற மில்லை என்பது தோன்றும்.

இவ்வாறே

"நின் பகைஞரின் மனைவியர் கண்ணீராற் கழுவப்பட்ட முகத்துடன் புண்ணுற்றுக் குருதிசொரியும் மெல்விரல்களை யுடைமையால் செம்பஞ்சுக்குழம்பு அணிந்ததுபோன்று தோன் றுங் கால்களால் தருப்பை நிறைந்த இடங்களைக் கடந்து சென்று அச்சமொடு கணவர்க்கையைப் பிடித்தவண்ணம் மீண் டும் திருமணச்சடங்கு உற்றவர்போன்று காட்டுத்தீயைத் தற் போது வலம் வருகின்றனர்".

என்பதுபோன்ற இடங்களில் ஒருவகைக்குற்றமின்மை அறிதல்கூடும்.

இவ்வாறு முதலில் சுவைகள் ஒன்றுக்கொன்று பகையாயிருக்க எவ்விடயங்களிற் சேர்த்தும் எங்குச் சேர்க்காதும் கூற வேண்டும் எனக் கூறி, பின்னர் அவற்றை ஒரு பிரபந்தத்தில் வருணிப்பின், எம்முறையில் வருணித்தல் வேண்டுமென்பது கூறப்படும்.

பிரபந் தங்களிற் பலசுவை யிருத்தல்
பிரசித் தமாயினும் பிரபந்தஞ் சிறக்கப்
பிரதான மாக்க லவற்று ளொன்றே. (கா. 76½)

பிரபந்தங்களாகிய பெருங்காவியங்களிலும் நாடகம் முதலியவற்றிலும் ஆங்காங்குச் சிதறியும் அங்கமாகவும் அங்கியாகவும் பலசுவைகள் கூறப்படுதல் நன்கு எல்லோரும் அறிந்த செய்தியாயினும், அப்பிரபந்தங்கள் சிறந்து விளங்கல்வேண்டுமென்ற அவா கவிக்கு இருக்குமாயின், அவற்றுள் ஒன்றனை அங்கியாக ஆக்கல்வேண்டும். அஃதே சிறந்த வழி ஆகும்.

பலசுவைகளும் நன்கு முற்றி விளங்கும்போது அவற்றுள் ஒன்று அங்கியாதல் எங்ஙன் தகுமெனின்,

அங்கிச் சுவையொடு பிறசுவைக் கலப்பு
அங்கித் தன்மையைப் போக்குத லில்லை
இச்சுவை தாயியாய்த் திகழ்த லானே. (கா. 77½)

பிரபந்தங்களில் ஒருசுவை முதன்முதல் கூறப்பட்டு அடிக்கடி நினைவூட்டப்பட்டு நிலைத்திடின், பல சுவைகள் ஆங்கு இருப்பினும், அஃது அங்கியாயிருத்தலை இழக்காது.

இதனையே நிலைநிறுத்தப் பின்வருமாறு கூறுவர்.

பிரபந்தத் துளங்கம் பலவகை யாயினும்
பொருளொன் றங்கியா யிருப்பது போன்று
பிரபந்தச் சுவைபல வாயினு மாங்கொன்
றங்கியா யிருத்தல் தவறு காதே. (கா. 78½)

பல சந்திகளைக் கொண்ட நாடகம் முதலியவற்றில் ஒரு பொருள் சிறந்து விளங்க, அது பல பொருட்களோடு கூட இருப்பினும்

அதன் சிறப்பு விடாது காணப்படுதல்போல, ஒருசுவை பல சுவைகளோடு கூறப்படினும் அஃது அங்கியாயிருத்தல் குற்ற மாகாது. குற்றமாகாதிருத்தலோடு அது சுவையிலே ஈடுபட்ட பேரறிஞர்களுக்குப் பெருமகிழ்ச்சியையும் ஊட்டுகின்றது.

வீரசிருங்காரங்கள், சிருங்காரஹாஸ்யங்கள், ரவுத்திர சிருங்காரங்கள், வீராற்புதங்கள், வீரரவுத்திரங்கள், ரவுத்திர கருணங்கள், சிருங்காரவற்புதங்கள், போன்று ஒன்றுக் கொன்று பகையாகாச்சுவைகள் அங்காங்கிபாவத்தைக் கொள் ளல் தகும்; சிருங்காரபீபற்சங்கள், வீரபயானகங்கள், சாந்தரவுத்திரங்கள், சாந்தசிருங்காரங்கள் இவைபோன்று ஒன்றுக்கொன்று பகையாகிய சுவைகள் அங்காங்கித்தன்மை யைக் கொள்ளுதல் எவ்வாறு தகும் எனின்: அற்றன்று,

ஒருசுவை யங்கியா யிருக்க மற்றோர்
சுவை பகை யாயினு மஃதின் றாயினும்
வளமை பெறுவஃ தங்க மாகுமே. (கா. 79½)

சிருங்காரம் முதலியன பிரபந்தத்திற்கு அங்கிச்சுவையா யிருக்க, அதற்குப் பகைச்சுவையேனும் பகையில்சுவையேனும் அதனைக் காட்டிலும் வன்மைபெறச் செய்தல் தகாது. அவற்றுள் பகை யில்சுவை அங்கிச்சுவையைக்காட்டிலும் மிகச் சிறப்புறுமாறு வருணிக்கக்கூடாது என்பது வன்மை பெறுமைக்கு முதலாம் உபாயம், அவ்விரண்டற்கும் சமமான சிறப்பிருப்பினும் குற்ற மாகாதாகலான்.

சமமாயிருத்தற்கு உதாரணம்:—

அன்புடைய விற்கிழத்தி யோர்பா லழுகின்றாள்
வன்புடைய பேரியொலி யோர்பால் வழங்குமால்
காதலாற் போரிடத்துக் காமத்தால் வீரனுளம்
ஊசலா டிற்றன்றே யூங்கு.[1]

1. அழுகின்றாள் அன்புடைய இற்கிழத்தி என்றதனால் சிறந்த ரதி குறிக்கப்படும்; பேரியொலிவழங்கும் என்பதனால் சிறந்த உற்சாகம் குறிக்கப்படும்; ஊசலாடிற்று என்றதனால் காமம் போர்விருப்பு என்ற இரண்டும் சமமாக இருக்கின்றன என்பது குறிக்கப்படும்.

மற்றோர் உதாரணம்:—

"கழுத்திலணிந்திருந்த மாலையைக் கையிலெடுத்து அக்க மாலைபோல் உருட்டிக்கொண்டும், பாம்புத்தலைவன்போன்ற அரையணிக்கயிற்றால் பரியங்கபந்தம் இட்டுக்கொண்டும், மந்திரம் ஜபிப்பவள்போல் இதழைச் சிறிது அசைத்து வெளிப் படாத புன்சிரிப்பைக்கொண்டும் இருக்கும் மலைமகளைக் கண்டு, சந்தியாதேவிக்குப் பொறாமை வருமாறுள்ளச் சிரிப்புடன் சிவபெருமான் மகிழ்ந்தனன். அவ்வாறுள்ள தேவி நும்மைக் காக்க."

அங்கிச்சுவைக்கு முரணாகிய வியபிசாரிபாவங்களை மிகுதி யாகக் கூறாமையும், கூறினும் உடனே அங்கிச்சுவையின் வியபிசாரியைத் தொடர்ந்திருக்குமாறு கூறுதலும், வன்மை பெறாமைக்கு இரண்டாம் உபாய மாகும். அங்கச்சுவையை வன்மைபெறச் செயினும், அஃது அங்கமே எனத் தோன்றுமாறு அடிக்கடி கூறுதல் மூன்றாம் உபாய மாகும். இவ்வாறு ஏனைய வகைகளையும் ஊகித்தல் வேண்டும்.

அங்கிச்சுவையைக்காட்டிலும் பகைச்சுவைக்கு எவ்வகை யினுங் குறைவை உணர்த்தல் வேண்டும். சாந்தச்சுவை அங் கியாயிருக்கச் சிருங்காரத்தையும், சிருங்காரம் அங்கியா யிருக்கச் சாந்தச்சுவையையும் இவ்வாறே கூறவேண்டும்.

வன்மைபெறுதலை எவ்வாறு சுவையாகக் கூறலாம் எனின், அங்கிச்சுவையைக்காட்டிலும் வன்மைபெறாமை எனக் கூறப்பட்டது காண்க. அங்கிச்சுவை எவ்வளவு வன்மை பெற்றிருக்கின்றதோ அவ்வாறு அங்கம் வன்மை பெறுதல் தகாது; அது தனக்குள்ள வன்மைபெறுதலை யார் தவிர்க்க முடியும்? பல சுவை கொண்ட பிரபந்தங்களில் சுவைகட்கு அங்காங்கிபாவம் இல்லை என்ற கொள்கையுடையோரும் ஒன்று அதிகவன்மை பெற்றும் ஏனைய அவ்வாறு வன்மை பெறாதும் நிற்றலைக் கொள்ளல்வேண்டும். ஆகலின், பிரபந்தங் களில் பலசுவைகள் ஒன்றற்கொன்று பகையாயிருப்பினும் பகையாயில்லாதிருப்பினும், அவற்றை அங்காங்கிபாவங்கொண் டனவாக வருணித்தல் குற்றமாகாது என்பது தெளிக. ஒரு சுவை மற்றோர் சுவைக்கு வியபிசாரி ஆகலாம் என்ற

கொள்கையைக்கொண்டு இதுவரை கூறப்பட்டது. அவ்வாறு கொள்ளாதவர் சுவை என்ற சொல் குணவிருத்தியால் ஸ்தாயீ பாவத்தைக் குறிப்பதாகக் கொள்வர்: அப்போது அவை அங்கமாயிருப்பின் அவற்றுள் விரோதமே இல்லை.

இவ்வாறு பிரபந்தங்களில் அங்கிச்சுவையோடு அதன் பகைச்சுவை பகையில்சுவை இரண்டனையும் அங்கமாக எவ்வாறு வருணிப்பின் குற்றமாகாது என்பதைப் பொதுப்படக் கூறி, இனிப் பகைச்சுவையை எவ்வாறு வருணிப்பின் குற்றமாகாது என்பதைச் சிறப்பாகக் கூறுவர்.

சுவையிரண்டுந் தமக்காலம் பனவிபாவ மாக
ஒன்றனையே கொள்ளின் பகையா குமாயின்
அவற்றை வெவ்வே றுலம்பன விபாவமாகக்
கூறல் வேண்டும் பகைச்சுவைப் பரிபோஷம்
இருப்பினு மாங்குக் குற்ற மாகா. (கா $80\frac{1}{2}$)

இரண்டும் ஓரிடத்து இருப்பின் பகையாகின்றனவும், அடுத்தடுத்திருப்பின் பகையாகின்றனவும் எனப் பகைச்சுவைகள் இருவகைப்படும். அவற்றுள் பிரபந்தத்தில் அங்கிச்சுவையின் ஆலம்பனவிபாவத்தையே கொள்ளின் பகையாகின்ற சுவையை வேறு ஆலம்பனவிபாவமுடையதாகக் கூறல்வேண்டும். உதாரணமாக வீரச்சுவையும் பயானகச்சுவையும் ஒரே ஆலம்பன விபாவங் கொள்ளின் பகையாம்; ஆகலின் நாயகனிடம் வீரச்சுவை யிருக்க, பிரதிநாயகனிடம் பயானகச்சுவை இருத்தல் வேண்டும். அவ்வாறிருப்பின் அப்பகைச்சுவையும் பரிபோஷம் பெறின் குற்றமாகாது. பிரதிநாயகனிடம் பயானகக்சுவையை வருணிப்பின், அது நாயகனிடமுள்ள நயம், ஆற்றல் முதலியவற்றை நன்கு விளங்கச் செய்யும். இம்முறையை ஆனந்தவர்த்தனர் தாம் இயற்றிய அர்ச்சுனசரிதத்தில் நன்கு ஆண்டுள்ளனர். ஓரிடத்திற் பகையாகின்ற சுவைகளைக் குற்றமற எவ்வாறு வருணிக்கவேண்டும் என்பதைக் கூறியபின்னர், அடுத்தடுத்து வரின் பகையாகின்ற சுவைகளைக் குற்றமற எவ்வாறு வருணிக்கவேண்டும் என்பது கூறப்படுகின்றது.

பகையாகா வோரிடத்தி லடுத்தடுத் திருப்பினே
பகையாகுஞ் சுவையிரண் டையும் வேறு
சுவையா லிடையிட்டுக் கூறல்வேண்டு மறிஞன். (கா: $81\frac{1}{2}$)

ஓரிடத்தில் இருப்பின் பகையாகாது அடுத்தடுத்து இருப்பின் பகையாகுஞ் சுவைகளைப் பிரபந்தத்தில் வேறு சுவையை இடையிலிட்டுக் கூறல்வேண்டும். இம்முறையை ஹர்ஷன் இயற்றிய நாகானந்தம் என்ற நாடகத்துள் காணலாம். ஆங்குச் சிருங்காரச்சுவையும் சாந்தச்சுவையும் அற்புதச்சுவையை இடையிலிட்டு வருணிக்கப்பட்டன. சாந்தச்சுவை என்பது ஒன்றில்லையெனின்: அற்றன்று, அவாநீங்குதலான் உண்டாம் மகிழ்ச்சியின் பரிபோஷத்தைக்கொண்ட சாந்தச்சுவை அனுபவிக்கப் படுதலின். ஆகலினன்றே வியாஸர் மகாபாரதத்தில்

"இம்மையில் உண்டாம் காமவின்பமும், துறக்கத்தில் உண்டாம் பேரின்பமும் அவாவறுத்தலான் உண்டாம் இன்பத்தின் பதினாறில் ஒன்றுக்கு ஈடாகா."

எனக் கூறினர்.

அச்சுவை எல்லோரானும் நுகரப்படவில்லை யெனின், அதனால் அச்சுவையே இல்லை யெனக் கூறல் தகாது. முனிவர் பெருமக்கள் தவத்தின் பயனாக அடைந்த அந்நிலை எல்லாரானும் அடையமுடியாமைக்காரணத்தான் அஃதே இல்லை எனக் கூறுதல் தகாது என்பதை யாவரும் அறிவர்: அவ்வாறே சாந்தச்சுவைவிடயத்திலு மென்க. அது வீரச்சுவையின் ஒரு பகுதி யாகும் எனக் கூறல் தகாது, வீரச்சுவை அகங்காரம் பற்றி நிற்குமாதலானும், சாந்தச் சுவை அகங்காரமின்மை பற்றி நிற்குமாதலானும் என்க.

இவ்வாறு இரண்டற்கும் விடயம் வேறுபட்டிருப்பினும் அவற்றை ஒன்றாகக் கொள்ளின், வீரம், ரவுத்திரம் இவ்விரண்டும் ஒன்றுதல் கூடும். தயாவீராதிகட்கு உண்டாம் சித்தவிருத்திவிசேஷங்கள் எல்லாவாகாரமும் அகங்காரமின்மையிருப்பின் சாந்தரஸப்பகுப்பிற் சேரும்: அகங்காரமுண்மையேற்படின் வீரச்சுவைப்பகுப்பிற் சேரும் என இவ்வாறு பிரிவு கொள்ளின் ஆங்குக் குற்றமொன்றும் வாராது. ஆகலின், சாந்தச்சுவை என்பது ஒன்று உண்டு. அதனைப் பகைச்சுவையோடு பகையில்சுவையை இடையிட்டு வருணிப்பின் குற்றமொன்றுமில்லை. அவ்வாறு உள்ளதற்கு உதாரணம் முன்னர்க் கூறப்பட்டதே யாகும். அதனையே நிலைநிறுத்தப் பின்னுங் கூறுவர்:-

வாக்கிய மொன்றிலும் வேறுசுவை யிடையிட்டு
பகைச்சுவை வருணிப்பின் பகைமை நீங்கும்.
(கா. 82½)

பிரபந்தத்தில் பகைச்சுவைகளை வருணிக்கும்போது இடையில் வேறு சுவையை இட்டு வருணிப்பின், பகை நீங்கும் என்பதிற் சிறிதும் ஐயம் வேண்டாம் : ஏனெனில் அவை ஒரு தொடரிலே இருப்பினும் அவற்றின் இடையில் வேறுசுவை வருமாயின் பகை நீங்குகின்றது. உ-ம்.

"நிலமார் புழுதி நிலவுறு முடலைவிண்
தலமார் பாரி சாதத் தருவின்
மணமார் மலர்த்துகள் மார்புகொண் டனராய்க்
கணமார் நரியினங் கவவுறு சடத்தை
அமர மாத ரணைந்திடு புயங்கொண்
டிமைக்குந ராய்ச்செங் குருதிசிறை கொண்ட
ஊனயில் கழுகு விசிறிய வுடலைக்
கானமர் சந்தின் கவினல முற்ற
கற்பகத் தளிரின் சிவிறிபெற் றனராய்
விரைநறுங் குழலர்மெல் விரல்கொண்டு காட்ட
உரைபெறு விமானத் தமர்ந்து
கரையறு வியப்பொடும் வயவர் கண்டனரே."[1]

ஈண்டுச் சிருங்காரச்சுவை பீபற்சச் சுவை இவ்விரண்டற்கும் அன்றி இவற்றின் அங்கங்கட்கும் இடையில் வீரச்சுவை பெறப்படுதலின், குற்றம் வாராது.

பகையையும் பகையின்மை யுமிவ்வா றுணர்க
சிருங்காரச் சுவைமிக வினிதா யிருத்தலின்
சிறந்த கவனத் துடனுங் கிருக்க. (கா. 83½)

1. போரில் வீழ்ந்து வீரசுவர்க்கம் அடையப் போகும் வீரர் சுவர்க்கத்திலிருந்து தேவமகளிருடன் வந்த விமானங்களில் ஏறிக் கொண்டு, அவர்களால் காட்டப்படும் தம்முடல்களைப் பார்க்கின்றனர். அவ்வுடலைப்பற்றிய பகுதிகளில் பீபற்சம் விளங்குகின்றது ; விமானத் துள்ள நிலையைப்பற்றிய பகுதிகளில் சிருங்காரம் விளங்குகின்றது ; இடையில் வீரம் விளங்குகின்றது.

ரஸிகன் முற்கூறப்பட்ட இலக்கணத்தை ஒட்டிப் பிரபந்தங் களிலும் வேறிடத்தும் எல்லாச்சுவையையுங் குறிக்குமிடத்து விரோதம் விரோதமின்மை இவற்றை அறிதல்வேண்டும். சிருங்காரச்சுவையை வருணிக்கும்போது அவ்விலக்கணத்தை மிக்க கவனத்துடன் நினைத்தல்வேண்டும். ஏனெனில் அச்சுவை ரதியின் பரிபோஷத்தால் உண்டாவதாலும், ரதி சிறுகாரணத் தானுங் குறைவுபடுமாதலானும் அச்சுவை ஏனைய சுவைகளைக் காட்டினும் விரோதச்சுவையின் அணுகலைப் பொறுக்காது.

நற்கவி யச்சுவையி னூர்கவனத் தோடிருக்க
நன்குபுல னுமாந் தவறு. (கா. $85\frac{1}{2}$)

பேரழகுற்ற அச்சுவையிலே கவி ஏனைச்சுவையிற்காட்டிலும் சிறந்த கவனத்துடன் முயலவேண்டும். ஏனெனில் ஆங்கு அவர் தவறின், அத்தவறுகை ரஸிகர்கட்கு எளிதிற் புலப்பட, அவர் அவரை அவமதித்தற்கு இடன் தரும். சிருங்காரச்சுவை இல்லறத்தாரால் நன்கு அனுபவிக்கப்படுகின்றமையான் சுவை யெல்லாவற்றுள்ளும் அது விரும்பப்பெற்று சிறப்புற்றது.

மாணவர் கருத்துறக் காவியம் மாண்புற
இன்பச் சுவையி னங்கத் துடனே
பகைச்சுவை கலத்தற் குற்ற மாகா. (கா. $86\frac{1}{2}$)

சிருங்காரச்சுவையின் அங்கத்துடன் பகைச்சுவைகளைக் கலத்தல் முற்கூறிய இலக்கணத்தோடு இருத்தலன்றி உபதேசத்திற்குரியவரை எதிர்முகமாக்கவோ காவியத்தை அழகுறச் செய்யவோ வழங்கப்படின் குற்றமாகாது. சிருங்காரச்சுவையின் அங்கத்தால் இழுக்கப்பட்ட மனத்தர் உபதேசத்தை இனிது கொள்ளுவர். நல்லொழுக்கத்தை உபதேசிக்குமாறுள்ள நாடகாதிகள் மாணவர்களின் நன்மையின் பொருட்டே முனிவர்களால் இயற்றப்பட்டன. அன்றியும், சிருங்காரச்சுவை எல்லோர் மனத்தையும் இழுக்க ஆற்றலுடைமையான் அதனை அங்கமாகப் பொருத்தல் காவியத்திற்குப் பெருஞ்சிறப்பை மிகுவிக்கு மென்ற வகையாலும், விரோதிச்சுவையில் சிருங்காரத்தை அங்கமாகப் பொருத்தல் குற்றமாகாது. ஆகவே

"துடியிடையர் மனங்கவருந்தன்மையர் என்பதும் உண்மையே: செல்வமும் இனிய என்பதும் உண்மையே: ஆயினும் உயிரின் நிலை மதமுடைப்பெண்டிரின் கடைக்கண்பார்வை போல் நிலையற்றது."

என்ற இவை முதலானவற்றுள் சிருங்காரச்சுவையை முன்னிட்டுச் சாந்தச்சுவை கூறப்படினும், சுவைக்கேடு பயவாமை காண்க.

சுவைமுரண் முரணின் றெனுந்திற னோர்ந்து
காவிய மியற்றுவோன் கசடுறு னெங்கும். (கா. 87½)

சுவை, பாலிச்சுவை, பாவம் இவை ஒவ்வொன்றற்கு ஒவ்வொன்று எவ்வாறு பகையாகும் எவ்வாறு பகையாகாது என்பதை முற்கூறப்பட்ட விதிகளை மனத்திற் கொண்டு ஒரு கவி காவியஞ் செயப் புகின் அவர் ஒருபோதும் மயக்குறார்.

இவ்வாறு சுவைகளைக் குறித்து விரோதஅவிரோதங்களின் ஆராய்ச்சி பயன்படுவதை உணர்த்தி, வியஞ்சகம், வாச்சியம், வாசகம் இவற்றைக் குறித்தும் விரோதவவிரோதங்களின் ஆராய்ச்சி பயன்படுவதை இனி உணர்த்துவர்.

சுவையின வுசித்தியத் தையொட்டிப் பெருங்கவி
வாச்சியம் வாசக மிவற்றைக் கொள்க. (கா. 88½)

சுவைகளையே காவியத்திற்குச் சிறந்த பொருளெனக் கருதி அவை நன்கு புலப்படுமாறு அதற்குத் தக்க வாச்சியப்பொருளையும் வாசகச்சொல்லையும் உணர்த்தலே பெருங்கவியின் சிறந்த செயல் ஆகும்.

இவ்வாறு சுவையை நோக்கியே காவியம் இயற்றுதல் பரத முனிவரது நாட்டியசாஸ்திரம் முதலிய நூல்களிலும் கூறப்பட்டது எல்லோரும் அறிந்ததே என்பதை அறிவிக்கும் இக் காரிகை.

அவுசித் தியத்துட னிலங்கிச் சுவையாதி
அவற்றிற் கோத்த சொற்பொருள் வழக்கே
பல்வகை விருத்தி யெனப்படு மென்ப. (கா. 89½)

வழக்கே விருத்தி எனப்படும். அவற்றுள் சுவைக்குப் பொருந்தி அவுசித்தியத்துடன் இருக்கும் வாச்சியப்பொருள்வழக்கே கைசிகீ முதலியன ஆம்[1], சொல்வழக்கே உபநாகரிகை முதலியனவாம். விருத்திகள் சுவைக்குப் பொருந்துமாறு இணைக்கப்படினே, அவை நாட்டியத்திற்கும் காவியத்திற்குஞ் சிறந்த அழகைத் தரும். அவ்விரண்டற்கும் உயிர்போன்றன சுவை முதலியவை, உடல்போன்றன கதை முதலியவை.

ஈண்டுச் சிலர் கூறுவதாவது : சுவை முதலியவற்றிற்கும் கதை முதலியவற்றிற்கும் இயைபு குணகுணித்தன்மை[2] எனக் கூறல் தகுமேயன்றி உடலுயிர்த்தன்மை எனக் கூறல் தகாது; ஏனெனில் வாச்சியப்பொருள் சுவைமயமாகவே தோன்றுகின்றதேயன்றி, அதனை விட்டுப் பிரிந்து தோன்றவில்லை என்பது. அதற்கு விடை பின்வருமாறு: வெண்மைமயம் உடல் என்பது போன்று சுவைமயம் வாச்சியப்பொருள் எனின், வெள்ளுடலின்கண் உடலோடு எப்போதும் எவர்க்கும் வெண்மை தோன்றுமாறு, வாச்சியப்பொருளுடன் சுவை முதலியன ரஸிகர் ரஸிகரல்லாதார் இருவர்க்கும் எப்போதும் தோன்றல் வேண்டும்; ஆனால், அவ்வாறு தோன்றவில்லை. இச்செய்தி முதற்கதிரில் நன்கு விளக்கப்பட்டது.

இனி, இரத்தினங்களின் சீர்மை எவ்வாறு இரத்தின நூலறிந்தோர்க்கே புலப்படுமோ, அவ்வாறே வாச்சியத்தின்கண் சுவை முதலியன அதனை யறிந்தோர்க்கே புலப்படுமெனின் அற்றன்று: இரத்தினத்தின் தன்மையும் சீர்மையும் ஒன்றுபட்டிருத்தலாகத் தோன்றுமாறு சுவை விபாவம் அனுபாவம முதலியவற்றோடு ஒன்றுபட்டிருத்தல்போன்றே தோன்ற வேண்டும். ஆனால் அவ்வாறு தோன்றவில்லை; விபாவம் அனுபாவம், வியபிசாரி இவையே சுவை என ஒருவரும் உணரவில்லை; ஆகவினன்றே நியதமாய் விபாவாதியின் அறிவின்பின் சுவை முதலியவற்றின் அறிவு உண்டாக, அவ்விரண்டற்கும்

1. முதலியன என்பது ஆரபடி சாத்துவதி, இவற்றைக் குறிக்கும்.

2. சுவை குணமாகவும், வாச்சியப்பொருள் குணியாகவும் இருக்குந் தன்மை.

காரணகாரியபாவமாகிய இயைபினால் கிரமம் இன்றியமையாது இருத்தல்வேண்டும் எனினும் அம்முறை விரைவினால் தோன் றுமையின் சுவை முதலியன முறையில்தோற்றத்தொனி எனக் கூறப்பட்டன, என்பது முன்னரே இந்நூலில் விளங்கும்.

'பிரகரணம் முதலியவற்றோடு கூடிய சொல்லே வாச்சியப் பொருளையும் வியங்கியப்பொருளையும் ஒருகாலத்தே புலப் படுத்துகின்றமையான், அங்கு முறையை ஏன் கொள்ளல் வேண்டும்? சொல்லது வாச்சியப்பொருளை உணர்த்தலே வியங்கியப்பொருளை உணர்த்தற்கு ஏது எனக் கூறல் தகாது, சங்கீதம் முதலிய ஒலிகளால் சுவை முதலியன தோன்று கின்றன, இடையில் வாச்சியப்பொருள் குறிக்கப்படுவதில்லை' என ஒருவர் கூறலாம்; அதற்கு விடை பின்வருமாறு:— பிரகரணம் முதலியவற்றோடு கூடிய சொற்களே வியஞ்சக மாகின்றன என்பது எமக்கும் உடன்பாடு தான்; ஆயினும் சொல் வியஞ்சகமாவது சிலவிடத்துத் தன்னுருவவிசேடத் தாலே, சிலவிடத்து வாசகசக்திமூலமாக; எச்சொல் வாசக சக்திமூலமாக வியஞ்சக மாகின்றதோ, ஆங்கு வாச்சியப் பொருளைத் தோற்றுவிக்காது தன்னுருவத்தானே வியங்கியப் பொருளை அறிவிக்கின்றது எனக் கொள்ளின், ஆங்கு வாசக சக்திமூலமாக அது வியஞ்சகமாகின்றது என்பது பொருந்தாது. அவ்வியஞ்சகத்தன்மை வாசகத்தன்மையை மூலமாகக்கொண்ட தெனின், வாசகத்தன்மையான் வாச்சியப்பொருள் தோன்றிய பிறகே வியஞ்சகத்தன்மையான் வியங்கியப்பொருள் தோன் றும் என்பது வெளிப்படை. அவ்விரண்டற்கு முள்ள முறை விரைவால் தோன்றவில்லை எனின் அதற்கு என்ன செய்வது? வாச்சியப்பொருளின் அறிவின்றியே பிரகரணம் முதலியவற் றோடு கூடிச் சொற்களானே சுவையறிவு உண்டாமெனின், இச்சொற்கு இதுதான் பொருள் எனத் தாம் அறியாது பிரகர ணம் முதலியவற்றை மாத்திரம் அறிந்தவரான் காவியத்தைக் கேட்டமாத்திரத்தில் சுவை நுகரப்படவேண்டும், அவ்வா றில்லை. வாச்சியப்பொருளும் வியங்கியப்பொருளும் ஒரு காலத்தே தோன்றுமாயின், வாச்சியப்பொருளான் ஒரு பயனு மில்லை. அதனாற் பயன் உண்டு எனின், அவ்விரண்டும் ஒரே காலத்துத் தோன்றுதல் இயலாது.

தன்னுருவவிசேடத்தாலே சங்கீதவொலிகள் போன்று சொற்கள் வியஞ்சகமாம்போதும் அவற்றின் உருவவிசேடத்தின் அறிவிற்கும் வியங்கியப்பொருளின் அறிவிற்கும் முறை நியதமாய் இருத்தல் வேண்டும்.

அவ்வச்சுவையையே பயனாகவுடைய சங்கடனைகள் விரைவில் சுவையைத் தோன்றுமாறு செய்ய வாச்சியப்பொருட்கு எதிரிடையாயிராததும், மற்றுமொரு வாச்சியப்பொருளெனக் கூறத் தகாததுமான சுவை தோன்றுமிடத்து, சொற்களின் வியாபாரங்களாகிய வாசகத்தன்மை, வியஞ்சகத்தன்மை இவற்றின் முன்பின்னராங் கூறுபாடு தோன்றவில்லை. மணியொலியொத்ததொனி போன்ற சில விடங்களில் அது தோன்றும். ஆங்கும் எவ்வாறு தோன்றுமெனின் ஈண்டு அது கூறப்படும்:—

முதன்முதலாக அருத்தசக்திமூலமணியொலித்தொனியில் வாச்சியப்பொருளினின்றும், அதன் வலியாற் குறிக்கப்பட்டு மற்றொரு வாச்சியப்பொருளாகக் கருத இயலாத வியங்கியப்பொருளினின்றும் உண்டாம் தோற்றம் முற்றிலும் ஒன்றோடொன்று வேறுபட்டு ஒன்று நிமித்தமாகவும் மற்றொன்று [1] நிமித்தியாகவும் இருத்தல் மறைக்க முடியாமையால் முன்பின்னராந்தன்மை வெளிப்படையாகவே உளது. இதற்கு உதாரணம் முதற்கதிரில் வியங்கியப்பொருளின் உண்மையை உணர்த்த உதாரணமாகக் கூறப்பட்ட செய்யுட்கள் ஆகும். அவ்வாறுள்ள இடத்தில் வாச்சியமும் வியங்கியமும் முற்றிலும் மாறுபட்டிருத்தலான் ஒன்றன் தோற்றம் மற்றொன்றன் தோற்றம் எனக் கூற இயலாது.

மக்களை.....தருக (பக். 66) போன்ற விடத்துள்ள சத்தசத்திமூலத்தொனியில் சொல்லாற்றலால் இருபொருள் புலப்பட, ஆங்கு உவமையைக் குறிக்குஞ் சொல் இல்லாமலே பொருள்வலியான் அவ்விரண்டு பொருட்கும் உவமானஉவமேயத்தன்மை புலப்படுகின்றமையான், ஆங்கும் வாச்சியப்பொருள் தோன்றுங் காலத்திற்கும் வியங்கியமாகிய அணி தோன்றுங் காலத்திற்கும் முன்பின்னராந்தன்மை எளிதிற் காணப்படும்.

1. நிமித்தமுடையது நிமித்தி ஆகும்.

சொல் வியஞ்சகமாகும் சப்தசத்திமூலத்தொனியிலும் இருபொருட்கு மியையும் விசேடணச்சொல்லை இரண்டிடத்தும் பொருத்துதல் அதனைக் கூறுஞ் சொல்லின்றி நிகழ்கின்றமையான், வாச்சியப்பொருட்கும் அதன் வழி புலப்படும் வியங்கயவணிமாத்திரத்திற்கு முள்ள தோற்றங்களின் முன்பின்னராந்தன்மை முன்போல் நன்கு புலப்படும். ஆங்கு விசேடணத்தின் இரண்டாம் பொருளின் வழியே தோன்றும் அணி செய்யுட்பொருள்களை ஆயுமிடத்தே தோன்றினும், பின்னரும் இருபொருட் குறிக்கு முரிமையுடைய அச்சொற்களில் இரண்டாம் பொருள் குறிக்குமாற்றல் பிழைப்பிக்கப்பட அது தோன்றுகின்றமையான், அது சப்தசத்திமூலத்தொனி எனவே கூறப்படும்.

கருதாவாச்சியத்தொனியிலோ எல்லோரான் அறியப்படும் வாச்சியப்பொருளைக் கொள்ளாது மற்றொரு பொருளைக் கொள்ளுதலின், அவ்விரண்டன் உணர்விற்கும் முன்பின்னராந்தன்மை நியதமாயுளது. அத்தொனி கருதாவாச்சியமாகையாலே வாச்சியப்பொருள் வியங்கியப்பொருள் இவை தோன்றுங் காலத்தின் முன்பின்னராந்தன்மை ஆங்கு ஆயப்பட்டிலது.

ஆகலின், சொல்லின் உருவம் அதன் வாச்சியப்பொருள் இவை அறியப்படும் காலத்திற்கு எவ்வாறு முன்பின்னராந்தன்மை உண்டோ, அவ்வாறே வாச்சியப்பொருள் வியங்கியப்பொருள் இவ்விரண்டும் அறியப்படும் காலத்திற்கும் முன்பின்னராந் தன்மை நியதமாய் உண்டு. அது முற்கூறியவாறு சிலவிடத்துப் புலப்படும், சிலவிடத்துப் புலப்படாது.

இவ்வாறு வியஞ்சகமுகமாகத் தொனிவகைகள் கூறப்பட, பின் வருமாறு ஒருவர் கூறலாம்: வியஞ்சகத்தன்மை என்பது யாது? அது வியங்கியப்பொருளைக் குறிக்குந் தன்மை எனக் கூறல் இயலாது; ஏனெனில், வியங்கியப்பொருளைக் குறித்தலால் வியஞ்சகத்தன்மை சித்திக்கவேண்டும்: வியஞ்சகத்தாற் குறிக்கப்படுதலால் வியங்கியப்பொருளாந் தன்மை சித்திக்கவேண்டும்: ஆகலின் அன்னியோன்னியாச்சிரயம்[1] என்ற குற்றம் வர, பொருள்மயக்கம் நேரும். வாச்சி

1. ஒன்றனையொன்று பற்றுக்கோடாகக் கொள்கை அன்னியோன்னியாச்சிரயம் ஆகும்.

சியப்பொருளின் வேறுபட்டது வியங்கியப்பொருளென முதற் கதிரிலே விளக்கமாகக் கூறப்பட்டமையான், அவ்வியங்கியப் பொருளைக் குறிக்குந்தன்மை வியஞ்சகத்தன்மை என்றுற் படும் இழுக்கு என்னை எனின், அஃது உண்மைதான். ஆங்கு வாச்சியப்பொருளினின்றும் வேறுபட்ட பொருள் சித்திப்பது யுக்திகளாற் கூறப்பட்டது; ஆங்கு பின்னர்த் தோன்றும் பொருள் வியங்கியப்பொருள்தான், வாச்சியப்பொருளன்று, எனக் கொள்ளுதற்கு யாது சான்று உளது? ஒரு தொடர் எப்பொருளைக்கொண்டு முடிபுற்று நிற்கின்றதோ, ஆங்கு அப்பொருளை வாச்சியமென்றே கூறுதல் தகும், அதனைக் குறித்தே வாசகமாகிய தொடர் கூறப்படுதலின். ஆகலின், அப்பொருளைக் குறிக்கும் தொடரின் வியாபாரம் வாசகத்தன்மையெனவே கூறல் பொருந்தும். அவ்வாறின்றி (வியஞ்சகத்தன்மையென) மற்றொரு வியாபாரத்தை ஏன் கொள்ளல்வேண்டும்? ஆகலின், தொடரின் முடிவுறுபொருளே அதற்கு வாச்சியப்பொருளாகும்; இடையிற் றோன்றும் மற்றொரு வாச்சியப்பொருள், தொடர்ப்பொருள் தோன்றுதற்குச் சொற்பொருள் உபாயமாவதுபோன்று, முடிவுறுபொருட்கு உபாயமே யாம். இதற்கு விடை பின்வருமாறு: சொல் எங்குத் தன்பொருளைக் குறித்த பின்னர் மற்றொரு பொருளைக் குறிக்கின்றதோ, ஆங்குத் தற்பொருள் குறிக்குந்தன்மையும் பிறபொருள் குறிக்குந்தன்மையும் வேற்றுமையில்லனவா, வேறுபட்டனவா? வேற்றுமையில்லெனக் கூறுதல் தகாது, அவ்விரண்டன் விஷயமும் தன்மையும் வேறுபட்டிருத்தலான். அதனைப் பின்வருமாறு விரிவாய்க் கூறலாம்: சொல்லின் வாசகத்தன்மை என்ற வியாபாரத்திற்கு விஷயம், அச்சொல்லின் பொருளாகும், அதன் வியஞ்சகத்தன்மை என்பதற்கு விஷயம் மற்றொரு பொருளாகும்; அப்பொருள்கள் அச்சொல்லின் தன்பொருள் பிறபொருள் என்ற வழக்கை ஒருவரும் மறைக்க இயலாது; ஏனெனில், ஒன்று அச்சொல்லோடு நேரில் இயைபுபட்டது, மற்றொன்று இயைபுபட்ட பொருளோடு இயைபுபட்டது; நேரில் இயைபுபட்டது வாச்சியப்பொருளாகும்; இயைபுபட்ட பொருளோடு இயைபுபட்டது வாச்சியப்பொருளின் வலியாற்

1. இப்பூர்வபக்கம் பூர்வமீமாம்ஸகராகிய பாட்டர், பிராபாகரர் இவர் தமக்கும் வையாகரணர்க்கும் பொருந்தும்.

பெறப்பட்டதாகும்; வியங்கியப்பொருள் சொல்லோடு நேரில் இயைபுபட்டதெனக் கொள்ளின், அதனைப் பிறபொருளென வழங்குவதே பொருந்தாது; ஆகலின், வாசகத்தன்மை வியஞ் சகத்தன்மை இவ்விரண்டற்கும் விஷயம் வேறு என்பது நன்கு புலப்படும்.

அவ்விரண்டன் தன்மையும் வேறுபட்டன என்பது நன்கு அறியப்பட்டதே:—வாசகசக்தியே வியஞ்சகசக்தி எனக் கூறல் இயலாது; வாசகசக்தியே இன்றி வியஞ்சகசக்தியை மாத்திரம் கொண்ட சங்கீதவொலி முதலியனவும் சுவை முதலிய பொருளின் உணர்வையாக்குதலைக் கண்டமையானும் ஒலியல்லாத சைகை முதலியனவும் வியஞ்சகசக்தியை உடையவாயிருக்கின்றமையானும் சைகைவிசேடம் வியஞ்சகமாகும் எனச் சிறந்த கவி

"தந்தைதாயரின் முன்னர்...கூறிய தாகாதோ?"
(பக். 96)

என்றவிடத்துக் காட்டியுள்ளார். ஆகலின் சொல்லின் வாசகத்தன்மைக்கும் வியஞ்சகத்தன்மைக்கும் தன்மை வேறுபடுதலானும் விஷயம் வேறுபடுதலானும், அவை வெவ்வேறு என்பது வெளிப்படை. அவ்வாறாயின் வாச்சியப்பொருளினின்றுந் தோன்றும் மற்றொரு பொருளை வாச்சியப்பொருளெனக் கூறலுந் தகாது, அது சொல்லின் வியாபாரத்தாற் றோன்றும் எனக் கொள்ளலும் வேண்டும்; அவ்வியாபாரத்தால் தோன்றுகை வியங்கியமாவதல்லது வாச்சியமாக இன்று. அப்பிறபொருள் மற்றொரு வாசகச்சொற்கு வாச்சியப்பொருளாதற் றகுதியுடன் கூடி விளங்குவதால், தன்பொருள்வாசகமாம் சொல்லான் அப்பிறபொருள் தோன்றுவது வியஞ்சன விருத்தியால் எனக் கூறலே பொருந்தும்,[1] அன்றியும்

1. இக்கண் மூலம் அச்சிட்ட பிரதிகளில் முன்பின்னாகச் சிதைந்துளது. அதைப் பின் வருமாறு படிக்கவேண்டும் என என் ஆசிரியர் கூறினர்.

स्वार्थाभिधायिना प्रसिद्धाभिधानान्तरसंबन्धयोग्यत्वेन च शब्दान्तरेण तस्यार्थान्तरस्य यद्विषयीकरणं तत्र प्रकाशनोक्तिरेव युक्ता

வாச்சியத்திற்கும் வியங்கியத்திற்கு முள்ள இயைபிற்குச் சொற்பொருள் தொடர்ப்பொருளின் இயைபு திருஷ்டாந்தமாகாது. அதற்குக் காரணம் யாதெனின், சொற்பொருள் தோன்றுதல் உண்மையன்று எனச் சில பேரறிஞரால்[1] கொள்ளப்படுதல் ஒன்று; சிலர் சொற்பொருள்தோன்றுதல் உண்மையன்றெனக் கொள்ளாவிடினும் அவர் குடத்திற்கும் அதன் உபாதானகாரணமான மண்ணுக்கு முள்ள இயைபினைச் சொற்பொருள் தொடர்ப்பொருளியைபிற்குத் திருஷ்டாந்தமாகக் கொளல்வேண்டும். குடம் வனைந்தபிறகு அதன் உபாதானகாரணத்தின் அறிவு தனிப்பட்ட நிலைமையில் இல்லாமைபோன்று தொடரோ, தொடர்ப்பொருளோ தோன்றியபிறகு சொல்லோ சொற்பொருளோ தனிப்பட்ட நிலைமையில் தோன்றவில்லை; தனிப்பட்ட நிலையிற் றோன்றுகின்றதெனின், தொடர்ப்பொருளே தோன்றுமற் போம். இம்முறை வாச்சியப்பொருள் வியங்கியப்பொருள் இவ்விரண்டற்கும் இல்லை; வியங்கியப்பொருள் தோன்றுமிடத்து வாச்சியப்பொருள் தோன்றுமலில்லை, வாச்சியப்பொருளின் தோற்றத்தைத் தொடர்ந்தே வியங்கியப்பொருள் தோன்றுகின்றமையான். ஆகலின், அவ்விரண்டற்குமுள்ள இயைபு, குடம் விளக்கு இவற்றின் இயைபு போன்றது. விளக்கு குடத்தை விளக்கிக்காட்டியபின்னர் அவ்விளக்கொளி அங்கே இருப்பதுபோன்று வியங்கியப்பொருள் தோன்றிய பின்னரும் வாச்சியப்பொருள் தோன்று மென்பதே துணிபு ஆகும். முதற்கதிரில்,

சொற்பொருள் வழியே தொடர்ப்பொருள் தோன்றும்

அதுபோல்,

வாச்சிய வழியே யப்பொரு ளறிவே. (கா. 10)

எனக் கூறப்பட்டதே எனின், அங்குத் தொடர்ப்பொருட்குச் சொற்பொருள் எவ்வாறு உபாய மாகுமோ, அவ்வாறே வியங்கியப்பொருட்கு வாச்சியப்பொருள் உபாய மாகும் என்ற கருத்தை மாத்திரம் நோக்கி அவ்வாறு கூறப்பட்டதென்க.

1. இவர் வடமொழிவியாகரணநூலார் ஆவர்.

அவ்வாறாயின் ஒருகாலத்தில் தானே இரண்டுபொருள் தொடர்க்குத் தோன்றும் எனக் கொள்ளல்வேண்டும்; அப்போது அதற்கு ஒருதொடராந்தன்மையே நீங்கும், அதற்கு ஒருபொருளையே உணர்த்தல் இலக்கணமாதலால் எனின்; அற்றன்று; அப்பொருள் ஒன்றைச் சிறந்ததாகவும் மற்றொன் றைச் சிறப்பிலதாகவும் கொண்டமையின் என்க. சிலவிடத்து வியங்கியப்பொருள் சிறக்க, வாச்சியப்பொருள் அடங்கி யிருக்கும்; சிலவிடத்து வாச்சியப்பொருள் சிறக்க, வியங்கியப் பொருள் அடங்கியிருக்கும். வியங்கியப்பொருள் சிறக்குமிடம் தொனி எனப்பட்டது; வாச்சியப்பொருள் சிறக்குமிடத்து அது வேறுவகை யெனப் பின்னர்க் கூறப்படும். ஆகலின், காவியம் வியங்கியப்பொருளைக் குறித்து நிற்குமாயினும் வியங்கியப் பொருள் வாச்சியப்பொருளாகாது வியங்கியப்பொருளே யாகும்.

வியங்கியப்பொருள் எங்குச் சிறப்பிலதோ ஆங்குச் சொல் அதனையே நோக்கி இல்லாமையான் அதனை வாச்சிய மாகவே நீவிர் ஒத்துக்கொள்ளுதல் தகாது; ஆகலின், வியங் கியப்பொருள் என ஒன்று (வாச்சியப்பொருளினின்றும் வேறு பட்டு) சொல்லாற் குறிக்கப்படும் என்பது பெறப்படும். அவ்வாறிருக்க, எங்குச் சிறப்புற்றதோ ஆங்கு அஃதில்லை என ஏன் மறுக்கவேண்டும்? ஆகலின் கூறப்பட்ட காரணங்களான் வியஞ்சகத்தன்மை வாசகத்தன்மையினின்றும் வேறுபட்டது என்பது பெறப்படும். அதற்கே மற்றொரு காரணமுங் கூறல் தகும்; அஃதாவது—வாசகத்தன்மை சொல்லையே பற்றியது, வியஞ்சகத்தன்மையோ சொல், பொருள் இரண்டனையும் பற்றியது என்பதுவே. ஆகலினன்றே தொனியின் இலக்கணத் தைக் கூறுமிடத்து, அத்தன்மை சொல் பொருள் இரண்டற்கு முரியது என உணர்த்தப்பட்டது.

(இனிச் சொல் பொருள் இரண்டையும்பற்றி வரும் குண விருத்தியும் வியஞ்சகத்தன்மையினின்று வேறுபட்டது என்பது உணர்த்தப்படும்.)

குணவிருத்தியோ உபசாரத்தாலும்[1] இலக்கணையாலும்[2] சொல் பொருள் இரண்டையும்பற்றி வரினும், அது வியஞ்சகத்

1. இவன் சிங்கம் என்புழி உபசாரவழக்கு.
2. கங்கையின்கண் கோஷம் முதலியன இலக்கணைவழக்கு.

தன்மையிலிருந்து தன்மையானும் விடயத்தானும் வேறுபட்டது. முதலில் தன்மையான் வேறுபட்டது என்பது உணர்த்தப்படும் :—குணவிருத்தி சொற்கு அமுக்கிய வியாபார மென்பதும், வியஞ்சகத்தன்மை முக்கிய வியாபார மென்பதும் எல்லோரும் அறிந்தனவே (பக். 16). வஸ்து, அலங்காரம், ரஸம் என இவற்றின் வடிவான மூன்றுவகை வியங்கியப் பொருளும் ஒருபோதும் அமுக்கியம் எனத்[1] தோன்றவில்லை. மற்றுமொரு சொரூபவேறுபாடு இரண்டற்கும் உண்டு; குணவிருத்தி சிறிது இடையீடுற்ற வாசகத்தன்மையே யாகும்; வியஞ்சகத்தன்மையோ வாசகத்தன்மையினின்றும் முற்றிலும் வேறுபட்டது: இதுவும் விவரமாக உணர்த்தப்பட்டது. மூன்றுவது வேறுபாடு முண்டு :—குணவிருத்தியில் சொற்பொருள் வேறுபொருளை இலக்கியப்பொருளாகக் குறிக்கும்போது அச் சொற்பொருளே அவ்விலக்கியப்பொருளாக மாறுகின்றது. இதற்கு உதாரணம் :—கங்கையின்கண் கோஷம்[2] என்பது முதலியன. வியஞ்சகத்தன்மை இருக்கையில் சொற்பொருள் மற்றொரு பொருளைக் குறிக்கும்போது அது வியங்கியப்பொருளாக மாறாது, தன்னுருவத்தைத் தனியாய்க் காட்டிக்கொண்டு விளக்குப்போல் மற்றொருபொருளையுங் குறிக்கின்றது. இதற்கு உதாரணம் :—

"தேவமுனி...ளின்றாள்" (பக். 69) என்பது முதலியவை. வாச்சியப்பொருள் தான் மறைவுபடாது எங்கு மற்றொரு பொருளைக் குறிக்குமோ, அங்கு இலக்கணைதான் என்ற வழக்கெனின், பெரும்பாலுமே தொடர் வாச்சியப்பொருளினின்றும் வேறுபட்ட தாற்பரியப்பொருளைக் குறித்தலின், அவ்விலக்கணையே சொல்லின் முக்கிய வியாபாரமாக முடியும். மூன்றுவகை வியங்கியப்பொருளையும் வாச்சியப்பொருள் குறிக்கும்போதும் கொள்கையிலும் சொற்கு யாது வியாபார மெனின்,

1. அமுக்கியமென = சொல்லைக்கேட்டபோது தோன்றும் பொருள் பொருந்தாதிருக்க.

2. கங்கை என்ற சொல் கங்கையின் வெள்ளத்தை அபிதையாற் குறிக்க அது இடைச்சேரிக்கு இருப்பிடமாகப் பொருந்தாது. கங்கைக் கரையை இலக்கியப்பொருளாகக் கொள்ள, அக்கங்கைக்கரை என்பதே கங்கை என்ற சொற்குப் பொருளாக முடிகிறது.

பிரகரணம் முதலியவற்றோடு கூடிய சொல்லின் துணையானே வாச்சியப்பொருள் வியங்கியத்தைக் குறிக்கின்றமையான், ஆங்குச் சொற்கு உபயோகத்தை யார் தான் மறுப்பர்?

குணவிருத்தி வியஞ்சகத்தன்மை இவ்விரண்டற்கும் விஷயத்தின்கண்ணும் வேறுபாடு உண்டு என்பது வெளிப் படையே. வியஞ்சகத்தன்மைக்கு விஷயம் சுவை முதலியன, அணிவகை, வியங்கியமாகிய வஸ்து என மூன்று ஆகும். அவற்றுள் சுவை முதலியன குணவிருத்தியாற் புலப்படு கின்றன என்று ஒருவரும் இதுவரை கூறவுமில்லை, அவ்வாறு கூறவும் இயலாது. வியங்கியமான அணிவகையும அவ்வாறே ஆகும். சொல்லால் வாச்சியமாகக் கூறப்படாது அழகைக் கருதி உணர்விக்க விரும்பப்படும் வஸ்து வியங்கியர் எனப்படும். பிரசித்தி வழக்கையனுசரித்தல் இவற்றுல் கௌணச்சொற்கள் வழங்கப்படுகின்றமையான், அவை முற்றிலும்[1] குண விருத்திக்கு விஷய மாகா என முன்னரே கூறப்பட்டது. அவ் வஸ்து அச்சொற்கு விஷயமாயின், வியஞ்சகத்தன்மையா னன்றிக் குணவிருத்தியா னன்று. ஆகலின், குணவிருத்தியும் வியஞ்சகத்தன்மையும் முற்றிலும் வேறுபட்டன.

வாசகத்தன்மை குணவிருத்தி இவற்றினின்றும் வேறுபட் டிருப்பினும், வியஞ்சகத்தன்மை அவ்விரண்டனையும் பற்றுக் கோடாகவே கொண்டது: கருதிவேறின்னோக்கும்வாச்சியத் தொனியில், அது வாசகத்தன்மையைப் பற்றுக்கோடாகக் கொண்டது; கருதாவாச்சியத்தொனியில் அது குணவிருத்தி யைப் பற்றுக்கோடாகக் கொண்டது. அவ்விரண்டனையும் அது பற்றுக்கோடாகக்கொண்டது என்பதை விளக்குதற்கே தொனி முதலில் இருவகையாகப் பிரிக்கப்பட்டது. அவ்விரண் டனையும் அது பற்றுக்கோடாகக் கொண்டமையான் அவற் றோடு இது ஒன்றுபடும் எனக் கூறல் தகாது, குணவிருத்தியைப் பற்றுக்கோடாகக் கொண்டவிடத்து வாசகத்தன்மையோடு

1. லாவண்யம் முதலிய சொற்களில் பிரசித்தியும், கூறும் (பக். 30) என்ற சொல்லில் வழக்கையனுசரித்தலும் காணத்தக்கனவை. ஈண்டு முற்றிலும் அழகு காணப்படாவிடினும், சமாதி என்ற குணத்தை ஒட்டிச் சிறிது அழகு காணப்படுகிறது.

ஒன்றுபடுதற்கியைபின்மையானும், வாசகத்தன்மையைப் பற்றுக்கோடாகக் கொண்டு குணவிருத்தியோடு ஒன்றுபடுதற்கு இயைபின்மையானும். அது இரண்டற்குமுரிய தர்மம் என்ற காரணத்தால் மாத்திரம் ஒவ்வொன்றோடும் ஒன்றுபடாது என்பது மாத்திரம் இல்லை; ஏனெனில், வாசகத்தன்மை குண விருத்தி இவ்விரண்டும் இல்லாதவிடத்தும் அஃது இருக்கின்றது. அஃதாவது :- சுவைத்தொனி சங்கீதவொலிகளுக்கு உளது; ஆங்கு வாசகத்தன்மையோ குணவிருத்தியோ இல்லை. சொல்லைத் தவிர்த்து வேற்றிடத்திலும் வியஞ்சகத்தன்மை இருக்கின்றமையான், அது, சொல்லை மாத்திரம் சார்ந்த வாசகத்தன்மை குணவிருத்தி இவற்றோடு ஒன்றுபட்டதாகக் கூறல் தகாது. வாசகத்தன்மை குணவிருத்தி இவற்றின் பிரசித்தமான வகைகளைக் காட்டிலும் வியஞ்சகத்தன்மை வேறுபடினும், அது அவற்றின் மற்றொரு வகை என ஒருவர் கூறின், அது சொல்லின் மற்றொருவகை என ஏன் அவர் கூறலாகாது? ஆகலானே சொல்லை வழங்குமிடத்து வாசகத் தன்மை, குணவிருத்தி, வியஞ்சகத்தன்மை இம்மூன்று வியா பாரவகையுமுள ; வியஞ்சகத்தன்மை இருக்கும்போது வியங்கியப்பொருட்குச் சிறப்பிருப்பின், அது தொனி யாகும்; அத்தொனி கருதாவாச்சியத்தொனி, கருதிவேறினைநோக்கும் வாச்சியத்தொனி என முதலில் இரண்டாகப் பிரிக்கப்படுமெனக் கூறிப் பின்னர் அதன் வகைகள் விரிவாய்க் கூறப்பட்டன.

மற்றும் ஒருவர் பின் வருமாறு கூறலாகும் : கருதிவேறினை நோக்கும் வாச்சியத்தொனியின்கண் குணவிருத்தியின் தன்மை இல்லை என்பது உண்மையே. வாசகச்சொல் வாச்சியப்பொருள் இவ்விரண்டனையுமே முன்னிட்டு வியங்கியப்பொருள் தோன்றுமவ்விடத்து குணவிருத்தி என்ற வழக்கு எவ்வாறு வரும்? ஒரு காரணத்தைக்கொண்டு ஒருசொல் தன்பொருளை முற்றுமே குறியாது மற்றொருபொருளில் ஏற்றப்பட்ட மாணவன் தீ என்றவிடத்திற்போன்றும், சொல் தன்பொருளைச் சிறிது விடாது இயைபுபட்ட பொருளைக் கொள்ளும் கங்கையில் இடைச்சேரி என்றவிடத்திற்போன்றுமுள்ள குணவிருத்தியில் வாச்சியம் கருதப்படவில்லையே. ஆதலின் கருதிவேறினை நோக்குந்தொனியில் வாசகம் வாச்சியம் இவற்றின் உருவமும்

அவற்றின் வேறுபட்ட பொருளின் உணர்வும் காணப் படுகின்றன என்ற காரணத்தால் ஆங்கு வியஞ்சகத் தன்மை உளது என்பது யுக்திக்கு ஒட்டியது. தன்னைத் தோற்றுவித்துக்கொண்டே மற்றொன்றை விளக்குவதே வியஞ்சகம் எனக் கூறப்படுகின்றது. ஆங்கு வாசகத் தன்மைபோல் வியஞ்சகத்தன்மையும் உளது என்ற காரணத் தால் குணவிருத்தி யென்ற வழக்கு ஒருக்காலும் கொள்ள இயலாது. கருதாவாச்சியத்தொனியிலோ வெனின், அதன் இருவகையிலும் குணவிருத்தியின் இருவகையும் நியதமாய்த் தோன்றுகின்றமையான் ஆங்குத் தொனி குணவிருத்தி யினின்றும் எவ்வாறு வேறுபடும்? என்பது அதற்கு விடை:— இதுவும் குற்றமன்று; கருதாவாச்சியத்தொனியில் தொனி குணவிருத்தியைப் பற்றுக்கோடாகக் கொள்ளினும், அது குணவிருத்தியோடு ஒன்றுபடாது. அவ்வாறு கூறுதற்குக் காரணம் யாதெனின், வியஞ்சகத்தன்மையின்றியும் குண விருத்தி காணப்படுகின்றது. முற்கூறப்பட்ட அழகிற்குக் காரணமான வியங்கியமின்றி வியஞ்சகத்தன்மை நிலைபெறாது. குணவிருத்தியோ, கொடுமை காரணமாக மாணவன் தீ என்றும் மகிழ்ச்சியூட்டுதல் காரணமாக மதியே இவள்முகம் என்றும் இவ்வாறான இடங்களில், வாச்சியப்பொருளின் தருமமாகிய அபிதையை நிலைநிற்கச்செய்ய[1] வரும் வியங்கியம் என்ற பொருளைக் கருதி ஒன்றுக்கொன்று (மாணவன் = தீ; இவள் முகம் = மதி) வேறுபாடின்றிக் கூறுதலை யுடையது. இவ்வாறே புனருத்தம், ஆங்கில்லை முதலிய இடங்களிலும். இலக்கணை யுருவங்கொண்ட குணவிருத்தியோ கட்டில்கள் கதறுகின்றன என்பது போன்ற இடங்களில் இலக்கியப்பொருளின் சம்பந் தத்தை மாத்திரம் குறித்து அழகுற்ற வியங்கியப்பொரு ளின் அறிவின்றியுமே நிற்கின்றது. எங்கு அஃது அழகுற்ற வியங்கியப்பொருளை நோக்கி நிற்கின்றதோ, ஆங்கும் வியஞ் சகத்தன்மையை உள்ளிடத்துக்கொண்டே வாசகத்தன்மை போன்று இருக்கின்றது எனக் கூறல் வேண்டும். பூமியினின்று செம்பொன்னைப் புட்பிக்கும் செடியை (பக். 27) என்பது

1. ஈண்டு வியங்கியப்பொருள் சிறப்புற்றதாகவு மிருக்கலாம், அடங்கியும் இருக்கலாம்.

போன்ற விடங்களில் ஆற்றற்பொருள் ஒருபோதும் பொருந் தாமையான், அவ்வாறுள்ள வழக்குகள் வியங்கியப்பொரு ளுணர்வினைக் கருதியே உலகத்து வந்திருத்தலின், அங்குக் குணவிருத்தி இருப்பினும் தொனி எனக் கூறுதலே பொருத்த முடைத்து. ஆகலின், கருதாவாச்சியத்தொனியின் இருவகை யிலும் வியஞ்சகத்தன்மை வியாபித்த குணவிருத்தி உளது; அவ்விரண்டும் ஒன்றுபடா, அது ரஸிகர்களுக்கு மகிழ்ச்சியைத் தரும் வியங்கியப்பொருளுணர்விற்குக் காரணமாகலானும் (மாணவன் தீ, முதலிய) வேற்றிடத்தில் அவ்வாறு மகிழ்ச்சிக்குக் காரணமாயிருத்தல் காணப்படாமையானும். இவையெல்லாம் முன்னர்க் குறிப்பாய்க் கூறப்படினும், வெளிப்படையாய் நன்கு அறிதற்பொருட்டு மறுபடியும் ஈண்டுக் கூறப்பட்டன.

அன்றியும், வியஞ்சகத்தன்மை என்று கூறப்பட்ட சொற் பொருள்களின் இயல்பு பிரசித்தமான சம்பந்தத்தை ஒட்டி யுளது என்பது, எல்லோர்க்கும் உடன்பாடாகும். சொல் பொருள் இவற்றின் பிரசித்தமான சம்பந்தம் வாச்சியவாசக பாவம் என்பதே. அதனை ஒட்டியே வேறு சாமக்கிரியின் சம்பந்தத்தால் ஔபாதிகமாக [1] வியஞ்சகத்தன்மை தோன்றும். ஆகலினன்றே, வியஞ்சகத்தன்மை வாசகத்தன்மையினின்றும் வேறுபட்டது. வாசகத்தன்மையோ சொல்லின்கண் இடை யீடின்றியிருக்குந்தன்மை பொருள்சங்கேதகாலந்தொடங்கிச் சொல்லுடன் பிரிவின்றித் தற்கிழமையாய் நியதமாக இருப் பது. வியஞ்சகத்தன்மை பிரகரணம் முதலியவற்றோடு கூடி யிருக்கும்போது தோன்றியும், அவற்றோ டிராதபோது தோன் றாமலும் ஔபாதிகமாயிருத்தலின், அது (வாசகத்தன்மை போல்) நியதமன்று.

அவ்வாறு அநியதமாயின் அதன் தன்மையைப்பற்றி ஆராய்ச்சி எற்றுக்கு எனின்; அது குற்றமாகாது: வியஞ்ச கத்தன்மை வாசகத்தன்மையோடு கூடிய சொல்லின்கண் நியத மாய் இல்லை எனக் கூறப்பட்டதேயன்றித் தனக்கு விடய மாகிய வியங்கியப்பொருள் இருக்கின்றவிடத்து அது நியதமாய்

1. இயற்கையாலின்றி வேறொன்றின் சேர்க்கையாற் றோன்று வதற்கு ஔபாதிகம் என்று பெயர்.

இல்லை எனக் கூறப்பட்டிலது. வியஞ்சகத்தன்மையிடத்து[1] லிங்கத்தன்மையின்[2] நியாயம் புலப்படும். எவ்வாறு எனின் லிங்கத்தன்மை அதன் பற்றுக்கோட்டின்கண் எப்போதும் தோன்றவேண்டும் என்ற நியதி இல்லை, அனுமானிக்கவேண்டு மென்ற விருப்பம் இருக்குமிடத்தே தோன்றுகின்றமையான். அவ்லிங்கத்தன்மை அறியப்படுங்கால் தன் விடயமாகிய சாத்தியத்தின்கண் நியதமாய் இருக்கும். அவ்வாறே இவ்வியஞ்சகத் தன்மையும். வாசகத்தன்மையோடு கூடிய சொல்லின்கண் வியஞ்சகத்தன்மை நியதமாய் இல்லாமையான், அது வாசகத் தன்மையுள் அடங்கியது எனக் கூறல் தகாது; அவ்விரண்டும் ஒன்றுயின் வாசகத்தன்மைபோன்று அது நியதமாய் இருத்தல் வேண்டும்.

ஔபாதிகமாய்த் தோன்றும் இவ்வியஞ்சகத்தன்மை, சொல், பொருள், அவற்றின் சம்பந்தம் இவை நித்திய மென்றும், தொடர் மனிதரான் இயற்றப்பட்டதும் இயற்றப் படாதது[3]மென இருவகைப்படும் என்றுங் கூறும் பூர்வமீமாம்ஸ கரால் தடையின்றி எடுத்துக்கொள்ளப்படல் வேண்டும். இன்றேல், சொல், பொருள் இவற்றின் சம்பந்தம் இவை மூன்றும் நித்தியமா யிருக்க, மனிதரான் இயற்றப்பட்ட தொடர்க்கும் அவரா னியற்றப்படாத தொடர்க்கும் மாறு பாடில்லை என அவர் கொள்ளல் வேண்டும். வியஞ்சகத் தன்மையை அவர் ஏற்றுக்கொள்ளின், மனிதரான் இயற்றப் பட்ட தொடர் தன்னுற்றற்பொருளுடன் உள்ள சம்பந் தத்தை விடாதிருப்பினும் கூறுவோன்விருப்பம் முதலிய வற்றை அனுசரித்துக் கற்பிக்கப்படும் ஔபாதிகவியா பாரத்தை அடைந்து உண்மையில்பொருளைக் குறிக்கும் எனக் கொள்ளல் பொருந்தும். தன் தன்மையை விடாத பொருள்

1. மலை நெருப்புடையது புகையால் என்றவிடத்து, புகை லிங்கம் ஆகும். அங்கு லிங்கத்தன்மை அதற்குப் பற்றுக்கோடாகிய புகையிடத்தில் அனுமிக்க விருப்பம் இல்லாதகாலத்தும் தோன்றல் வேண்டும் என்ற நியதி இல்லை.

2. பக்ஷத்தில் இருக்கையும், ஸபக்ஷத்தில் இருக்கையும், விபக்ஷத்தில் இல்லாமையும் என்ற மூன்றினையும் கொண்டதே லிங்கம்.

3. மனிதரா னியற்றப்படாத தொடர் வேதவாக்கிய மாகும்.

களும் வேறு சில காரணங்களுடன் கலந்து உண்டாம் ஔபாதிகவியாபாரத்தை அடைந்து தம் இயற்கைச்செயல் களினின்று மாறுபட்ட செயல்களைச் செய்தல் எல்லோரானும் அறியப்படும். உதாரணமாக, மதி முதலியன எல்லாப்பிராணி கட்கும் வெப்பத்தைப் போக்கும் தண்மையையே தரினும், தலைவியின் பிரிவுத்தீயாற் கொளுத்தப்படும் மனமுடைய தலைவனாற் பார்க்கப்படுங்கால் அது தாபத்தை உண்டுபண்ணு வது யாவரும் அறிந்ததே. ஆகலின் மனிதரான் இயற்றப் பட்ட தொடர் தனது இயற்கைப்பொருளை விடாது பொய்ப் பொருளைத் தரும் எனக் கூற விரும்புவோர், சொல்லின்கண், வாசகத்தன்மையினின்று வேறுபட்டு ஒரு ஔபாதிகத்தன்மை உளது எனக் கொள்ளல்வேண்டும். அத்தன்மை, வியஞ்சகத் தன்மையைத் தவிர்த்து வேறொன்றும் அன்று. வியங்கியப் பொருளைக் காட்டுதற்குச் சாதனமாயிருத்தலே வியஞ்சகத் தன்மை. மனிதர்வாக்கியங்கள் முக்கியமாய் அம்மனிதர் கருத்தையே வெளியிடுகின்றன. அக்கருத்திற்கும் தொடர்க்கும் வாச்சியவாசகபாவமின்மையான், அக்கருத்து வியங்கியமாகு மேயன்றி வாச்சிய மாகாது. இவ்வாறு கொள்ளின் உலகத்தில் மனிதரான் இயற்றப்பட்ட எல்லாத்தொடரும், குறிப்புப் பொருளைக் குறித்தலான் தொனி ஆகும் எனின்; உண்மையே; ஆயினும், கூறுவோன்கருத்தை வெளிப்படுத்தலாகிய வியஞ் சகத்தன்மை உலகத்தாரான் இயற்றப்பட்ட தொடரெல்லா வற்றுள்ளும் உளதே; ஆனால், ஆங்கு வியஞ்சகத்தன்மை முக்கியமாய் நோக்கப்படாமல் தானாகவே வருதலின் அதனை வாசகத்தன்மையிலிருந்து மாறுபட்டதாகக் கொள்வது இல்லை. எந்த வியங்கியப்பொருள் கூறுவோனது முக்கிய நோக்கத்திற்கு விடய மாகுமோ, அதைக் குறிக்கும் வியஞ்சகத்தன்மை தொனி எனக் கூறுதற்குக் காரண மாகும். கூறுவோன்கருத்துப் பொருளாகிய எந்த வியங்கியம் சொல் பொருள் இவற்றான் குறிக்கப்பட்டு விளங்குகின்றதோ, அதுதான் அவனாற் கருதப்பட்டு நன்கு விளங்கி முக்கியமாய் அவன்நோக்கிற்கு இலக்காகும். ஆயினும் கணக்கிலாத தொனிவழக்கிற்கு அதுமாத்திரம் காரணமாகாது, தொனி வேறிடத்திலும்

இருத்தலான். கூறுவோஞல் எண்ணப்பட்டும்[1] எண்ணப் படாததுமாய்[2] அழகுற்று முக்கிய நோக்கிற்கு விடயமாய் விளங்கும் முற்கூறப்பட்ட மூவகை வியங்கியப்பொருள் யாவும் தொனிவழக்கிற்குக் காரணமாகுமாதலால், வியஞ்சகத்தன்மை விசேடமென்ற தொனியின் இலக்கணத்தில் அதிவியாப்தி[3] அவ்வியாப்தி[4] இவை இல்லை. ஆகலின், வியஞ்சகத்தன்மை என்ற சொல்லின் வியாபாரம் மீமாம்ஸகர்கொள்கைக்கு மாறுபட்டதன்று, உடன்பாடானதே யாகும். பிரமாணங் களால் நன்கு நிச்சயிக்கப்பட்ட வழுவில்சொல்லே பரம் பொருள் எனக் கூறும் வையாகரணரது கொள்கையை ஒட்டியே இத்தொனிவழக்கு கொள்ளப்படுதலின், அவருடன் நமக்கு முரண்பாடு உண்டா ஒற்றுமை உண்டா என ஐயுறு தற்கே இடனின்று.

சொற்பொருளின் சம்பந்தம் ஆக்கப்பட்டதேயன்றி நித்திய மன்று எனக் கூறுபவரும் யுக்தியையே சிறந்த பிரமாணமாகக் கொண்டவருமான நையாயிகர் பௌத்தர் முதலியோர்க்கும் பொருள்களை விளக்கிக் காட்டும் விளக்கு முதலியவற்றில் வியஞ்சகத்தன்மை இருப்பதுபோன்று, சொல்லிடத்தும் வியஞ் சகத்தன்மையிருத்தல் அனுபவசித்தமே, இதில் முரண்பாடு மில்லை; ஆதலின், அவர் அதனை மறுத்தற்கு இடனே யில்லை; தார்க்கிகர்களுள் சொல்லின் வாசகத்தன்மை இயற்கையாக உளதாயிற்று, சங்கேதத்தால் உளதாயிற்று என்றவிடத்துக் கொள்கைவேறுபாடுகள் இருக்கட்டும். இருப்பினும் அதனைச் சார்ந்திருப்பதும் வேறு பொருள்களிற் பொதுவாய்க் காணப் படுவதும் உலகத்தோரான் அறியப்பட்டதுமான வியஞ்சகத் தன்மையை அனுசரிப்பதில் வேறுபாட்டிற்கு இடன் ஏது? பொறிகளுக்குப் புலப்படாத பொருள்களிலே தார்க்கிகர்க்குக்

1. எண்ணப்படுவது = வஸ்து.

2 எண்ணப்படாதது = அணி, சுவை முதலியன.

3. அதிவியாப்தி என்பது இலக்கியமல்லாததன்கண்ணும் இலக் கணம் செல்லுங் குற்றம்.

4. அவ்வியாப்தி என்பது இலக்கியத்தின் ஒரு பகுதியில் இலக்கணம் செல்லாது ஒழியுங் குற்றம்

கொள்கைவேறுபாடுகளேயன்றி, அவற்றிற்குப் புலப்படும் பொருள்களில் அவை இல. உலகத்தோரனைவர்புலன்கட்கு நன்கு விளங்கி மற்றொன்றான் பாதிக்கப்படாமலிருக்கும் நீலம், இனிமை முதலிய பொருள்களின் உண்மையில் அவர்க்குக் கொள்கைவேறுபாடுகள் இல. மற்றொன்றால் பாதிக்கப்படக் கூடாத நீலத்தை நீலமென்று ஒருவன் கூற, இது நீலம் அன்று மஞ்சளே என மற்றொருவன் அதனை மறுத்தலைக் காணோம். அவ்வாறே, வாசகத்தன்மையுற்ற சொற்களுக்கும் வாசகத்தன்மையில்சங்கீதச்சொற்களுக்கும், வன்மையுற்ற சொல்வடிவமல்லாத கைசெய்கை முதலியவற்றிற்கு முள்ள வியஞ்சகத்தன்மை, யாவர்க்கும் வெளிப்படையாய்ப் புலப்பட, அதனை மறைத்தல் யாரான் முடியும்? ரஸிகர்கூட்டத்தில் அவ்வாறே அபிதையாற் கூறப்படாத அழகுள்ள குறிப்புப் பொருள்களைக் குறிக்குஞ் செய்யுட்களையும் வசனநடையையுங் கொண்ட பலவகை வழக்குகள் உணரப்படுகின்றன. அவற்றை மறுத்து, தன்னைப் பிறர் பரிகசித்தலைத் தடுக்கும் ரஸிகர் யார்?

மற்றொருவர் பின் வருமாறு (தொனிக்கூற்றை) மறுத்தல் கூடும். அஃதாவது:—சொல்லின் வியஞ்சகத்தன்மை என்பது மற்றொரு பொருளைக் காட்டுந்தன்மை ஆகும்; அது, லிங்கமாயிருக்குந்தன்மையே. அப்போது வியங்கியப்பொருளின் உணர்வு லிங்கியின் உணர்வே யாகும்;[1] ஆகலின் வியங்கிய வியஞ்சகபாவம் என்பதும் லிங்கிலிங்கபாவம் என்பதும் ஒன்றாகுமே யன்றி, வேறாகா. இப்போதுதான் (பூர்வமீமாம்ஸகரைப்பற்றிப் பேசும்போது) வியஞ்சகத்தன்மை கூறுவோன் கருத்தைப்பற்றியது எனக் கூறியமையானும், கூறுவோன் கருத்து அனுமானப்பிரமாணத்தான் அறியத் தக்கதாகலானும் இதனை (வியங்கியவியஞ்சகபாவம், லிங்கிலிங்கபாவமே என) அவசியம் கொள்ளல் வேண்டும் என்பது. அதற்கு விடை பின் வருமாறு:—இவ்வாறே கொள்ளினும், நங்கொள்கைக்கு யாது குறைவு? வாசகத்தன்மை குண

1. மலை நெருப்புடையது புகையான் என்னுமிடத்து, புகை லிங்கமாகும். நெருப்பு லிங்கியாகும். லிங்கத்தைக் (அடையாளப் பொருளை) கொண்டு ஊகிக்கப்படுவது லிங்கி யாகும்.

விருத்தி இவ்விரண்டினின்றும் வேறுபட்ட சொல்வியாபாரம் வியஞ்சகத்தன்மை யென்பது நங்கொள்கை; இப்போது கூறியவாறு கொள்ளினும் இதற்கு ஒன்றுங் குறைவு இல்லை; அவ்வியஞ்சகத்தன்மை லிங்கத்தன்மையா யிருந்தாலென்? வேறொன்று யிருந்தாலென்? எவ்வகையிலும் யான் கூறும் வியஞ்சகத்தன்மை யென்பது எல்லோரானும் கொள்ளப்பட்ட சொல்வியாபாரங்களாகிய வாசகத்தன்மை, குணவிருத்தி இவற்றினின்றும் வேறுபட்டது என்பதும், அது சொல்லின் வியாபாரமாய் ரஸிகருணர்விற்கு விடய மென்பதும் இருவர்க்கும் உடன்பாடே ஆகும்.

இருப்பினும் வியஞ்சகத்தன்மை உண்மையில் லிங்கத் தன்மை ஆகாது; வியங்கியஉணர்வெலாம் லிங்கவுணர்வு மாகாது. கூறுவோனது கருத்து வியங்கிய மாகும் என அங்கீ கரித்தலான் அதனை விளக்குதலிற் சொற்களுக்கு லிங்கத் தன்மையே உண்டு என்று நும்மால், தங்கொள்கையை நிலை நாட்ட எங்கள்கூற்றே அநுமதிக்கப்பட்டது. எம்மால் யாது கூறப்பட்டது என்பது விரிவாய் ஆராயப்படும், கேண்மின்: சொற்களுக்கு விடயம் (சொல்லாகிய லிங்கத்தால்) அனு மானிக்கப்படுவது எனவும், (சொல்லாகிய கரணத்தால்) உணர்த்தப்படுவது எனவும் இருவகைப்படும். அவற்றுள் அனுமானத்தான் அறியப்படுவது கூறுவோனது விருப்பமே. அவ்விருப்பமும் சொல்லின் உருவத்தைத் தெரியுமாறு செய்யக் கருதுதலும், சொல்லான் பொருளை உணருமாறு செய்யக் கருதுதலும் என இருவகைப்படும்; அவற்றுள் முதலாவது சொல்வியவகாரத்திற்கு அங்க மாகாது, அது தன் பிராணித் தன்மையைக் குறித்தலையே பயனுகக் கொண்டமையான். இரண்டாவதோ, சொல்விசேடத்தின் நிர்ணயத்தைச் செவிப் புலனுற்கொள்வதை இடையிற் கொண்டிருந்தபோதிலும், சொல்லாற் பொருளை உணர்வித்தற்குப் புறக்காரணம் ஆகும். இவ்விரண்டு விருப்பங்களும் சொற்களால் அனுமிக்கப் படுபவைதான். ஆயினும், உணர்த்தப்படும் பொருளோ கூறு வோனது கருத்தை வெளியிடவேண்டு மென்ற எண்ணத்திற்கு விடயமானது. அது வாச்சியம் வியங்கியம் என இருவகைப் படும். கூறுவோன் சிலவேளை தான் கருதிய பொருளை நேரிற் சொல்லாற் கூறுவன்; சிலவேளை ஒரு பயன் நோக்கிச் சொல்

லால் நேரிற் கூறாது கருத்துவகையாற் பெறப்படக் கூறுவன். அவ்விருவகைப்பொருளும் சொற்களுக்கு லிங்கியாகத் தோன்றாது செயற்கையாகவோ இயற்கையாகவோ வுள்ள வேறு சம்பந்தத்தாலே தோன்றும். சொற்களைக் காரணமாகக் கொண்டு லிங்கியாகத் தோன்றுவன, அப்பொருள்கூறுவோன் விருப்பத்திற்கு விடயம் என்பதே யன்றி அப்பொருளே ஆகும் என்பது அன்று. அப்பொருளைக் குறித்துச் சொற்கள் லிங்க மெனக் கொள்ளின், புகை முதலிய லிங்கத்தால் அனுமானிக்கப்படும் தீ முதலியவற்றிற்போல் சொல்வழக்கில் உண்மை பொய் என்ற விவாதத்திற்கே இடன் இல்லாமற் போம். வியங்கியப்பொருள் வாச்சியப்பொருளின் ஆற்றலாற் கொண்டுவரப்படுதலால், அதுபோன்று வியங்கியம் சொல்லோடு சம்பந்தப்படுகிறது. சம்பந்தம் நேராக இருப்பினும், மற்றொன்றின் வழியாக இருப்பினும் விசேடம் ஒன்றுமில்லை. வியஞ்சகத்தன்மை வாச்சியப்பொருள், வாசகச்சொல் இவ்விரண்டையும் பற்றியது என முன்னரே கூறப்பட்டது. ஆகலின் கூறுவோன் விருப்பம் குறிக்கப்படின், ஆங்குச் சொல் லிங்கமாகும்; அவ்விருப்பத்திற்கு விடயமான பொருள் குறிக்கப்படின், அது சொல்லால் உணர்த்தப்படுவது ஆகும். கூறுவோனால் எண்ணப்பட்டதும் எண்ணப்படாததுமான பொருள்விடயத்தில் சொல்லிற்கு வாசகத்தன்மை மூலமாகவே வியாபாரமா, வேறு சம்பந்தத்தால் வியாபாரமா? வாசகத் தன்மையானன்று என முன்னரே கூறப்பட்டது; வேறு சம்பந்தத்தால் எனின் அஃதே வியஞ்சகத்தன்மை. வியஞ்சகத் தன்மை லிங்கமாயிருக்குந்தன்மை எனக் கூறல் தகாது, ஒளி[1] முதலியவற்றில் அவ்விரண்டும் வேறாகக் காணப்படுதலின்; ஆகலின் சொல்லால் உணர்த்தப்படுவதும் வாச்சியப்பொருள் போலவே லிங்கியாகாது; லிங்கி கூறுவோன்விருப்ப மாகலின் அது வாச்சியப்பொரு ளாகாது; ஆனால் வாச்சியப்பொருட்கு விசேடணமாகும். சொல்லால் உணர்த்தப்படும்பொருள் லிங்கியாயின், பொருள்விடயத்தில் உலகத்தோரால் கொள்ளப்படும் வேறுபாடுகட்கு இடனில்லாமற்போம் எனக் கூறப்

1. ஒளியில் வியஞ்சகத்தன்மை (பிறபொருளைக்காட்டுந்தன்மை) உண்டு, லிங்கத்தன்மை இல்லை.

பட்டது. வாச்சியப்பொருள்விடயத்தில் சொல்லினின்றும் வேறுபட்ட பிரமாணத்தைக்கொண்டு அது உண்மையே என அறிவு வர, வேறு பிரமாணத்திற்கு அது விடயமாயினும், சொல்வியாபாரத்திற்கு அது விடயம் எனக் கொள்வதில் ஒரு தடையும் இல்லை; அவ்வாறே வியங்கியப்பொருளிலு மாகும். வியங்கியப்பொருளின் அறிவு மெய்யா பொய்யா என ஆராய்வதில் பயன் ஒன்றுமில்லையாதலான், ஆங்கு வேறு பிரமாணத்தின் வியாபாரம் உண்டா இல்லையா என ஆராய்தல் பிறர் பரிகசித்தற்கு இடன் தரும். ஆகலின், லிங்கியின் உணர்வே எங்கும் வியங்கியத்தின் உணர்வு எனக் கூற இயலாது சொல்லால் அனுமானிக்கப்படும் பொருள் வியங்கியமாம்போது சொல் வியஞ்சகமாயினும், அவ்வியஞ்சகத்தன்மை தொனி வழக்கிற்குக் காரணம் ஆகாது. ஆயினும், வியஞ்சகத்தன்மை சொல்லின் வியாபாரமே என மீமாம்ஸகரும் ஒத்துக்கொள்ள வேண்டும் எனக் காட்ட உபநியசிக்கப்பட்டது; அவ்வியஞ்சகத்தன்மை, சிலவிடத்து லிங்கத்தன்மையாகவும் சிலவிடத்து வேறுதன்மையாகவும், வாசகமாகிய சொல்லினிடத்தும் வாசகமில்சொல்லினிடத்தும் இருக்கும் என்பதை ஒருவரும் மறுக்க முடியாது என்பதைக் காட்டவே எமது இம்முயற்சி.

ஆதலால் வியஞ்சகத்தன்மை, சொற்களின் வியாபாரங்களாகிய வாசகத்தன்மை குணவிருத்தி இவற்றினின்றும் வேறுபட்டதெனப் புலப்படும். பிடிவாதத்தால் அதனை அவற்றுள் அடக்கலாமெனப் பிறர் கூறினும், கொள்கைவேறுபாட்டினை நீக்குதற்கும் ரஸிகர்களுக்கு அறிவு ஊட்டுதற்கும் கூறப்பட்ட அவ்வியஞ்சகத்தன்மை விசேடவுருக்கொண்ட தொனியை அவர் மறுக்க இயலாது. எல்லாப்பொருட்குமுள்ள பொது விலக்கணம் இருத்தலால் விசேடவிலக்கணம் வேண்டாமென்று மறுத்தல் தகாது. அவ்வாறாயின் இருக்கையின் (சத்தையின்)[1] பொதுவிலக்கணத்தால் உலகில் இருக்கும் பொருள்களின் விசேடவிலக்கணத்தைக் கூறுதல் கூறியது கூறல் என்ற குற்றத்திற்கு இடன் ஆகும்.

1. சத்தையின் = सत्तायाः

அஃது அவ்வாறாக,

அறிஞர் காவியத் தின்றேனி யென்ற
விசேடத் தினுண்மை நன்கறி யாது
அடிக்கடி கோள்கையில் வேறுபட் டிருக்க
அதன்றன்மை யிதுவேன வுணர்த்தினர் புலவர்.[1]
(கா. 90½)

[2] சிறப்பில் வியங்கிய மேன் காவியத்தின்
வகைவே றென்று மாங்கு வாச்சியமே
வியங்கியத் தோடிருந்து சிறந்து விளங்கும். (கா. 91½)

நுடியிடைலாவண்யம் போன்று கூறப்பட்ட வியங்கியப் பொருள் எங்குச் சிறந்து விளங்குமோ அது தொனி எனக் கூறப்பட்டது; அஃதே வாச்சியப்பொருட்கு அடங்கி அதனையே சிறப்புறச் செயின், அது சிறப்பில்வியங்கியம் என்ற பெயர்கொண்ட காவியவகை யாகும்.

வியங்கியம் வஸ்துவாயிருக்க, முற்றிலுமறைபட்ட வாச்சியத்தைக்கொண்ட சொற்களாற் குறிக்கப்படும் வியங்கியப் பொருள், வாச்சியத்திற்கு உள்ளடங்கி நிற்கும் குணீபூத வியங்கியத்திற்கு உதாரணம்:—

"வேறொரு இலாவண்யசிந்துவாகிய இவள் யார் இங்கே? ஆங்கு உற்பலங்கள் மதியோடு கூடி இலங்கும், யானையின் கும்பத்தலம் ஓங்கி நிற்கும், மேலான வாழையின் அடிமரமும் தாமரைத்தண்டும் தோன்றும்." [3]

1. ஈண்டுப் புலவர் என்பது ஆனந்தவர்த்தனரைக் குறிக்கும்.

2. சிறப்பில்வியங்கியம் என்பது அன்மொழித்தொகை.

3. சிந்து என்பது நிறைவினையும், மதி என்பது முகத்தையும், உற்பலம் என்பது கடைக்கண்ணையும், கும்பத்தலம் என்பது முலையினையும், தாமரைத்தண்டு என்பது புசத்தையும், வாழையின் அடிமரம் என்பது தொடையையும் குறிக்கும். ஈண்டு அவற்றின் ஆற்றற் பொருள் மறைவுபட்டே நிற்கும். இவள் யார்? என்பதனால் இச் செய்யுள் சிறப்பில்வியங்கிய மாயிற்று.

முற்றிலுமறைபடுவாச்சியங்களைக் கொள்ளாத சொற்களி னின்று தோன்றும் வியங்கியப்பொருளும் எங்கேனும் அழகு காரணமாகச் சிறப்பின்றி வாச்சியத்திற்கு உள்ளடங்கி நிற்பின், அதுவும் குணீபூதவியங்கியம் ஆகும்.

அதற்கு உதாரணம்:-

"அநுராகமுடையள் சந்தி......இஃதென்ன தெய்வச் செயல்." (பக். 19) என்பது முதலியன.

அவ்வியங்கியமே கவியின் கூற்றானே வெளிப்பட்டமை யான் சிறப்பில்வியங்கியமாதற்கு உதாரணம்:-

"மலர்ந்தகண்ணன்...மூடினாள்." (பக். 70) என்பது முதலியன.

சுவை முதலியன வாச்சியத்திற்கு உள்ளடங்கி அதற்குச் சிறப்பினைச் செயின், ஆண்டுச் சுவையணி எனக் காட்டப் பட்டது. ஆங்கு அவை மணமகனாகச் செல்லும் சேவகனது பின்னர்ச் செல்லும் அரசனைப்போன்று அப்பிரகரணத்திற்கு ஒட்டிய வாச்சியப்பொருளை அழகுறச் செய்யும். வியங்கிய மாயுள்ள அணி சிறப்பில்வியங்கியமாகு மிடம் தீபகம்போன்ற அணிகள்.

பிரசாதங் காம்பீரி யமிவையு டை பதங்கொண்டு
இன்பம் பெருக்கி நிற்சநூல் களுள்ளே
இதனை யிவ்வாறு கொளல்வேண் டுமறிஞன். (கா. $92\frac{1}{2}$)

ஆராயுந்தன்மையோர்க்கு இன்பத்தைப் பெருக்கி அழகுற்ற காவியங்கள் பலவகைப்பட்டு விளங்க, அவையெல்லாவற் றுள்ளும் சிறப்பில்வியங்கியத்தைக் கொளல் வேண்டும்.

அதற்கு மற்றுமோர் உதாரணம்:-

மாமகள் மகளா மாதவன் மருகனு
மாகங்கை யவனுடை மனைவி யாகும்

*மாமதி யமிர்து மவனுடை மக்கள்*
*மாநீர்க் கடலின் குடும்பமே யிஃதென்.*

போருளணி வகைகளும் வியங்கியந் தொடரின்
பெருஞ்சிறப் புற்றுப் பிறங்கும் பெரும்பால். (கா. 93½)

வியங்கியமான அணி வஸ்து இவை உள்ளடங்கி நிற்க, ஆங்குத் தோன்றும் பொருளணிகள் பேரழகுற்று விளங்குகின்றன என்பதை இலக்கண நூலார் சிறிது காட்டினர். பல இலக்கியங்களை ஆராயுமிடத்து அவ்வகையெல்லாம் நன்கு புலப்படுகின்றன. தீபகம், சமாசோக்தி இவைபோன்று ஏனைய அணிகளும் பெரும்பான்மையும் வியங்கியமான அணி வஸ்து இவற்றோடு கலந்து காணப்படுகின்றன. ஏனெனில், அதிசயோக்தி கலந்து நிற்குமாறு எல்லாவணிகளையுங் கூறல் கூடும். அவ்வாறு பெருங்கவிகள் வழங்கியிருக்கின்றனர்.

அவ்வதிசயோத்தியைத் தன் விடயத்தின் அவுசித்தியத்திற்கு ஒட்டி இலக்கியங்களில் இணைப்பின், ஏன் அவை சிறப்புற்று விளங்கா? பாமஹரும் அவ்வக்கிரோக்தி எங்கும் விளங்குமாறு செய்ய கவிகள் முயலவேண்டும் எனவும், அதனாலே வாச்சியப்பொருள் நன்கு விளங்கி விபாவமாகுமெனவும், அஃதின்றேல் அது அணி யாகாது எனவும் கூறியுள்ளார். அதற்குக் கருத்து யாதெனின் கவிஞனது பிரதிபையின் வசத்தால் எவ்வணியில் அதிசயோத்தி கலந்து இருக்கின்றதோ, அவ்வணியே சிறப்புற்று விளங்கும், அவ்வாறில்லாதது அணியென்ற பெயர் மாத்திரங்கொண்டது.

1. மாமதி = எல்லோரானும் வேண்டப்பட்ட சிறப்புடைய மகன்; மாதவன் = எல்லோரையுங் காப்பாற்றி இன்பம் நுகருமாறு செய்யுந் தெய்வம்; மாதங்கை = வேண்டியவற்றையெல்லாம் கொடுப்பவன்; அமிர்தமும் மதியும் உலகத்தார்க்கு மகிழ்ச்சியைத் தரும் பொருள்கள்; இவற்றால் மாநீர்க்கடல் மிகப் பெருமையுற்றது என்ற வியங்கியப்பொருள் ஏயிஃதென் என்றதால் வெளிப்படுத்தப்பட்டமையான், இச்செய்யுள் சிறப்பில்வியங்கியத்திற்கு உதாரண மாயிற்று.

ஆதலால் இவ்வதிசயோக்தியை அணிகள் எல்லாவற்றிற்கும் உடலாகக் கொள்ளவேண்டியிருத்தலின் அபேதமாக உபசரித்து, அதனை, எல்லாவணித்தன்மையுங்கொண்டது என்றதாக அறிக. அவ்வணி பிறவணியோடு கலத்தல் சிலவிடத்து வாச்சியமாகவும், சிலவிடத்துச் சிறப்புற்ற வியங்கியமாகவும் சிலவிடத்தில் சிறப்பில்வியங்கியமாகவும் இருக்கும். முதற் கூற்றில் வாச்சியவணிவகையில் அஃது அடங்கும்; இரண்டாங் கூற்றில் அது தொனிக்குள் அடங்கும்; மூன்றாங்கூற்றில் அது சிறப்பில்வியங்கியத்தின்பாற் படும். இவ்வகை ஏனைய அணிகள் எல்லாவற்றிற்கும் உண்டு. ஆயினும் அதிசயோத்தி எல்லாவணிகளோடும் கலந்துநிற்க, ஏனைய சிலவற்றோடே கலந்துநிற்கும்; இஃதே அவற்றுள் வேறுபாடாகும்.

உருவகம், உவமை, துல்லியயோகிதை, நிதரிசனம் போன்ற அணிகளில் ஒப்புமையை முன்னிட்டு உண்மையறியப் படுதலால் ஆங்கு ஒப்புமை வியங்கியமாயிருப்பினே அது சிறப்புற்று விளங்கும், சிறப்புற்று விளங்குகின்ற அவையெல்லாம் சிறப்பில்வியங்கியத்திற்கே விடயமாகும். சமாசோக்தி, [1] ஆக்ஷேபம், [2] பரியாயோக்தம் போன்ற அணிகளில் வியங்கிய மூலமாகவே உண்மைப்பொருள் வெளிப்படுவதால் அவை சிறப்பில்வியங்கியத்தின்பாற் படும் என்பதில் ஐயமே இல்லை. சிறப்பில்வியங்கியம் இருக்கும்போது சில அணிகளில் சில அணிகள்தான் வியங்கியமாயிருத்தல் கூடும்; உதாரணமாக வியாஜஸ்துதி வாச்சியவணியாயிருக்கும்போது பிரேயவணியே அங்கு வியங்கியமாயிருத்தல் வேண்டும். சில அணிகளில் உவமையைச் சார்ந்த அணிகளெல்லாம் வியங்கியமாயிருக்

1. ஆக்ஷேபம் விலக்கு என்பன ஒருபொருட்கிளவியாகும். விலக்கின் இலக்கணம் பின்வருமாறு தண்டியாசிரியர் கூறுவர்.

முன்னத்தின் மறுப்பினது முன்ன விலக்கே
மூவகைக் காலமு மேவிய தாகும். (43)

2. பரியாயத்தின் இலக்கணம் தண்டியாசிரியரே கூறினர்; அது பின் வருமாறு:—

கருதியது கிளவா தப்பொரு டோன்றப
பிறிதொன் றுரைப்பது பரியாய மம்மே. (72)

கலாம். அதற்குச் சந்தேகவணி உதாரணமாகும். சில அணிகளில் ஒன்றையொன்று உள்ளடக்கிக்கொளல் தகும்; உதாரணமாக தீவகம் வாச்சியவணியாகவும் உவமை வியங்கிய வணியாகவும் இருக்கலாம்; உவமை வாச்சியவணி யாகவும் தீவகம் வியங்கியவணி யாகவும் இருக்கலாம்; அவற்றுள் தீவகம் உவமையை உள்ளடக்கிய தென்பது பலரும் அறிந்ததே. உவமையும் சிலவேளையில் தீவகவணியின் சாயையைக்கொண்டிருக்கும்; அவ்வாறே மாலோபமையிற் காணலாம்.

அதற்கு உதாரணம் :—

தவவொளிகொள் சுவாலையொடு தீபம் போலும்
திரிபதகை தன்னாற் சுவர்க்கம் போலும்
திரிபிலிலக் கணமுறுசொல் லாற்புலவர் போலும்
திரிபுரையா லிமையவன் றுயனு யிலங்கினனே.[1]

ஈண்டு உவமையுள் தீவகம் வியங்கியமாயிருத்தல் வெளிப்படை.

இவ்வாறு வியங்கியப்பொருளோடு கலந்து அழகுற்று விளங்கும் உருவகம் முதலிய அணிகள் யாவும், சிறப்பில் வியங்கியத்திற்கு இடன் ஆகும். அவ்வாறே (இதுவரை ஆசிரியர்களால்) கூறப்பட்டனவும் கூறப்படாதனவுமாகிய அவ்வினத்தைச் சார்ந்த அணிகள் தோன்றுமிட மெல்லாம் சிறப்பில் வியங்கிய மாகும். அவற்றினிலக்கணத்தில் இவையெல்லாம் நன்கு காணப்படும். சொல்வகைகள் பலவாகையான் பொது விலக்கணமின்றி ஒவ்வொரு சொல்லின் பலவகைப்பட்ட உருவங்களைத் தனித்தனியே படித்து அவற்றின் உண்மையை அறிதல் இயலாதது போன்று, குணீபூதவியங்கியவகைகள் எல்லையற்றனவாகலின் ஒவ்வொன்றின் ரூபவிசேடத்தைக் கூறி அதன் உண்மையை அறிய இயலாது; ஏனெனில், வாக்கின் விகற்பங்களும் அவற்றின் மூலமான அணிகளும் எல்லையற்றன. சிறப்பில்வியங்கியத்தில் அணிகள் (மற்றோர் அணியை வியங்கியமாகக் கொள்ளாது) வேறு வகையாக

1. இச்செய்யுள் காளிதாஸன் இயற்றிய குமாரஸம்பவத்து முதற்சருக்கத்தில் உளது. ஈண்டு இமயமலை பார்வதியால் தூய்மையுற்று விளங்கினன் எனக் கூறப்பட்டது. திரிபுரை = பார்வதி.

(வஸ்து சுவை இவற்றை வியங்கியமாகக்கொண்டு) இருக்கும் இடமும் உள. இவ்வாறு தொனியைத் தவிர்த்து விளங்கும் சிறப்பில்வியங்கியமும், மஹாகவிகட்கு விஷயமாய் அழகுற்ற தென ரஸிகர்களால் நன்கு உணரத்தக்கது. ஆகலின் வியங்கியப்பொருளின் சம்பந்தமாகிய பேறின்றி ஒரு காவியப் பகுதியும் ரஸிகர்மனத்தைக் கவராது. காவியத்தின் இந்த ரகசியம் புலவர்களால் உணரத்தக்கது.

பெருங்கவி வாக்குகள் அணிகளைப் பெறினும்
பெண்மக ளிர்க்கு நாணம் போன்று
முக்கிய மாகுமிவ் வியங்கிய வொளியே. (கா. $94\frac{1}{2}$)

நன்கு வழக்குற்ற பொருளும் இவ்வியங்கியவொளியான் விளக்குற்றுப் பேரழகை அடைகின்றது.

உதாரணமாக,

"மன்மதனுணையை நன்கு செலுத்துகையில் பேரன்பால் தோன்றிய முதற்புணர்ச்சி விருப்புறுநலனுடைமகளின் மதி கவரும் அவ்வவ்விலாஸங்கள் க்ஷணந்தோறும் புதியனவாய்த் தோன்றுவன. தாமே ஏகாந்தத்திலிருந்துகொண்டு மனத்தான் மாத்திரம் இடைவிடாது நினைத்தற்குரிய."

என்றவிடத்து அவ்வவ்விலாஸங்கள் என்ற சொல்லான் விலாஸங்கள் வெளிப்படையாய்க் கூறப்படாமல், அவை வியங்கியமாகத் தோன்றுகின்றமையின் செய்யுட்குப் பேரழகினை அச்சொல் தந்தது காண்க.

யாதேவன் போன்ற வினச்சொ லுற்று
வேறு பொருள்கோளுஞ் செய்யுளு மிந்தச்
சிறப்பில் வியங்கியத் தினமெனப் படுமே. (கா. $95\frac{1}{2}$)

[1] யாது எவன் போன்ற வினச்சொற்களால் எங்கு வேறு பொருள் குறிக்கப்படுகின்றதோ, அங்கு வியங்கியப்பொருள் சிறப்பிலதாயிருக்க, அச்செய்யுள் சிறப்பில்வியங்கிய மாகும்.

1. யாது எவன் என்பன ஒலிவிசேடத்திற்கும் உபலக்கணமாகும்.

அதற்கு உதாரணம் :—

"அரக்கு மாளிகைக்குத் தீயூட்டி நஞ்சுடைச்
சோறுதந்து
அம்பலத் திலிழுத்துப் பொருளனைத்தும்
பிராணனையும் போக்கி
அம்பலத் திலெம்மனை வியுடை யாடை
குழலிழுத்த
அனுசனொடு துரியோ தனனும் யானிருக்கச்
சுகிப்பனோ?[1]"

என்றவிடத்து இறுதியிலுள்ள சுகிப்பனோ என்பது சுக மடையான் என்ற பொருளைக் குறித்தல் காண்க.

மற்றோர் உதாரணம் :—

"பொய்யேம் யாம்; கற்புடைமகளே, நிறுத்து : நின்னுற் கற்பு அழிவுற்றிலது; அதிகம் ஏற்றுக்கு? பொதுமகளிர் போன்று நாவிதனை யாம் காமுற்றிலம்"[2]

யாது எவன் போன்ற சொற்களும் ஒலிவிசேடங்களும் எல்லாவிடத்தும் நியதமாய்ப் பொருள்விசேடத்தைக் குறிப்ப தாகக் கொள்ள இயலாது; ஆகலின், சொல்லாற்றலே அவ் வொலிவிசேடத்தை உதவியாகக் கொண்ட வாச்சியப்பொரு ளானே அப்பொருள்விசேடத்தைக் குறிக்கும் எனக் கொள்ளல் வேண்டும். அப்பொருள் அவ்வொலிவிசேடத்துடன் கூடிய சொற்களின் ஆற்றலாற் றோன்றினும், அது வாச்சியப்பொரு

1. இச்செய்யுள் பட்டநாராயணர் இயற்றிய வேணீஸம்ஹாரம் என்ற நாடகத்தில் முதலாம் அங்கத்தி லுளது. இது வீமன்கூற்று.

2. நாவிதனிடங் காமுற்ற குலமகளை ஒருத்தி காண, அவள் அவளிடம் தன் குற்றத்தை மறைக்க, அப்போது அக்குலமகளைப் பார்த்து அவள் சொல்லுங் கூற்று இஃதாகும். கற்புடைமகளே என்பது அவள் கற்பழிவைக் குறிக்கின்றது; பொய்யேம் யாம் என்பது யாம் பொய்யேம் அல்லேம் என்பதைக் குறிக்கும்; கற்பு அழிவுற்றிலது என்பது கற்பு அழிவுற்றது என்பதைக் குறிக்கும். இறுதியடியின் பொருளே அக்குறிப்புப்பொருள்களை அவை காட்டுமாறு செய்கின்றது.

ளாகாமையான், வியங்கியப்பொருளே யாம். வாசகத்தன்மையைப் பற்றிக்கொண்டே வாச்சியப்பொருள் வியங்கியப் பொருளுடன் தோன்றுகின்றமையான், அவ்வாறு பொருள் கொண்ட காவியம் சிறப்பில்வியங்கியமே யாகும். ஏனெனில், வியங்கியப்பொருள் அடங்கி வாச்சியப்பொருள் சிறந்து நிற்கு மிடமே சிறப்பில்வியங்கியம் எனக் கூறப்பட்டது.

எதுவிச் சிறப்பில் வியங்கியக்கு விடயமா
யுத்தியால் தோன்றுமோ ஆங்குச் சுவைஞர்
அதனைத் தொனியேன மதித்த லாகாதே. (கா. $96\frac{1}{2}$)

சிலவிடத்து, தொனியோ சிறப்பில்வியங்கியமோ என மயக்கம் தோன்றும்; எங்கு வியங்கியப்பொருள் சிறந்து விளங்குகின்றதோ அங்கே மாத்திரம் தொனி எனக் கூறவேண்டுமேயன்றி, எங்குந் தொனி, தொனி எனக் கூற மனமுடையரா யிருத்தல் தகாது.

"தலைவனது தலையிடத்து தோன்றும் மதிகலையைத்
தொடுவித் தாளா னெனக்கேலித் தனமாய்ச்
சகிகூறிக் காலிற் செம்பஞ் சிடவாங்குச்
[1] சிவையாதும் விடையின்றித் தன்மாலை
யெறிந்தனளே."

"தலைவியை நோக்கிச் சால்புடைப் பூவெனத்
தலைவனே தரவந் தாங்குத் தடுமாறு
விலைமகள் பெயர்சொல வெள்ளக் கண்ணீரொடு
தலை தான்மவுனமா த்தரைதனைக் [illegible]" [2]

இவ்விரண்டு செய்யுள்களுள்ளும் யாதும் விடை யின்றி, மவுனமா என்ற சொற்கள் [2] வியங்கியப்பொருள்களைச் சிறிது வெளிப்படையாக்கலின் இவை சிறப்பில்வியங்கியமாயின.

1. சிவை = பார்வதி.

2. முதற்செய்யுளுள் வியங்கியம் பார்வதியின் நாணம், பரபரப்பு, பேரழகு, பொறாமை முதலியன ஆகும்; இரண்டாவதுள் தலைவியின் கோபம் ஆகும்.

"தேவமுனி...எண்ணி நின்றாள்." (பக். 74)

என்றவிடத்து வியங்கியப்பொருள் வேறுசொல்லாற் காட்டப் படாமையான், அது மணியொலியொத்த தொனி யாகும். முற்கூறிய செய்யுள்களுள்ளோ அது வேறுசொற்களாற் காட்டப்பட்டமையான் வாச்சியப்பொருட்கும் சிறப்பு உண்டாம்; அவ்வாறுள்ளன தொனிக்கு இடனாகா.

இச்சிறப்பில் வியங்கிய மேதோனி யாகும்
இங்குச் சுவையே சிறந்து தோன்றின். (கா. 97½)

இதற்கு உதாரணம் முன்னர்க் கூறப்பட்ட இரண்டு செய்யுட் களே யாகும்.[1]

மற்றுமோர் உதாரணம்:—

"திருமாலே! இராதை நின்னால் சமாதானப்படுத்த இயலாள்; நீயே நின் பிராணநாயகியின் கீழுடையாலும் என் கண்ணீரைத் துடைக்கின்றாய்; பெண்மனம் கல்; ஆகையான் உபசாரம் வேண்டாம்; நிறுத்து ஐய; அநுநயங்களில் இவ்வாறு கூறப்பட்ட கண்ணன் நுமக்குத் திருவை யளிக்க,[2]"

1. இரண்டன்கண்ணும் சிருங்காரச்சுவை விளங்குகின்றது; ஆகலின், வஸ்துவை நோக்கி அவை சிறப்பில்வியங்கிய மெனவும், சுவையை நோக்கித் தொனி யெனவும் கூறப்படும்.

2. வேற்றுமாதரிடஞ் சென்று அவளிடையாடையைத் தவறிக் கட்டிக்கொண்டு கண்ணன் இராதையினிடம் வர, அவள் கோபிக்க, அவள் தாள்களில் அவன் விழ, அவள் கண்ணீர்விட, அக்கண்ணீரை அவ்வாடையால் கண்ணன் துடைக்கும்போது இராதை கூறுவது இது:—

கீழுடை என்றதனால் நேரில் நோக்குக, வெட்கத்தையும் விட்டு இவ்வாடையைத் தரித்தலான் அவளிடம் உமக்கு உள்ள பேரன்பு வெளிப் படும் என அவள் கூறக் கருதினள் என்பது குறிக்கப்படுகின்றது; துடைக்கின்றாய் என்றதனால், அது கண்ணீரை நீக்கச் செய்யப்படினும், அஃதே அதன் பெருக்கத்திற்குக் காரணமாகும் என்பது குறிக்கப்படும்; உபசாரம் என்றது, தக்ஷிணநாயகனுடைய உபசாரம் என்பதைக் குறிக்கும். இவ்வாறுள்ள வியங்கியப்பொருள் வாச்சியப்பொருளையே அழகுறச் செய்யும். அதனை நோக்கி இச்செய்யுள் சிறப்பில்வியங்கிய மாகும். இச்செய்யுளுள் பொறாமையுடனுள்ள விப்பிரலம்பசிருங்காரச் சுவை தோன்றி அது சிறப்புற்று விளங்குகின்றமையான் அதனை நோக்கத் தொனி யாகும்.

இவ்வாறிருக்க

"இஃதேயோ ரவமானம்..." (பக். 118).

என்ற செய்யுளுள் காட்டிய சொற்களெல்லாம் அவற்றின் வியங்கியப்பொருளால் அழகுறுவித்த வாச்சியப்பொருளோடு விளங்கினும் அச்செய்யுட்பொருளாற் பெறப்படும் சுவையை நோக்கி, அவை வியஞ்சமாகக் கூறப்பட்டன. அவையெல்லாம் பிறிதொருபொருளினகத்துச்செல்வாச்சியத்தொனிக்கு இடன் ஆகும் என மயக்க முறுதல் கூடாது; ஏனெனில், ஆங்கு வாச்சியப்பொருளெல்லாங் கருதப்பட்டனவே ஆகும். அவற்றில் வாச்சியங்கள் வியங்கியத்தோடு கூடி விளங்குகின்றனவேயன்றி, தாம் மறைந்து வியங்கியமாக மாறுபடுதல் இல்லை; ஆகலின், அச்செய்யுளுள் தொடர் தொனியாகும், சொற்கள் சிறப்பில்வியங்கியமாகும். இதனால் சிறப்பில் வியங்கியமாகுஞ் சொற்களே உடன்றோற்றத்தொனிக்கு இடனெனக் கொள்ளுதல் தகாது, பிறிதொருபொருளினகத்துச் செல்வாச்சியத்தொனி என்ற ஒருவகையும் அங்ஙன் உண்மையான். அதற்கு உதாரணம் அச்செய்யுளுள்ளே இராவணன் என்ற சொல்லாகும். எங்குச் சொற்கள் வியங்கியப்பொருளைக் குறிப்பினும் தொடர்க்குச் சிறந்த நோக்கம் சுவையில் இல்லையோ ஆங்குச் சிறப்பில்வியங்கியமாத்திரமே யெனக் கொள்ளல்வேண்டும்.

இதற்கு உதாரணம :—

"அரசனையுஞ் சேவிப்பர், நஞ்சினையும் உண்ணுவர்; பெண்டிர்களுடனும் இன்பம் நுகர்வர்; வல்லமையுடையரன்றோ மானிடர்.[1]"

ஒரு செய்யுளுள் வாச்சியம் வியங்கியம் இவற்றுள் யாது சிறந்தது என அறிவதில் சிறந்த முயற்சி வேண்டும்; அஃது இருப்பினே, மயக்க மின்றித் தொனி, சிறப்பில்வியங்கியம்,

1. ஈண்டு மானிடப்பிறப்பில் வெறுப்புத் தோன்றினும் அது சிறவாது, செய்யுளுள்ளே உம்மைகளே சிறக்க, வாச்சியப்பொருள் சிறப்புறுகின்றது.

அணிகள் இவற்றின் விடயங்கள் நன்கு அறியத்தகும். மயக்கமுண்டாதற்கு ஏற்ற உதாரணம் பின் வருமாறு :—

இலாவண்யப் பொருட்செலவைப் [1] பார்த்திலன்
பெருந்துன்ப முழுற்றனன்
[2] இச்சைபோ லியங்கும னிதர்மனத் திடர்நோ
யிடையுற்றது
இவளேதா னேற்புடை யன்ப னின்றி யிழந்தாளே
இவளை யியற்ற வென்பய [4] னுள்ளினுன்கொல்
விதியே.

இச்செய்யுளில் வியாஜஸ்துதி அணியாகும் எனச் சிலர் உரைத்தனர், அது நேரிதன்று ; இவ்வணியே இச்செய்யுட்குச் சிறந்த நோக்கமாயின், ஆங்கு ஓர் அழகும் இல்லை ; ஏனெனில் இக் கூற்றினைக் காமுற்ற ஒருவன் கூறுன், தன்னைத் தானே அவட்கு நிகரல்லன் என நினைத்தல்கூடாமையான் ; நீத்தானும் இவ்வாறு கூறுன்; இவ்வாறுள்ள விகற்பங்களைப் போக்குதலிலே அவன் முயலவேண்டுமாகலான். இச்செய்யுள் ஏதேனும் நூலிலுள்ளது என இருப்பின், பிரகரணத்திலிருந்து அதன் உண்மைப்பொருளை உணரலாம், அஃதும் ஒன்றுந் தெரியவில்லை. ஆகலின், இதனை அப்பிரஸ்துதப்பிரசம்ஸை எனவே கொள்ளல்வேண்டும். தன்னை நிகரற்றவன் எனக் களித்தவனும் தன்பெருமையால் பொறுமையுற்ற மனிதரைக் கொண்டவனும் தன்னினும் அறிவிற்சிறந்தானுக மற்றுமொரு

1. பார்த்திலன் என்பது பலநாள் சேர்த்துவைத்த பொருளைச் செலவிடுதலில் கவனத்துடன் இருக்கவேண்டுவது இன்றியமையாததாயிருக்க, அவ்வாறு இருந்தனன் என்பதைக் குறிக்கும்.

2. இச்சைபோல் என்பது வரையறையின்றி யிருத்தலைக் குறிக்கும்.

3. இவளே என்றவிடத்து ஏகாரம் பிரமன் படைக்கும்போது அவன் சிறப்புற்றவனாயிருத்தலின் சிறப்பேகாரமாகவும் தற்போது இழிவேகாரமாகவும் ஆகும்.

4. என்பயன் என்றது தனக்கும் பயனில்லை பிறர்க்கும் பயனில்லை என்பதைக் குறிக்கும்.

வரையுங் காணுதவனுமாகிய ஒருவனது அவலக்கூற்று எனத் தோற்றுகின்றது. இச்செய்யுள் தர்மகீர்த்தியது எனப் பெரு வழக்கு உளது; அஃது அவ்வாறு இருத்தல்கூடும். ஏனெனில்,

"நினைக்கமுடியாத அவகாகனத்தை[1] உடையதும், பேரறிஞர்க்கும் பலவுபாயத்தானும் தன்னுட்பொருளைக்[2] காட்டாததும், தக்க பிரதிக்கிராககத்தை[3] அடையாததும் ஆன எனது கொள்கை கடலின் நீரைப்போன்று தன் னிடத்தே ஜரையை[4] அடையும்."

என்றதானும் அவ்வாறுள்ள பொருள் விளக்கப்பட்டது காண்க.

அப்பிரஸ்துதப்பிரசம்ஸையிலும் வாச்சியப்பொருள் சில விடத்துக் கவியாற் கருதப்பட்டும் சிலவிடத்துக் கருதப் படாதும் சிலவிடத்துக் கருதப்பட்டும் கருதப்படாதும் நிற்கும். அது கருதப்படும் இடத்திற்கு உதாரணம்: —

"எது பிறர்க்காகவே..." (பக். 31)

ஆனந்தவர்த்தனர்செய்யுளாகிய மற்றோர் உதாரணத்தின் பொருள்:—

"எதற்குப்புலன் ஆயின் இச்சிறப்புடைப்பொருள்கள் பயனுற்றன ஆகுமோ, அக்கண்ணே ஒளியில்லாதவிடத்து ஏனைய அவயவங்களோடு[5] சமமாயிற்று அந்தோ! அன்று, அவற்றோடு சமமு மில்லை யென்க."

1. அவகாகனம் = அமிழ்ந்தமூழ்கை; அனுபவிக்கை.

2. உட்பொருள் = உள்ளேயிருக்கும் முத்து முதலிய பொருள் கள்; உட்கருத்து.

3. பிரதிக்கிராககம் = உடனுள்ள முதலை முதலிய நீர்வாழும் பிராணிகள்; உற்ற கணவன்.

4. ஜரை = மூப்பு.

5. ஏனைய அவயவங்கள், கை, கால் முதலியன; அதனுற் குறிக் கப்பட்ட பொருள், அறிவில்லாத ஏனை வேலைக்காரர்கள்.

இவ்விரண்டிடத்தும் முறையே கரும்பும், கண்ணும் கருதிய பொருளே யாகும்; ஆயினும், இடத்திற்குத் தக்க பொருளல்ல. இடத்திற்குத் தக்க பொருள் யாதெனின், குணங்களாற் சிறப்புற்ற ஒரு பெரியார் அவரருமையறிய ஆற்றலற்ற செல்வமுடையானிடம் பணிசெய்ய, அவனால் தக்கவாறு போற்றப்படாதவனுடைய தன்மையை வருணிப்பதே யாகும்

அது கருதப்படாதிருக்குமிடத்திற்கு உதாரணம் :—

"நீர் யார் ஐய? கூறுவேன்; என்னைப் பாக்கியமற்ற [1]சாகோடகன் என அறியும்; வைராக்கியத்தாற்போன்று இவ்வாறு கூறுகின்றாய் : நன்கு அறிந்தாய்; ஏன் இவ்வாறு கூறுகின்றாய்? ஈண்டு இடதுகைப்புறத்தில்[2] ஓர் ஆலமரம் உண்டு; அதனை வழிப்போக்கர் பலவகையானும் அடைகின்றனர்; வழியில் இருந்தும் என் நிழல் கூட பிறர்க்குப் பயன் படுவதில்லை."

மரத்தோடு வினா செப்பு இவை நிகழ்தல் கூடாமையின், ஈண்டு வாச்சியப்பொருள் கருதப்படாததாகும். இதனாற் குறிக்கப்படும் பொருள் யாதெனின், தன்னருகிற் செல்வம் படைத்துப் பண்பின்றியிருக்கும் ஒருவன் பிறராற் போற்றப் பட, தான் போற்றப்படாமலிருக்க, அப்போது செல்வமற்ற பண்புடையானது வருத்தம் என்பதே ஆகும்.

கருதப்பட்டுங் கருதப்படாதிருக்கு மிடத்திற்கு உதாரணம் :—

"[3]வழியில் தோன்றாது அழகுறாது பூஇலைஇல்லாது உள்ள இலந்தைக்கு ஏன் வேலி இடுவிர்?"

1. சாகோடகன் = மயானத்தீயா லெரியுண்ட தளிர் முதலியவற்றை யுடைய மரவிசேடம்.

2. சிறப்பில்பொருள்களை இட துபக்கத்தில் வைத்துக்கொள்வது மாபு.

3. வழி = நல்லநெறி ; நல்ல பிறப்பு. பூ, இலை என்பன உடன் பிறந்தார் முதலியோரைக் குறிக்கும். நல்ல குடியிற் பிறவாது சிறப்புறா அழகினைப் பெறாது, அணி ஆடை முதலியவற்றாற் போற்றிச் சிறப்புறுமாறு செய்ய உடன்பிறந்தார் உறவினர் இவரையுங் கொள்ளாது நிற்கும் பெண்மகளை இவ்வாறு ஏன் நீ காக்கின்றாய் என்பது குறிப்புப்பொருள் ஆகும்.

ஈண்டு வாச்சியப்பொருள் திண்ணிதாய்க் கருதப்பட்ட தெனக் கூறவும் இயலாது. வாச்சியப்பொருள் கருதப் பட்டதா, வியங்கியப்பொருள் கருதப்பட்டதா என ஆய்ந்து கொள்ளல் வேண்டும்.

வியங்கியஞ் சிறந்துஞ் சிறவாது நிற்கும்
காவிய மிருவகைப் படுமவை யல்லாது
சித்திர மெனப்படு மவையுஞ் சொல்லாற்
பொருளா லிருவகை யாகு மென்ப. (கா. 98½, 99½)

வியங்கியப்பொருள் சிறப்பின் தொனிக்காவியம், சிறவாதிருப் பின் சிறப்பில்வியங்கியக்காவியம்; அவற்றைத் தவிர்த்து சுவை முதலியவற்றில் நோக்கமில்லாது வியங்கியப்பொருளையும் காட் டாது இருக்கும் காவியம், சொல் பொருள் இவற்றின் சிறப்பை மாத்திரங் கொண்டு ஆன்மாவில்லாத படத்தைப் போன்று விளங்குவது, சிறந்த காவியமாகாது; காவியத்தின் ஓவியம் போன்றது. அவ்வாறுனது காவியத்தை அனுசரிப்பதே. அவற்றுள் சொற்சித்திரம் கடுமையான யமகம் முதலியன, பொருட்சித்திரம் சொற்சித்திரத்தினின்று வேறுபட்டு சுவை யற்று வியங்கியப்பொருளின்றி கருத்துப்பொருளாயிருக்கும் தற்குறிப்பேற்றம் முதலியன.

இங்கு ஒருவர் கூறுவர்; அஃதாவது :—முன்னர்க் கூறப் பட்ட வியங்கியப்பொருள் மூன்று; அவற்றுள் வஸ்து, அணி இல்லாதது சித்திரம் எனக் கூறின் கூறலாம்; சுவை இல்லாதது காவியமே ஆகாமையானும், சுவை வியங்கியமா யிருத்தலானும், வியங்கியப்பொருளற்றதை எவ்வாறு சித்திரம் எனக் கூறல் தகும்? வஸ்துவில்லாத காவிய மில்லை; உலகி லுள்ள வஸ்து எதுவும் சுவைக்கோ பாவத்திற்கோ அவசியம் விபாவமாகும். சுவை மனநிலைவிசேட மாகலின், அந்நிலையை யுண்டாக்காத வஸ்து இல்லை; அவ்வாறிருப்பின் அந்த வஸ்து கவிக்கு விஷயமாவதே நேர்படாது; கவிக்கு விடய மாவதையே சித்திர மென்கிறோம் என்பது. இக்கூற்று உண்மைதான். சுவையோடு இயைபுபடாத காவியம் ஒன்று மில்லை; ஆயினும், கவிக்குச் சுவை முதலியவற்றில் நோக்கமில்லாது, சொல்லணி பொருளணி இவற்றில் நோக்கமிருப்பின், அவர்கருத்தை

யொட்டி ஆங்குச் சுவை முதலியன இல்லை எனக் கருதப்படும். காவியத்துள்ள சொற்களின் பொருள் கூறுவோன்கருத்தை யொட்டியே நிற்கவேண்டு மாகலின். கவிக்குக் கருத்தின்றி வாச்சியப்பொருளாற்றலால் சுவையாதி தோன்றினும் அது வலிமை யுருது; ஆங்கும் சுவை இல்லை எனவே கருதப்பட்டு, சித்திரகவி யெனவே நாட்டப்படும். இக்கருத்துள்ள செய்யுட் கள் பின் வருமாறு :—

சுவைபாவ முதலிய கருதா தணியே
கவிஞன் கருதினஃது சித்திரப் பகுதியாம்.
சுவைமுதல கருத்தாய் நிற்கும்
காவியந் தொனிக்கிட ஞகா வல்ல.

சிலர் வரையறைக்குட்படாமல் சுவை முதலியவற்றையே கருதாது தோன்றியவாறு காவியஞ் செய்வதால் அக்காவியத் தின் ஒரு பாகுபாடாகச் சித்திரத்தைக் கூறினர் ஆநந்தவர்த் தனர். பிற்காலத்தார் காவியவிலக்கணத்தின் வரையறைக்கு உட்பட்டுக் காவியஞ் செயின், அவை தொனிவகைக்குள் ஒன் ருகவே இருத்தல் கூடும். பரிபாகமுடைய கவிஞர் சுவையிலே ஈடுபடாதிருப்பின் அவரது செயலே சோபிக்காது. சுவையில் ஈடுபட்டுக் கவிஞர் வருணிக்கும்போது அது சுவையோடு கலவாதிருத்தல் இயலாது. பகுத்தறிவற்ற பொருள்களைப் பற்றிய வருணனை கூட பகுத்தறிவுற்றபொருளோடு இயைபு பட்டுச் சுவையுடன் கூடியதாகவே முடியும். ஆகலினன்றே பின் வருமாறு கூறுவர்.

கவியே யெல்லையில் காவியக் கடலில்
பிரம னவன்படி பிறழு முலகம்.
கவிசிருங் காரி யாயினவ் வண்ணம்
உலகரம் நீத்தோ னுயி னீரசம்.
சேதந மசேதநம் அசேதநம் சேதநம்
எனத்தன விருப்பின் படியே நற்கவி
வழங்குவன் காவியஞ் சுதந்திரத் தன்மையான்.

ஆகலின், சுவையில் ஈடுபட்ட கவியான் வருணிக்கப்பட்ட வஸ்து விரும்பிய சுவைக்கு அங்கமாகாதிருக்கின்றது என்றேனும் பேரழகைப்பெறவில்லை என்றேனும் ஒருவகையானும் கூறுதல்

தகாது. அவ்வாறிருத்தல் பெருங்கவியின் காவியங்களிலும் ஆநந்தவர்த்தனர் இயற்றிய நூல்களிலிருந்தும் ஆங்காங்குக் காட்டப்பட்டது. இவ்வாறு இலக்கணவரம்பிலிருப்பின், அது தொனியின்வகையில் வாராதிராது. சுவையை நோக்கிச் சிறப்பில்வியங்கியமும் அதன்பாற்படு மென முன்னர்க் கூறப்பட்டது. வேடிக்கைச்செய்யுள்களிலும், தோத்திரப் பாடல்களிலும் சுவை அங்கமாக இருப்பினும், அறம் பொருள் இன்பம் வீடு உலகியற்கை கடவுளியற்கை இவையாறு மறிந் தாரின் செய்யுட்கள் சிலவற்றில் வியங்கியத்தோடு கூடிய வாச்சியத்திற்குச் சிறப்பு இருப்பினும், அவை சிறப்பில்வியங்கி யத்தின் சிறந்த பகுதியின்பாற்படு மெனவும் முன்னர்க் கூறப் பட்டது. தற்போது கவி காவியம் இவற்றின் நயத்தைப் பற்றி அறியும் வழியை மாணவர்க்குக் கற்பிக்கும்போது தொடக்கத்தில் சித்திரகவியே காவிய மெனக் கூறினும், பரிபாகம் பெற்ற மாணவர்க்குத் தொனியே காவிய மென உணர்த்தல்வேண்டும்.

இப்பொருளைக் கொண்ட செய்யுள் :—

சுவையோ பாவமோ கருத்தா விளங்குவது
சிறப்புற வஸ்துவு மணியு மறைவுற்றும்
சிறந்து மிளிர்வது வியங்கிய மாங்கே
சிறப்புறு தொனியெனக் கூறுவர் சுவைஞர்.

தோனிதம் வகையொடு சங்கரசஞ் சிருட்டி
முறையாற் கலந்தும் வஸ்து வணிகளை
நோக்கிச் சிறப்பில் வியங்கிய மாகி
அவற்ரேடு முறையே கலந்தும் வாச்சிய
வணிகளோ டம்முறை கலந்தும் பல்வகைத்
தோன்றி விளங்கு மென்மனர் புலவர். (கா. $100\frac{1}{2}$)

தொனி தம்வகையோடு சங்கரம் ஆம்போது இரண்டற்கு மியைபு மூவகை யாகும்; அவை, சிறப்புறுத்துசிறப்புறு தன்மை[1], ஐயத்திற்கிடனுதற்றன்மை, வியஞ்சகமொன்றனையே யுடைமை என்பன வாம்.

1. சிறப்புறுத்துசிறப்புறுதன்மை = अनुग्राह्यानुग्राहकभावः

அவற்றுள் முதலிற் கூறியதற்கு உதாரணம் :—

"தேவமுனி...எண்ணி நின்றுள்" (பக். 69).

ஈண்டு முறைத்தோற்றத்தொனி, யாகிய நாணம் முறையில்தோற்றத்தொனி யாகிய சிருங்காரத்தைச் சிறப்புறுத்துகின்றது.

இரண்டாவதாக் கூறப்பட்டதற்கு உதாரணம்:—

"மைத்துனரே, குறிகொண்டு வந்த இவள் நின்மனைவியால் ஏதோ கூறலுற்ருள்; தனிமையாய் மேன்மாடியில் அழுகின்ருள்; எளியளைச் சமாதானப்படுத்துமின்."[1]

ஈண்டுச் சமாதானப்படுத்துமின் என்ற சொல்லுக்குப் புணர்மின் என்றேனும் சமாதானஞ்செய்ம்மின் என்றேனும் பொருள் கொளல் தகும். அவற்றுள் எதனைக் கொள்ள வேண்டுமென்பதில் ஐயம்.

மூன்றுவதற்கு உதாரணம் :—

"மேகங்கள்...ஹஹா, தேவியே, தைரியமொடு நில்."

(பக். 36)

ஈண்டு முறையில்தோற்றத்தொனி யாகிய விப்பிரலம்ப சிருங்காரத்திற்கும், அதற்கு வியபிசாரிபாவமாகிய சோகாவேகத்திற்கும் வியஞ்சகமாக ஒவ்வொரு தொடரே உள்ளது.

தொனி தன்வகையோடு சஞ்சிருட்டிவகையாற் கலந்திருத்தற்கு முற்செய்யுளே உதாரணம் ஆகும்.

1. தன் கணவனது உடன்பிறந்தானைக் காமுற்ற ஒருத்தி அவன் மற்ருெருத்தியைக் காமுற்றதாக வறிந்து இச்செய்யுளைக் கூறும். இச்செய்யுட்குக் குறிப்புப்பொருள் 'தன்னை அவர் மதியாது வேறொருத்தியைக் காமுற்ருர்" எனத் தன் வருத்தத்தைக் கூறினள் என்பதா? அன்றி "அவனுடைய மனைவி அதனை அறிந்தமையான் அவளுடைய வெகுளியைப் போக்கு" எனக் கூறினள் என்பதா? என்று ஐய முண்டாகின்றது.

சிறப்பில்வியங்கியத்தோடு தொனி சங்கரவகையாற் கலந்ததற்கு உதாரணம்:—

"இஃதேயோ ரவமானம்..." (பக். 118)

மற்றோர் உதாரணம்:—

"வஞ்சனையாற் சூதாட்டஞ் செய்வித்தோனும் அரக்கு மாளிகைக்குத் தீயிட்டோனும், செருக்குடன் பாஞ்சாலியின் குழலினையும் மேலாடையையும் இழுக்கவல்லோனும், பாண்டவரைத் தாஸராகக் கொண்டோனும் துச்சாசனன் முதலி யோர்க்கு அரசனும் நூற்றுவர்க்குத் தலைமையனும், அங்க வரசற்கு நண்பனும் ஆன அத்துரியோதனன் எங்கே? கூறுமின்; வெகுளியாற் பார்க்க வரவில்லை நாமிருவரும்."[1]

இவ்விரண்டு செய்யுட்களிலும் தொடர்க்குக் கருத்தாகிய முறையில்தோற்றத்தொனிக்கு வியங்கியப்பொருளொடு சிறப் புற்ற வாச்சியப்பொருளைக் கொண்ட பதங்களிற் றொன்றுஞ் சிறப்பில்வியங்கியத்தோடுஞ் சங்கரம் உளது. தொனி தன் வகையுள் ஒன்றோடொன்று கலத்தலின் எவ்வாறு குற்ற மின்றோ, அவ்வாறே தொடர்க்கருத்தாகிய முறையில்தோற்றத் தொனியும் சொல்லின் வாச்சியப்பொருளைப் பற்றுக்கோடாகக் கொண்ட சிறப்பில்வியங்கியமும் கலத்தலின் குற்றமின்று.

1. செய்வித்தோன் என்பது சூதாட்டத்தில துரியோதனனின் ஆற்றலின்மையையும், தருமபுத்திரர் அவனுடைய அழைப்பிற் கிணங்கி இராச்சியத்தை இழந்தமை முதலியவற்றையும் குறிக்கும்; செருக்கு என்பது தனக்கு உண்மையாக ஆற்றலின்றி ஆற்றலுடையவனாகக் கருதியவன் என்பதையும், அவ்வாறு உள்ளவர்க்கு அழிவு திண்ணம் என்பதையுங் குறிக்கும். பாஞ்சாலி என்பது பாஞ்சலநாட்டரசன் பெண்ணாயிருக்க அவனது குழலாடையை இழுப்பித்தான் என அவனுடைய பாக்கியமின்மையைக் குறிக்கும்; இழுக்கவல்லோன் என்பது அவனது இழிந்த பண்பைக் குறிக்கும்; அத்துரியோதன் என்றவிடத்து அ என்பது இளமைமுதல் அவன் செய்த தீச்செயல்களெல்லாவற்றையுங் குறிக்கும். ஈண்டெல்லாம் வியங்கியப்பொருளுடன் சேர்ந்த வாச்சியப்பொருளே சிறத்தலின், இது சிறப்பில்வியங்கியமாகும். முறையில்தோற்றத்தொனி ரவுத்திர மாகும்.

தொனிவகைகளுள் சில சொற்களைப் பற்றுக்கோடாகவும், சில தொடரைப் பற்றுக்கோடாகவுங் கொண்டு அவை ஒன்றுக் கொன்று சங்கரமாயின் குற்றமின்று. இரண்டும் ஒன்றையே வியஞ்சமாக்க் கொள்ளின், அத்தொனிகளுள் ஒன்று அங்கி மற்ருென்று அங்க மெனக் கொள்ளல் தகாது; அவை, வெவ்வேறினை வியஞ்சமாகக் கொள்ளின் அவ்வாறிருப்பினும் குற்றமாகாது. ஓரிடத்து வாச்சியவாசகபாவத்தில் பலவற்றின் சங்கரசிருட்டி எவ்வாறு குற்றமின்ருே அவ்வாறே வியங்கிய வியஞ்சகபாவத்திலும் எனக் கொள்க.

எங்குச் சில சொற்கள் கருதாவாச்சியத்தொனியையோ முறைத்தோற்றத்தொனியையோ கொள்ளுமோ, ஆங்குத் தொனியும் சிறப்பில்வியங்கியமும் சஞ்சிருட்டிமுறையாற் கலந்திருத்தல் கூடும்; அதற்கு ஓர் உதாரணம்:—

"நண்ப,...என நினைக்கின்றேன்." (பக். 44).

ஈண்டு, சுகமோ என்பது கருதாவாச்சியத்தொனி யாகும்; அவை, நினைக்கின்றேன் என்பன குணீபூதவியங்கிய மாகும்.

சுவை சொட்டுங் காவியங்களில் முறையில்தோற்றத் தொனிக்கும் வாச்சியாலங்காரத்திற்கும் சங்கரம் மிகுதியாகக் காணப்படும். வஸ்துத்தொனி அணித்தொனி இவற்றிற்கும் வாச்சியாலங்காரத்திற்கும் சங்கரமும் எப்போதேனும் நேரும். அதற்கு உதாரணம் ஆநந்தவர்த்தனர் இயற்றிய செய்யுளாகும். அதன் பொருள் :—

"சுவையைச் சுவைத்தலிலே ஈடுபட்ட கவிகளின் அரிய புது நோக்கினையும் ஐயமின்றிப் பொருளை யாய்ந்து கூறும் நோக்கினையும் கொண்டு உலகம் முழுதும் காணும் யாம் களைப் புற்ருேம்; இருமாலே, நும்மிடமுள்ள பக்தியாற் போன்று மிக்க இன்பத்தை யடைந்தோம் இல்லோம்."[1]

1. நோக்கு ஈண்டுக் கண்ணைக் குறியாது காவியத்தின் சுவை யுணரு மாற்றலையும் பிரதிபையையுங் குறித்தலின் இது கருதாவாச்சியத் தொனி யாகும். ஆய்ந்துகூறும நோக்கு என்பது விரோதவணி யாகும். யாம் என்பது காவியத்தை அனுபவிக்குமுறை யறியாது பலவாருக இலக்கணங்கூறுவோர்கொள்கையை மறக்க உடன்பட்டார் என்பதைக் குறிக்கும். ஈண்டுக் கருதிவேறினைநோக்கும்வாச்சியத்தொனி, விரோதவணி இவை சங்கரமாகும் எனவும் கூறல் தகும்.

ஈண்டு, கருதிவேறினைநோக்கும்வாச்சியத்தொனி விரோத வணியுடன் சங்கரமாயிற்று. வாச்சியவணியுடன் சம்சிருட்டி சொற்களை நோக்கியே ஆகும். எங்குச் சில சொற்கள் வாச்சிய வணியைக்கொண்டும் சில சொற்கள் தொனிகொண்டும் உள்ளனவோ, ஆங்குத் தொனி வாச்சியவணியோடு சஞ்சிருட்டி முறையாற் சேர்ந்திருக்கும். அதற்கு உதாரணம்:—

"எங்கு ஸாரஸப்பறவையின் இனிய கூவலை நீட்டித்தும், காலையில் மலர்ந்த தாமரையின் நறுமணநட்புக் கொண்டும் உடற்கனுகூலமாக வீசும் மகளிரின் புணர்ச்சிவாட்டத்தைப் போக்கும் சிப்பிரையாற்றின் காற்று புணர்ச்சி வேண்டி இன் சொல் கூறும் தலைவன் போன்றது".[1]

ஈண்டு நட்பு என்றவிடத்துக் கருதாவாச்சியத்தொனியையும் ஏனைய சொற்களில் அணிகளையுங் காணலாம்.

தொனி சஞ்சிருட்டி முறையாற் கலந்த அணிகளோடு சங்கரமுறையாற் கலந்ததற்கு உதாரணம்:—

"மயிர்க்கூச்சலுற்ற நும்முடைய உடலில் குருதியுள் விழைவுகொண்ட பெண்சிங்கத்தாற் செய்யப்பட்ட பற்கீறல்

1. இப்பொருளைக்கொண்ட செய்யுள் காளிதாஸன் இயற்றிய மேகஸந்தேசத்திலுளது. சிப்பிரை என்பது உஜ்ஜயினியில் ஓடும் நதி சிப்பிரையாற்றின்காற்று புணர்ச்சி வேண்டி இன்சொல் கூறும் தலைவன் போன்றது என்பது உற்பிரேக்ஷை. ஈண்டுத் தலைவனை மறுபடியும் சார்தற்கு மகளிரைத் தூண்டும் என்றும் மகளிரை மறுபடியுஞ் சார்தற்குத் தலைவனைத் தூண்டும் என்றும் பொருள் கொள்ளலாம். புணர்ச்சி வாட்டத்தைப் போக்கத் தான் வாசனையுற்று அன்னங்களின் கூவலை நீட்டித்தலால் தலைவன் தலைவி இருவர்க்கும் ஒத்த அன்பு ஆக்குவதில் திறமை வாய்ந்தவன் போன்று விளங்கும் காற்று என்பதுந் தொனிக்கும். அவ்வாறு தலைவியுடன் தற்போது இராது பிரிந்து யக்ஷன் தான் வருந்துவதையுங் குறிக்கும்.

களும் நகப்பிளவுகளும் காமுற்ற முனிவரானும் நோக்கப் பட்டன."[1]

ஈண்டுச் சமாசோக்தியுடன் சஞ்சிருட்டியடைந்த விரோத வணி முறையில்தோற்றத்தொனியாகிய வீரச்சுவையுடன் சங்கரமாக கலந்துநிற்கும்; ஈண்டுச் சிறப்பிக்கப்பட்டது, தயாவீரனுடைய செயலாகும்.

தொனிவகை யவற்றி னுள்வகை தொகையிட
இயலா வாகலாற் சிறிதே யியம்பினம். (கா. 101½)

நற்காவியஞ் செய்நரு மவற்றை யாய்நரும்
நன்கறிதல் வேண்டுந் தொனியி னிலக்கணம்.
(கா. 102½)

கீழ்க் கூறிய சொரூபத்தையுடைய தொனியை நிரூபித்தற்கு வல்லவரான சற்கவிகளும், சுவைஞரும் திண்ணமாய்க் காவியத்தில் மிக்க சிறந்த பதவியைப் பெற்றுள்ளார்.

காவிய தத்துவம் நன்கறிய வாற்றாது
சிறிதறிந்தா ரிரீதிகளி னிலக்கணஞ் செப்பினர்.
(கா. 103½)

காவிய விலக்கண நன்கறியிற் சொல்லினவும்
பொருளினவும் விருத்திகள் புலனா மன்றே. (கா. 104½)

இந்நூலில் நிருணயிக்கப்பட்ட காவியதத்துவத்தை நன்கு அறியாது சிறிதறிந்தும் அதனை விளக்க ஆற்றலின்றிச் சிலர் வைதர்ப்பீ, கவுடீ, பாஞ்சாலீ என்ற ரீதிகளைப்பற்றிக் கூறினர். அவர்க்கு நன்கு புலப்படாத தொனிதத்துவம் ஈண்டு

1. தன் குட்டியைத் தின்ன முயன்ற சிங்கப்பெண்ணிற்குப் போதிசத்துவர் தன்னுடலைக் கொடுத்ததைப் பார்த்து ஒருவர் கூறுவர். முனிவரும் காமுற்றுநோக்கினர் என்றவிடத்து விரோதவணி. பற்கோல், நகப்பிளவு, காமுகர் இவை தலைவியின் செய்தியைக் குறித்தலின் சமா சோக்தி வியங்கியவணி யாகும்.

விரிவாய்க் கூறப்பட்டமையான், ரீதியைப் பற்றிக் கூறுதல் வேண்டா. அன்றியும் வியஞ்சகம் வியங்கியம் என்பதை ஆய்ந்து காவியவிலக்கணத்தை அறிந்தபின்னர்ச் சொல்லின் விருத்திகளாகிய உபநாகரிகை முதலியனவும் பொருளின் விருத்திகளாகிய கைசிகீ முதலியனவும் நன்கு அறியப்படும். இன்றேல், தருமச்செயல்களுக்குப் பயனாகிய அபூர்வத்தில் மக்கட்கு எவ்வாறு நம்பிக்கை வரவில்லையோ அவ்வாறே விருத்திகளிடத்தும் நம்பிக்கை வாராது; அவற்றைத் தாமும் உணரமாட்டார்.

சிறந்த இரத்தினங்களில் சாதித்தன்மை போன்று எங்குச் சொற்பொருள்களினழகு சொல்லால் குறிக்க இயலாது சில அறிஞர்களால் மாத்திரம் அறியப்படுமோ அதுவே தொனி யிலக்கணம் என்பாரை மறுத்தல் வேண்டாம். ஏனெனில், சொற்களில் சிறப்பு தன்னுருவத்தில் கடுமை புனருத்தமின்மை, வாசகத்தன்மையில் பிரசாதத்துடனிருக்கை, வியஞ்சகத் தன்மையோடு இருக்கையுமாம்; பொருளில் சிறப்பு எளிதிற் புலப்படுகை, வியங்கியப்பொருளை நோக்கித் தான் சிறப்பின்றி இருக்கை, வியங்கியப்பொருளோடிருக்கை என்பனவாம். இவ்விரண்டும் விரிவாய் விளக்கப்பட எளிதல்லவாயினும், நன்கு பலவகையாக விளக்கப்பட்டன. அதனை நோக்காது அவற்றின் சிறப்பினைச் சொற்களாற் கூற இயலாதெனின், அது கூறுவோனது அறிவின்மையைக் காட்டும். சொல்லாற் குறிக்க முடியாதது யாதொன்றும் இல்லை. சொல்லாற் குறிக்க வியலாமை என்பதற்குப் பொதுவிலக்கணத்தோடன்றிச் சிறப் பிலக்கணத்தோடு கூடிய அறிவைக் காட்டுஞ் சொல்லால் விளக்கப்படாமை பொருள் எனின், அது பொருந்தாது; அவற்றின் இலக்கணத்தை நன்கு இலக்கணநூலார் உரைத் திருக்கின்றமையானும், பொதுவிலக்கணத்தான் மாத்திரம் இரத்தினங்களின் சிறப்பை அறியாமையானும் என்க. இரத் தினம் காவியம் இரண்டும் பேரறிஞர்களாற்றான் நன்கு அறியப்படும். இரத்தினவியாபாரியே இரத்தினத்தின் சிறப்பை அறிவான், இரசிகரே காவியத்தின் சுவையை அறிவர், என்பதில்

ஒருவர்க்கும் மாறுபாடு இன்று, பௌத்தர்களாற் கூறப்படும் அநிர்த்யேச்யத்துவம்[1] என்பது வேறு நூல்களில் மதங்கள் பலவற்றையும் ஆயும்போது ஆயப்படும்; பிறநூல்கொள்கை களைச் சிறிது கேட்பினும் ரசிகத்தன்மைக்குக் குறைவு நேரும் என நினைத்து அவ்வாராய்ச்சி இங்குக் கொள்ளப்பட்டிலது. அவர்க்குப் பிரத்தியக்ஷத்தின் இலக்கணம் எவ்வாறோ அவ் வாறே தொனிகாரர்களுக்கு தொனியின் இலக்கணமாகும். ஆகலின் தொனிக்கு வேறு இல்க்கணம் பொருந்தாமையானும், சொல் பொருள் இவற்றிற்கு அது விடயமாயிருத்தலானும், கூறவியலாதென்பது பொருந்தாக்கூற்றாகலானும், கூறப்பட்ட இலக்கணமே தொனியிலக்கண மெனக் கொள்க.

மூன்றாங்கதிர் முற்றும்.

1. ஒரு பொருளின் தன்மை உண்மையாக சவிகற்பகஞானத்திற் றோன்றாது என்பது அவரது கொள்கை.

*மாறுபட்ட கொள்கைகளை நீக்குதற்குத் தொனியை இவ்வாறு விரிவாக விளக்கி அதன் பின்னர் அதற்கு மற்றொரு பயனுங் கூறப்படும். அஃதாவது :—*

தொனியோடு சிறப்பில் வியங்கிய வழியை
அடையுங் கவிஞரின் பிரதிபை யளவில. (கா. 105½)

ஆகலின் முன்னோர் கூறிய கருத்தும்
இவையோட்டி வருணிப்பிற் புதிதே யாகும்.
(கா. 106½)

*கருதாவாச்சியத்தொனியின் இருவகையுங்கொண்டு முன்னோர் கருத்தைப் புதிதாக்கியதற்கு உதாரணங்கள் :—*

*முன்னோர்,*

*"காமர்சிரிப்பும் கண்ணசைவும் குழறுசொல்லும் நிதம்பத்தின் பெருமையான் மெதுவான நடையும் கொண்ட காமினிகள் யார்க்குத்தான் இனியரல்லார் ?"*

*எனக் கூறிய கருத்தையே பின்னோர்,*

*சிரிப்புச் சிறிது முத்தம்[1]; நோக்குவிபவம் அசைவுற்றுப் பார்க்க இனியது; பனுவலின் வகையோ புதிதாய் விலாஸமுற்றுச் சுவைக்கும்; நடைதானே பல்லவிதமாய் நிற்கும்; காமுறுநிலையைத் தொடும் மான்விழியாளின் எச்செயல்தான் கவராது ?[2]*

1. *முத்தம்* = मुग्धम्

2. இங்கு முத்தம், விபவம், இனியது, சுவைக்கும், பல்லவிதம் என்ற சொற்கள் தம் ஆற்றற்பொருள்களாகிய இளமையுற்றது, பொருள், சுவைக்கு இனிப்பானது, இனிப்பாயிருக்கும், தளிர்விட்டது என்பனவற்றை விட்டுக் குறைவுபடாத அழகுற்றது, பார்க்க பார்க்கச் சலிக்காதது, எல்லோராலும் போற்றத்தக்கது, பெருமகிழ்ச்சியை விளைக்கும், பலகால மவ்வாறிருக்கத் தக்கது என்ற வியங்கியப்பொருளைக் காட்டும்.

என்ற பொருள்கொண்ட செய்யுளை முற்றிலுமறைவுபட்ட வாச்சியத்தொனியுடையதாகக் கூறினமையின் புதிதாக்கினர்.

அவ்வாறே முன்னோர்,

"தன்னாற்றலாற் பெருமையுற்றோர் வேறு எவரான் வெல்லக்கூடும்? பேர்யானைகளானும் சிங்கம் வெல்லப்படாதன்றோ?"

எனக் கூறிய கருத்தைப் பின்னோர்,

"யார் முதன்மையனோ அவன் முதன்மையன்[1]; உதாரணமாகக் காட்டில் வாழும் பிராணிகளுள், தான் கொன்ற யானையூனைத் தின்னும் சிங்கமே சிங்கம்[2]; அது யாரான் சிறுமை அடையும்?"

என்ற பொருள் கொண்ட செய்யுளைப் பிறிதொருபொருளினகத்துச்செல்வாச்சியத்தொனியாகக் கூறினமையின் புதிதாக்கினர்.

முறையில்தோற்றத்தொனியான் முன்னோர்கருத்தைப் புதிதாக்கியதற்கு உதாரணம்: —

முன்னோர்,

"தலைவி, இல்லத்தில் ஒருவரும் இல்லாமையை நோக்கி மெதுவாகத் தன் பாயலை விட்டெழுந்து, போலியுறக்கம் எய்திய கணவன்முகத்தை நீண்டு நோக்கி, தன் விருப்பப்படி அவனை முத்தமிட்டு மயிர்க்கூச்சலுற்ற ஆணவனது கன்னத்தை நோக்கி வெட்கமுற, அவளை நோக்கித் தலைவன் நகைத்து வெகுநேரம் முத்தமிட்டனன்."

எனக் கூறிய கருத்தைப் பின்னோர்,

"போலியுறக்கம் எய்திய கணவனின் முகத்தில் தலைவி தன் முகத்தை வைத்து அவன் விழித்துவிடுவானோ என்ற அச்சத்

1. ஒப்பற்ற குணமுடையன் என்ற பொருளிற் சென்றது முதன்மையன் என்ற சொல்.

2. வீரச்செயலும், வியக்குந்தன்மையும் நிகரின்மையும் உடைய பொருள் என்பதின்கண் சென்றது சிங்கம் என்ற சொல்.

தால் முத்தமிடாது விருப்பமுற்று நிற்க, வெட்கத்தான் முகத்தை அவள் எடுத்துவிடுவாளோ எனக்கணவன் நினைத்துத் தானும் முத்தமிடாது விருப்பத்துடன் நிற்க, இருவரின் மனமும் புணர்ச்சியில் ஈடுபட்டு மேன்மையுற்று நிற்கும்."

என முறையில்தோற்றத்தொனி யாக்கிப் புதிதாக்கினர்.

இவ்வழிச் சுவையாதி பரப்புத லேற்பின்
காவிய வழிசிறி தாயினும் விரியும். (கா. 107½)

சுவை, பாவம் இவற்றின்போலி, இவற்றின் பிரசமம் முதலியவற்றைக் கொண்ட காவியம் அவற்றின் விபாவம் அனுபாவம் முதலியவற்றோடு தனித்தனியே கலந்துநிற்றலை முன்னர்க் கூறியமுறையாற் செய்தல் தகும். அச்சுவை முதலியவற்றைக் கொண்டு செய்யப்பெறும் காவியமார்க்கம் ஆயிரக்கணக்கான அல்லது கணக்கில்லாத பழைய கவிகளாற் பயிலப்பெற்றமையால் அளவினதாயினும், எல்லையற்றதாக முடியும். சுவை, பாவம் முதலியவை ஒவ்வொன்றும் விபாவம் அனுபாவம், வியபிசாரிபாவம் இவற்றோடு சேர்வதால் எல்லையற்றதாகும். அன்றியும் சுவைகள் பாவங்கள் என்ற அவற்றிலுள்ள ஒவ்வொரு பேதத்தைக்கொண்டும் கவி அவன் விருப்பப்படி உலகுப்பொருள்களைக் கூறின் ஒருவகையானது மற்றொரு வகையாக மாறும். இவையெல்லாம் சித்திரகாவியத்தைப்பற்றிக் கூறுகையிற் கூறப்பட்டது. இப்பொருளையே ஒருவர் பின்வருமாறு கூறுவர் :—

"ஒருவாறு இல்லாத பொருள்களை அவ்வாறு இருப்பது போல் மனத்திற் பதியச் செய்யும் ஆற்றலுடைய கவிஞரின் வாக்கு வாழ்க."

ஆக, இவ்வகையால் சுவை பாவம் முதலியவற்றை ஆச்சிரயித்தலால் காவியப்பொருளின் எல்லையின்மையைப்பற்றி நன்கு விவரித்தோம். இதை விவரிப்பதற்கே பின்வருங் காரிகை.

உலகிற் காணும் பொருளே காவியத்து
சுவையா தியுடன் கலந்து நவமாகவே
பொலியும் இளவே னில்மரம் போன்றே. (கா. 108½)

சப்தசக்திமூலத்தொனியாற் புதிதாக்கியதற்கோர் உதாரணம் :—

முன்னோர்,

"ஆதிசேடனும், இமயமலையும், நீயும் அசைவற்ற பெரியோர்கள் ; ஏனெனில் நீங்கள் உமது எல்லையைக் கடவாது எப்போதும் அசைகின்ற பூமியைத் தாங்குகின்றீர்கள்."

எனக் கூறியிருப்பதைப் பாணர் ஹர்ஷசரித்திரத்தில் "பூமியைத் தாங்குதற்குத் தற்போது நீ சேடன்" எனக் கூறிப் புதிதாக்கினர்."

முறைத்தோற்றத்து அர்த்தசக்திமூலத்தொனியாற் புதிதாக்கியதற்கு உதாரணம் :—

முன்னோர்,

"மணமகாரின் வரலாற்றைக் கூறுகையில நாணததால தலைகுனிந்த மணமகளிர் மயிர்ச்கூச்சின் மூலமாகத் தம் விருப்பத்தை வெளியாக்குவர்."

எனக் கூறியிருப்பதைக் காளிதாஸர் "தேவமுனி...எண்ணி நின்றாள்." (பக். 69). எனக் கூறிப் புதிதாக்கினர்.

முறைத்தோற்றத்து அர்த்தசக்திமூலத்தொனியில் கவிக் கூற்றான் புதிதாக்கியதற்கு உதாரணம் :—

முன்னோர்,

"இளவேனில் தோன்றியவுடனே காமுகரின் மனத் தோற்றம் தேமாவின் மொட்டுக்களுடன் திடீரென அழகுற்றது."

எனக் கூறியதைப் பின்னோர்,

"சிறுமிகளை...கொடுக்கவில்லை." (பக். 73)

எனக் கவிக்கூற்றான் புதிதாக்கினர்.

அத்தொனியில் கவிகூறுநாயகன்கூற்றாற் புதிதாக்கிய தற்கு உதாரணம் :—

முன்னோர்,

"ஒரே அடியான் பெண்யானையை விதவையாக்கும் என் மகன் பாழும் மணுட்டுப்பெண்ணால் பணைப்பெட்டியைத் தூக்கிச் செல்லுமாறு செய்யப்பட்டனன்."

எனக் கூறியதைப் பின்னோர்,

"வேழத்து மருப்பும்..." (பக். 92,

என்ற கவிகூறுநாயகன்கூற்றாற் புதிதாக்கினர்.

வியங்கியவகையால் எவ்வாறு காவியப்பொருள் புதிதாக்கப் படுமோ அவ்வாறே வியஞ்சகவகையானும் ஆக்கப்படும். நூல் பெருகுமென்று அஞ்சி ஈண்டு அது கூறப்பட்டிலது.

அடிக்கடி கூறப்பட்டிருப்பினும் இது சிறந்ததெனப் பின்னரும் கூறப்படும்.

வியங்கிய வகைகளும் வியஞ்சக வகைகளும்
பல்வகை யாக விளங்கி நிற்பினும்
சுவையோடு கூடிய அவைதன் னையே
கவிஞன் கருத்தோடு கொள்ளல் வேண்டும்.
(கா. 109½)

அவ்வாறு அவற்றுள் கவி கவனத்துடன் இருப்பின், அவனுடைய காவியம் முழுதும் புதிதாகவே தோன்றும். ஆகவினன்றே இராமாயணம் மாபாரதம் முதலிய நூல்களில் போர் முதலியன அடிக்கடி வருணிக்கப்படினும் புதிது புதிதாகவே தோன்றுகின்றன.

நூல்களில் ஒரு சுவையே அங்கியாக இருப்பின், ஆங்குப் பொருட்சிறப்பும் பேரழகும் விளங்கும். இதற்கு உதாரணம் எந்நூல் ஆகும் எனின், இராமாயணமும் மாபாரதமும் ஆம் இராமாயணத்தில் வால்மீகி "சோகம் ச்லோகமாயிற்று" எனத் தொடக்கத்திற் கூறி அந்நூலின் அங்கிச்சுவை கருணம் எனக் குறித்தனர்; சீதை இராமனைவிட்டு உலகத்தினின்று நீங்கிய வரை நூலை எழுதியதால், அச்சுவையே முடிவுவரையில்

தோன்றுமாறு செய்தனர். வியாஸரும் சாஸ்திரம் காவியம் இவற்றின் சாயையைக் கொண்ட மஹாபாரதத்தில் விருஷ்ணிகள் பாண்டவர்கள் இவர்களின் விரஸமான இறுதிவுரையில் கதையைக் கூறினமையான், பற்றறுதலே சிறந்த நோக்கமாதல் வேண்டுமெனக் காட்டி, சாஸ்திரத்தின் சிறந்த நோக்கம் வீட்டில் என்றும், காவியத்தின் அங்கிச்சுவை சாந்தம் என்றுங் குறித்தனர். இஃது இருவகையான் ஏனைய உரைகாரர்களான் விளக்கப்பட்டது. பெருமயக்கத்தில் மூழ்கிக் கலங்கும் இம் மனிதரை உய்விக்கவும் இவர்க்குப் பேரறிவை யூட்டவும் முயன்ற அவ்வேதவியாஸரே தாமே,

உலகச் செயல்கள் உருசியற மாறின்
ஐய மின்றிப் பற்றறு மன்றே.[1]

என்பது முதலியவற்றால் பன்முறையும் கூறியுள்ளார். ஆகலின் சாந்தச்சுவை அங்கியாயும் ஏனைய சுவைகள் அங்கமாயும், உறுதிப்பொருள்களுட்சிறந்த வீடு அங்கியும் ஏனைய அங்கமாயும் அந்நூலிற் சிறந்துவிளங்குவது வெளிப்படை. சுவைகள் ஒன்றுக்கொன்று எவ்வாறு அங்கியாகவும் அங்கமாகவும் இருக்குமென்பது முன்னர்க் காட்டப்பட்டது. சிறந்த உறுதிப் பொருளையும் அங்கிச்சுவையையும் மறந்திருந்தகாலத்து உடலுக்குச் சிறப்பு கூறுதல்போல ஏனைய சுவைகளை ஆங்காங்குச் சிறப்பிக்க வருணித்தல் குற்ற மாகாது.

ஈண்டு மஹாபாரதத்தில் வருணிக்கப்பட்ட செய்தியனைத்தும் அனுக்கிரமணியிற் கூறப்பட்டது; இங்கு முற்கூறப்பட்ட செய்தி கூறப்பட்டிலது; அன்றியும் அந்நூல் உறுதிப்பொருள்கள் எல்லாவற்றையும் உணர்த்திச் சுவை எல்லாவற்றோடும் விளங்குகின்றது எனச் சொல்லாற் கூறப்பட்டது; ஆகலின் முன்னர்க் கூறப்பட்டது பொருத்தமின்று எனின், கூறுவாம் :—சாந்தச்சுவையே அங்கிச்சுவையென்றும் வீடே அங்கியாகிய உறுதிப்பொருளென்றும் தம்வாயால்

1. இப்பொருள்கொண்ட செய்யுள் வியாஸமஹாபாரதத்தில் சாந்திபர்வத்தில் 174வது சர்க்கத்தில் நான்காவது.

ஆங்கு ஆசிரியர் கூறவில்லை என்பது உண்மையே: ஆயினும், அதனை வியங்கியமாகத் தோன்றுமாறு கூறியிருத்தல் நோக்கத் தக்கது. அனுக்கிரமணிக்குப் பின்னருள்ள மஹாபாரதத்தில் 'பகவனும் பழமையுடையவனுமாகிய வாஸுதேவரும் ஈண்டு வருணிக்கப்படுகின்றார்' என்ற தொடர் உளது. அத்தொடர்க்கு வியங்கியப்பொருள், "ஈண்டு பாண்டவர்சரிதை வருணிக்கப் பட்டதை நோக்கி, பரமேச்வரனிடத்திலே மனத்தை ஈடுபடுமாறு செய்ம்மின்: ஸாரமில்லாத உலகப்பொருள்களில் பற்று வையாது நின்மின்: நயம், விநயம் பராக்கிரமம் இவ்வாறாகிய குணங்களிலும் மனத்தைச் செலுத்தன்மின்: அவை யெல்லாம் நிலையற்றன எனப் பின்னருள்ள பகுதியால் உணர்விர்" என்பதே ஆகும். இப்பொருட்கு வியஞ்சகமாய் நிற்பது உம்மைப்பொருட்கிளவியே யாகும். இவ்வாறு வியங்கியப் பொருளைக்கொண்ட உம்மை பின்னருள்ள செய்யுட்களுள் உளது. இச்சிறந்த பொருளையே அவர் மனத்திற் கொண்டனர் என்பது மஹாபாரதத்தில் இறுதியில் ஹரிவமிசத்தை இயற்றியதால் அம்முனிவர் வெளிப்படையாகக் காட்டுகின்றனர். இதனால் ஸம்ஸாரத்திற்கு இயைபுபடாத பரம்பொருளிடத்துச் சிறந்த அன்பை உண்டுபண்ண, ஸம்ஸாரச்செயல்களைப் பூர்வ பக்ஷமாக நன்கு வருணித்தது சிறக்கும்; தேவதைகள், தலங்கள், தவவகைகள் இவற்றின் சிறப்பைக் கூறியதற்குக் காரணம், அவை பரம்பொருளையடைதற்குக் காரணமாகும் என்ற கருத்தே யாகும்: அன்றியும் அவ்வவற்றின் சிறப்பைக் கூறுதலும் நோக்கமாகலாம்; பாண்டவர் முதலியோர் சரிதையின் வருணனையும் அவாவறுத்தலைச் செய்கின்றமையானும், அவாவின்மை வீட்டையடையச் சிறந்த துணையாகலானும் வீடு பரம்பொருளை யடையச் செய்யுமெனப் பகவற்கீதை முதலிய நூல்களில் உணர்த்தப்பட்டமையானும் அவை யெல்லாம் பரம்பரையாகப் பரம்பொருளை அடைவதற்கே காரணமாகும். வாஸுதேவர் என்ற சொல்லாற் குறிக்கப்படுவது வஸுதேவர்க்கு மகனாய் வடமதுரையிற் பிறந்தவர் என்ற பொருள் குறிக்கப்படாது, எல்லாப்பொருட்கும் அந்தர்யாமியாகிய பரம்பொருளே குறிக்கப்படும்; இக்கருத்தானே பழமையுடையவன் (ஸநாதனன்) என்ற அடைமொழி கூறப்பட்டது, அன்றியும், அச்சொல்லானே இராமாயணம் முதலிய நூல்களிலும்

கடவுளின் வேறுவடிவமும் குறிக்கப்படுகின்றது; இக்கொள்கை சொல்லிலக்கணம் அறிந்தோரான் தீர்மானிக்கப்பட்டதென அறிக. ஆகலின் அனுக்கிரமணியிற் கூறப்பட்டதொடரான் பரம்பொருளைத் தவிர்த்த ஏனைய பொருள்களெலாம் நிலையற்றன என்ற கருத்து அறியப்படுகின்றமையின், மஹாபாரதத்தைச் சாஸ்திரமாகக் கருதின் அங்கு அங்கியாகிய உறுதிப்பொருள் வீடே என்பதும், காவியமாகக் கருதின் அங்கு அங்கியாகிய சுவை சாந்தமே என்பதும் நன்கு கூறப்பட்டன. இப்பொருள் மிகச் சிறந்ததாகலின், இது வாச்சியமாகாது வியங்கியமாய்த் தோன்றும்படி ஆசிரியர் உணர்த்தினர். சிறந்த பொருள்கள் வாச்சியமாகாது வியங்கியமாக இருப்பினே பேரழகைப் பெறும்; அவ்வாறே பேரறிஞர்கள் தங்கள் கருத்துக்களை வியங்கிய மாகக் குறித்தலின்றி வாச்சியமாகக் கூறுதல் இல்லை என்ற வழக்கு முண்டு.

ஆகலின் ஒரு சுவையை அங்கியாகக் கொண்டு அதற்கேற்றவாறு ஏனையவற்றையும் கவி வருணிப்பின், அக்காவியத்தில் பொருள்கள் புதிது புதிதாகவும் செய்யுளழகு சிறந்ததாகவும் தோன்றும். ஆகலின் சுவையொட்டியுள்ள வருணனை வேறு சிறந்த அணிகளைக் கொள்ளாவிடினும் பேரழகைப்பெற்று விளங்கும். அதற்கோர் உதாரணம்:—

'கும்பத்திற் றோன்றிய பெருயோகியாகிய முனியே சிறந்தார். எவரது ஒருள்ளங்கையிலே தெய்வத்தன்மை பொருந்திய மச்சமும் ஆமையும் காணப்பட்டனவோ.[1] "

ஈண்டு அற்புதச்சுவையை ஒட்டி ஒருகைநீரில் மச்சம், ஆமை இரண்டனையுங் காணல் செய்யுட்குப் பேரழகையூட்டுகின்றது. இவ்வாறு வேறொருவருங் கூறிற்றிலராகலின், அது அற்புதச்சுவைக்குத் தகுந்ததே யாகும்; உலகத்தில் பெரும்பாலும் வழங்கியதையே கூறின், ஆங்கு அற்புதச்சுவை தோன்றாது. வழங்காத முறையிற் கூறுகை அற்புதச்சுவையேயன்றி ஏனைய சுவைகளையுந் தோற்றுவிக்கும்.

...

1. கும்பமுனிவர் ஒரு கையான் கடலின் நீரனைத்தையுங் குடித்தனர் என்ற கருத்தை அற்புதச்சுவை தோன்றுமாறு இவ்வாறு கூறப்பட்டது. கச்சபம் = ஆமை.

இதுவரை, தொனிவகைகளைக் கொண்டு பொருள்களைப் புதிதாக்கலா மெனக் கூறப்பட்டது. அவ்வாறே சிறப்பில் வியங்கியத்தைக் கொண்டுஞ் செய்யலாம்; அதனை ஈண்டு விரிப்பின் நூல் பெருகும்; ஆகலின் அதனை அறிஞர் உய்த்துணர்க.

தோனியும் சிறப்பில் வியங்கியமு மிவற்றால்
பொருள்புதுப் பிப்ப பிரதிபை பொருந்தின். (கா. 110½)

முன்னோர் பலவகையாகப் பொருளைக் கூறியிருப்பினும் கவிக்குப் பிரதிபை இருப்பின் தொனி, சிறப்பில்வியங்கியம் இவ்விரண்டனையும் மனத்திற்கொண்டு அப்பொருளையே புதுப்பிக்கலாம்; அஃது இன்றேல் அவ்வாறு செய்தல் இயலாது. பொருளைக் கருதாது சொல்லழகானே செய்யுள் அழகு பெறு மென ரஸிகர் கொள்ளாமையான், பிரதிபையால் தொனி சிறப்பில்வியங்கியம் இவற்றிற்குத் தகுந்த சொல்லமைப்பும் பொருளமைப்புமில்லாவிடத்து, செய்யுள் எவ்வாறு அழகு பெறும்? அவ்வாறாயின் பொருளை நோக்காது சொல்லழகுற்றது காவியமென உலகில் வழங்கப்படுகின்றதே யெனின், அது பிறன்கூற்றை யவ்வாறே கூறுபவனது செய்யுளும் காவியமென வழங்கப்படுதல் போன்றதே யாகும்.

வியங்கியப்பொருளை நோக்கி மாத்திரம் பொருள்கள் புதிதாக்கப்படு மென்பது இல்லை: வாச்சியப்பொருளை நோக்கியும் அவற்றைப் புதிதாக்கலாம் என்பதைக் கூறுவர்;—

நிலையிடங் கால முதலிய சிறப்பால்
வாச்சியப் பொருளும் வகைபாத லியல்பே. (கா. 111½)

அறிவுடைப்பொருள் அறிவில்பொருள் இவற்றின் நிலை வேறுபாடு நோக்கியும், இடவேறுபாடு நோக்கியும், கால வேறுபாடு நோக்கியும் தன்மைவேறுபாடு நோக்கியும் வியங்கியப்பொருளைக் கொள்ளாத வாச்சியப்பொருளும் இயற்கையாகவே எல்லையற்றதாகலாம். அவ்வேறுபாடுகளைக்கொண்ட அப்பொருள்களைப் பெரியோர் அவ்வவற்றின் இயற்கையைக் குறித்து தன்மைநவிற்சியணியாற் கூறினும் காவியப்பொருள்

எல்லையற்றதாகும். நிலைவேறுபாட்டால் ஒரு பொருளே பல வகையாக வருணிக்கப்படல் கூடும் என்பதைக் காளிதாஸன் குமாரஸம்பவத்தில் பார்வதியை அவள் வயதடைந்த காலத்துள்ள நிலையை அடிமுதல் தலைவரை முதற்சருக்கத்தில் வருணித்தும், வனதேவதைகளாற் பின்தொடரப்பட்டு வஸந்த புஷ்பாபரணங்களை அணிந்து சிவபிரானெதிரிற் போகும் நிலையை மூன்றுஞ்சருக்கத்தில் வருணித்தும், மணமேடையில் அவளை வைத்து மகளிர் மகிழ்ந்து அணிவிக்கும் நிலையை ஏழாஞ்சருக்கத்தில் வருணித்துங் காட்டுகின்றனர். ஆங்கு முன்னர்க் கூறப்பட்ட பொருளே ஈண்டுங் கூறப்படுகின்றது என்ற எண்ணமே படிப்போர்க்கு வரவில்லை; அன்றியும் அவை புதியன புதியன ஆகவே காணப்படுகின்றன. இக் கருத்தே விஷமபாணலீலையிற் பின் வருமாறு கூறப்பட்டது :—

"காதலிமாரின் விலாஸங்கட்கும் நற்கவிகளின் வாக்குக் கட்கும் ஒருபோதும் எல்லையில்லை; புனருக்தமாகவும் ஒரு போதுந் தோன்றுவதில்லை."

இமவான் கங்கை முதலிய அறிவில்பொருளனைத்தும் அவற்றின் அபிமானதேவதையைக் கருதி அறிவுடைப்பொருளாகப் பொருத்துவதாகிய இதுவும் நிலைவேறுபாட்டின் வேறு வகையாகும். அவ்வகையும் இவற்றிற்குத் தகுந்த பொருளோடு கூட்டி வருணித்தலால் வேறுபொருளாகின்றன. இஃது நன்கு குமாரஸம்பவத்திற் காணலாம்; முன்னர் பர்வதரூபமாக வருணிக்கப்பட்ட இமவானைப் பின்னர் ஏழு இருடிகளும் பெண்ணைக் கேட்க அவரிடம் சென்றவிடத்துச் சேதநமாக வருணித்தல் பெரும் மகிழ்ச்சியை ஊட்டுகின்றது. இம்முறை நற்கவிகளாற் கொள்ளப்பட்டது. அவ்வாறு கொள்ளும் முறை, கவிவ்யுத்பத்தியின்பொருட்டு விஷமபாணலீலையில் நன்கு விளங்க உணர்த்தப்பட்டது.

* * *

அறிவுடைப்பொருள்களும் பாலியம் முதலிய நிலைவேறுபாட்டால் புதியனவாதல் நற்கவிகளிடம் பிரசித்தமே. அறிவுடைப்பொருள்களின் நிலைவேறுபாட்டிலும் இடையில் தோன்றும் நிலை வேறுபட்டால் பல்வகையாம். உதாரணமாகப் பெண்மணிகளின் இளமை, பூப்

பருவம் இவற்றில் அவர்களின் நிலைவேறுபாட்டால் அவர் புதியர் புதியர் ஆவர். அன்றியும் அறிவுடைப்பொருள்கள் ஒழுக்கமுடையனவும் ஒழுக்கமில்லனவும் ஆக இருத்தலானும், பொருள்கள் சேதநமாயும் அசேதநமாயும் இருத்தலானும் தொடங்கும்நிலை முதலிய நிலைவேறுபாட்டாலும் தனித்தனியே புணர்த்துரைக்கையில் அப்பொருள்கள் பலவகை யாகும். பல்வகை எங்ஙன் என்னில்,

காண்மின் :—"நீரோடையிற் கூவுகின்ற அன்னங்களின் கண்டம் எவற்றை உண்டமையால் மிக்க இனிமையுற்று விளங்கினவோ, அத்தாமரைத்தண்டுமுடிகள் தற்போது பெண்யானைகளிடம் புதிதாய்த் தோன்றுந் தந்தங்களுடன் போட்டியிட வெளிவந்தன."

இங்ஙன் வேறிடத்தும் இவ்வாறான முறையை மேற்கொள்க. அறிவில்பொருளோ இடவேறுபாட்டால், அறிவில் பொருளாகிய காற்று, நீர், பூக்கள் இவை பல திக்குகளிலும் இடங்களிலும் சரித்தலால், பல்வகையாக மாறுதல் பிரசித்தமே. அறிவுடைப்பொருளாகிய மனிதர், விலங்கு, பறவை, நீரில் வாழ்வன இவை முதலியன நாட்டிலும், காட்டிலும், நீரிலும் வளரும்போது ஒன்றோடொன்று மிக்க வேறுபாடு நன்கு புலப்படும். அவற்றை ஒவ்வொன்றாக வருணிப்பின் அது எல்லையற்றதாகும். அப்பொருள்களுள் மனிதர் ஒருவகையினரே வெவ்வேறு திக்கிலும் வெவ்வேறு நாடுகளிலும் வாழ்கின்றமையால், அவர்க்குப் பழக்க வழக்கங்கள் பலவகைப்படுகின்றதை யார் தடுக்க முடியும்? அவருள்ளும் சிறப்பாகப் பெண்டிர்களின் பழக்கவழக்கங்கள் மிக வேறுபடும். அவையெல்லாம் நற்கவிகளால் அவரவரது பிரதிபைக்குத் தக்கவாறு வருணிக்கப்படும்.

காலவேறுபாட்டாற் பலவகையாதல் எவ்வாறெனில், பருவவேறுபாட்டால் அறிவில்பொருளாகிய திக்குகளும், வானமும், நீரும் பலவகையாகுமன்றே. அறிவுடைப்பொருள்களின் உற்சாகம் முதலியன காலவேறுபாட்டால் மாறுபடுதலும் பிரசித்தமே யாகும்.

## நான்காம் கதிர்

**உலகப்பொருளனைத்தும் தன்மையான் மாறுபட்டன என்பது யாவரு மறிந்ததே. அவையெல்லாவற்றையும் கூற லுறின், அதற்கு எல்லை காண வியலாது.**

இங்கு ஒருவர் பின் வருமாறு கூறலாம்:—பொருள்கள் பொதுத்தன்மையையொட்டி வாச்சியமாகின்றனவேயன்றிச் சிறப்புத்தன்மையையொட்டி யல்ல; தாங்கள் அனுபவிக்கும் இன்பதுன்பங்களையும் அவற்றிற்குக் காரணங்களையுங் கொண்டு அவற்றைப் பிறவிடத்து ஏற்றிக் கூறும் கவிகளால் தன்னநுபவம் பிறரநுபவம் இவற்றிற்கு ஏற்பப் பொதுத் தன்மையை யடைந்திருப்பனவாகவே கூறப்படுகின்றன. அவர் யோகிகளைப்போன்று இறந்தகாலத்தும், எதிர்காலத்தும், தற்காலத்தும் உள்ள பிறர்மனக்கருத்துக்களை அறிய ஆற்ற லிலர். அந்நுகர்ச்சியும் அந்நுகர்ச்சிப்பொருள்களும் கணக் கிடக் கூடியவையாகையால் அவ்வை முன்னருள்ள கவிகளாலே அறியப்பட்டனவே யாகும்: தற்போது புதிது என இக்காலத் தார் கூறுவது தவறான கொள்கையே யாகும்: அப்பொருளையே வேறுபட்ட சொற்றொடரான் இக்காலத்தார் கூறல் தகும் என. இதற்குப் பின்வருமாறு விடை கூறலாம்:—பொதுத் தன்மையைக்கொண்டு காவியம் இயற்றப்பட்டதெனின், நிலை வேறுபாட்டால் உள்ளதை வருணித்தல் கூறியதுகூற லாகுமா? இல்லையேல், காவியப்பொருள் எல்லையற்றது என்ற கொள்கை யில் யாது குற்றம்? பொருளின் பொதுத்தன்மையைக் கொண்டே காவியம் எழுதப்படும், அப்பொருள்கள் முன்னர் இருந்த கவிகளாகலே கூறப்பட்டன எனின், மஹாகவிகள் எனக் கூறுதலும் அவர்கூற்று சிறந்தனவாயிருக்கின்றன என்பதும் பொருந்தாக்கூற்று ஆகும்; ஏனெனில் ஆதிகவி யாகிய வான்மீகிமுனிவரான் பொதுத்தன்மையைக்கொண்டு எல்லாம் கூறப்பட்டன. வேறுபட்ட சொல்லால் சிறப்புறும் எனின், வாச்சியப்பொருளை விட்டு சொல்வேறுபாடு எவ்வாறு நிகழும்? வாச்சியப்பொருள் புதிதாகத் தோன்றிய காலத்தே வாசகச் சொல்லும் புதிதாகத் தோன்றும். ஆகலின் கூற்று வேறுபாட்டால் மஹாகவிகள் எனக் கூறுவோர், அவர்கள் விருப்பத்திற்கு மாறுபாடாகவே பொருள்வேறுபாட்டினையும் ஒத்துக்கொளல்வேண்டும். சுருங்கச்சொல்லின்,

"வான்மீகியைத் தவிர்த்து வேறு ஒருவர்க்கேனும் பிரதிபை உண்டெனின், அப்போது அஃது எல்லையற்றது எனவே கொள்ளல்வேண்டும்."

அன்றியும், கூற்றுக்களின் சிறப்புற்ற வேறுபட்ட வகையே, காவியம் புதிது எனக் கொள்ளுதற்கு ஒரு காரணம் என்ற கூற்று, எமது கொள்கைக்கே அனுகூல மாகும். ஏனெனில், மேற்கூறப்பட்ட காவியவகைகளின் பேதத்திற்கு உள்ள காரணங்களெல்லாம், வேறுவகையாற் கூறப்படின் இரட்டித்தனவே ஆகும். கூறப்பட்ட உவமை, சிலேடை முதலிய சிறப்புற்ற அணிகளும் கூறும் வகைவேறுபாட்டான் தாமாகவே எல்லையற்றனவாய் பன்னூறாயிரம் வேறுபாட்டினை அடையும். ஒரே கருத்தைப் பலமொழிகளிற் கூறுவதும் காவியங்களை எல்லையற்றனவாகச் செய்வதில் ஒருகாரணம் ஆகும். ...

நிலைவேறு பாட்டான் வாச்சிய மவையே
பல்வகைப் பட்டுத் தோன்று மிலக்கியத்
தவைசுவை பொருந்தின் நன்னர் விளங்கும்.
(கா. 112½)

இவ்வுண்மையை ஒருவரும் மறைக்க இயலாது. ஆகலின் நற்கவிகட்கு உபதேசமாகச் சுருக்கிப் பின்வருமாறு கூறப்படும்.

எல்லையற் றதாகும் பொருளி னிலையே
காலமிட மிவற்றான் வேறு பட்டுச்
சுவையோ டௌசித்திய மொட்டி நிற்பின்.
(கா. 113½)

அளவிற்குட்பட்ட ஆற்றலுடைய கவிகள் வருணிக்கும் பொருணிலைக்கு எல்லை யில்லை எனக் கூறவும் வேண்டுமோ ?

ஆயிரக் கணக்கினர் அமரகுரு போன்ற
கவிஞர் முயற்சியாற் காவியஞ் செயினும்
காவியப் பொருட் கோரிறுதி வாராது
அதற்குக் காட்டா மூலகத் தன்மையே. (கா. 114½)

பலகற்பங்களிற் பொருள்களின் சிருட்டி இருப்பினும் உலகத்தின்தன்மை புதிது புதிதாகத் தோன்றுமேயன்றி, அதனை எஞ்சாது கூறல் இயலாது. அதுபோன்று காவியப்பொருளும் பல கவிஞராற் கூறப்பட்டிருப்பினும் குறைவுபடாது புதிது புதிதாகக் காணப்படுகின்றது. இவ்வாறு இருப்பினும்,

பேரறிஞர் கூற்றிற் சம்வாதப் பகுதிகள்
பற்பல வகையாய்த் தோன்று மவற்றைப்
புலவ ரோன்றெனப் புலத்துக் கோள்ளார். (கா. 115½)

ஏன் எனில்,

சம்வாத மேன்ப தோற்றுமை யாகும்
சம்வாதம் மூவகை பிரதிபிம்பம் போன்றும்
சித்திரம் போன்று மோற்றுமை யுடலுடைத்
திரவியம் போன்றுந் தோன்று மேன்ப. (கா. 116½)

காவியப்பொருளின் சம்வாத மென்பது மற்றொரு காவியத்தில் வருணிக்கப்பட்ட பொருளொடு ஒற்றுமையே யாம். அவ்வொற்றுமை மூவகைப்படும். அவை, ஒரு பொருட்கு அதன் பிரதிபிம்பம்போலும், ஒரு பொருட்கு அதைப்போன்று எழுதப்பட்ட சித்திரம்போலும், அப்பொருளின் சில குணங்களைக்கொண்டு அதனோடு ஒற்றுமைப்பட்ட மற்றொரு பொருள் போலும் என்பனவாம்.

அவற்றுண் முதலது சரீர மில்லது
அடுத்தது சிறப்பில் சரீர முள்ளது
அடுத்தது சிறப்புடைச் சரீர முள்ளது
அதனைக் கவிஞ ருளல் வேண்டும். (கா. 117½)

அவற்றுள் முதலதாகிய பிரதிபிம்பம் போன்ற சம்வாதமுள்ள காவியப்பொருளை அறிவுடைக்கவி நீக்கல் வேண்டும்; ஏனெனில், அதற்கு உண்மையான உடலில்லை. இரண்டாவதாகக் கூறப்பட்ட சித்திரம்போன்ற சம்வாதமுள்ள காவியப் பொருள் தனியான உடலைப் பெற்றிருப்பினும், அவ்வுடல் சிறப்பிலதாகலின் அதனையும் கவி நீக்கல் வேண்டும். மூன்றாவதாகிய சம்வாதம் வேறு உயிருடையுடலிருக்கையில் அழகுற்

றிருப்பதால் அதனைக் கவி கொள்ளல் வேண்டும்; ஏனெனில், ஒரு பொருள் மற்றொரு பொருளோடு ஒற்றுமைப்பட்டிருப் பினும் இரண்டும் ஒன்றாகா. இதனையே பின்னர்க் கூறுவர் :—

ஓர்பொருள் ஆன்மா வேறுகொண்டு முன்னர்ப்
பொருளோ டொற்றுமைப் பட்டிருப் பினது
மெல்லியள மதிமுகம் போன்று விளங்கும்.
(கா. 118½)

இதனால் தொடர்ப்பொருளின் சம்வாதத்தின் எல்லை குறிக்கப்பட்டது. சொற்பொருளோ மற்றொரு நூலில் உள்ளவாறே இருப்பின் குற்றமில்லை எனப் பின்னர் உணர்த் துவர் :—

எழுத்தைப் போன்றே முன்னூ லினது
சொற்பொரு டன்னை புதுமை தோன்ற
வழங்கி னொருவன் மாசா காதே. (கா. 119½)

எழுத்துக்களையேனும் சொற்களையேனும் புதிதாக ஆக்கு மாற்றல் தேவகுருவினிடத்து மில்லையாகலின், அவற்றைக் கவி தன்னூலில் முன்னருள்ள நூல்களில் உள்ளவாறே கூறுதல் நூலின் புதுமைக்கு இடையூறு ஆகாது. அவ்வாறே யாகும் சிலேடையுற்ற சொற்பொருளும்.

ஆகலின்,

புதிதாச் சிறிதும் கவிஞன் கூற்றுக்
கற்போர் மனத்துக் காணி னாங்குப்
பொருளேலாம் பிறரின் நூலி லிருப்பினும்
பெருங்கவி குற்றம் பேசப் பெறுனே. (கா. 120½)

இவ்வாறிருத்தலின்,

பல்சுவைக் காவியம் பெருக்க பளகறு
பொருளிற்க விகளோடு வாதம் வேண்டா. (கா. 121)

வேறுகவிகளின் கூற்றுக்களைக் கூறியதால் கவிக்குச் சிறப் பொன்று மில்லை. காவியப்பொருள்கள் புதிதாகப் பலவகைப் பட்டன என நினைப்பின்,

பிறருரை பொருள்சொலு மனமில் கவிக்குப்
பெருமையார் நாமகள் வேண்டிய தருளும்.
(கா. 121½)

ஊழ்வினையான் நற்கவியைப் பாடுவதில் ஈடுபட்ட பெரியோர் பிறர் கூறிய பொருளைக் கூற மனமிலார். அவருடைய முயற்சி யின்றியே நாமகள் அவ்வாறு பாடுதற்கு வேண்டுவதை அருளும். இவ்வாறிருத்தலே பெருங்கவியின் பெருங்கவித் தன்மையாகும்.

எதனுடைய வுதவியினு லெழிலறிஞர்
அருளுநல மெல்லா மெய்தும்
மதனுடைய சுவைநல்கி நல்லவணி குணமிவற்றால்
வளரு மின்பம்
இதமுறவே தரும்புலவர் பூங்காவி லொளிசெய்வ
தெதுவோ அந்த
விதம்பலவாம் தொனிதேவ தருப்போன்று
மகிழ்வளிக்க விழையு நர்க்கே.

உத்தம கவிக ளுளந்தனி லுதித்தும்
மெத்தத் துயிலினை மேவின போன்ற
காவியத் துட்பொருட் கருத்தினை யுணர்ந்து
மேவிய சுவையுணர் வெய்திட ரசிகர்
அந்நாள் புலவ ரயின்றநல் லமுத
பானந் தந்தெனப் படிப்புல வருக்கே
ஆநந்த வர்த்தன னளித்தனன்
வானுயர்த் த்வந்யா லோகமென் னூலே.

---

நான்காம் கதிர் முற்றும்.

## தொனிவிளக்கு

இன்சுவையில் மூழ்கி யெழில்பெறுக நற்கவிஞர்
தென்சுவைநூல் பல்கித் திகழ்ந்தொளிர்க—நன்றுசுவை
நன்னர் உணர்வோர் நலம்பெறுக நானிலத்து
மன்னர் வளர்க்க வளர்ந்து.

கௌசிககுலதிலகசொக்கநாதமகிகளின் வழித்தோன்றலும் மங்களாம்பிகைஸ்வாமிநாதசாஸ்திரிகள் இவர்தம் புதல்வனுமான சுப்பிரமணியசாஸ்திரியால் இயற்றப்பெற்ற தொனிவிளக்கு முற்றும்.



# சிறப்புச்சொல்லகராதி

## எண் பக்கத்தைக் குறிக்கும்

### அ

## ஆ



## இ

26

கி



கீ கு





கே கை



கொ

சீ



சு சூ



செ



சே சை



சொ

## சோ ட



## த



## தா



## தி



## தீ



## து



## தெ தே

ந



நா



நி



நீ நை நோ



ப

பா



பி

### மா



### மி மீ



### மு



### மூ மெ மே



### மை மோ



### ய யா யு யௌ

## ர ரா



## லா லி லோ



## வ வா



## வி

(APPENDIX)

# KĀRIKAS IN DHVANYĀLŌKA

## FIRST UDDYŌTA

1. Some may deny the existence of the implied meaning which was declared to be the soul of *kāvya* by the learned; others include it under metaphorical sense; others may state that its nature cannot be defined in words; hence do I describe its nature to feast the minds of men of artistic taste combined with critical faculty.

2. The meaning which becomes the soul of *kāvya* when it is appreciated by art-critics is of two kinds: *vācya* (literal meaning) and *vyaṅgya* (implied meaning).

3. Of them the well-known *vācya* which has been dealt with (by others) in many ways in the form of simile etc. is not expatiated here.

4. Oh! the implied sense, exquisite in nature, sparkles in the works of great authors like *lāvaṇya* (crystalline lustre) in women shooting forth. awav from well exhibited limbs.

5. The same meaning is certainly the soul of *kāvya*; hence (in days gone by) the grief of the first poet (*Vālmīki*) caused by the destruction (of the male) from the pair of the *krāuñca* birds rushed forth in the form of a verse.

6. Words of great authors nicely dripping the essence of that meaning exhibit *their* rare and transparent genius.

7. It cannot be seen only through the knowledge of lexicon and grammar; but, on the other hand, it is seen only by those who are able to realise the essence of the contents of *kāvya*.

8. Hence that meaning and that word which is capable of suggesting it found in the works of great authors should, through earnest attempt, be clearly seen (by readers).

9. One eager of seeing an object (in darkness) tries to get the flame of a lamp; so also one who is passionately after it (the implied meaning) should try to know the literal meaning as a means thereto.

10. Just as the literal meaning of a sentence is understood through the knowledge of the meanings of the separate words (which constitute the sentence), so also the realisation of that object (the implied meaning) is preceded by the knowledge of the literal meaning.

11, 12. Just as the word-meaning which leads through its capacity to the sentence-meaning is not observed as a separate entity when the sentence-meaning is understood, so also that meaning (implied meaning) flashes forth in the minds of art-critics passionately after the essential meaning and unmindful of the literal meaning.

13. The particular *kāvya* is said, by scholars, to be *dhvani* where the literal meaing subordinating itself suggests the implied meaning or the verbal expression suggests it, subordinating its literal meaning.

14, 15. Where the implied meaning is after the literal meaning and thus subordinates itself, there

stand evidently the figures of speech like *samāsōkti*[1]. It is not called *dhvani* where the implied meaning is on the fringe, subordinates itself to the literal meaning or is not prominent.

16. It is beyond the province of *dhvani* where the verbal expression and the literal meaning stand only to suggest the implied meaning and are completely subordinate to it and where there is not the slightest chance of their being interpreted as a figure of speech.

17. This *dhvani* is not identical with metonymy since they are of different forms; nor is it defined by metonymy since the latter does not exist in some places where *dhvani* exists and it exists in some places where *dhvani* does not exist.

18. Only the verbal expression and the literal meaning which suggest the charming implied meaning which cannot be openly expressed through words come within the province of *dhvani*.

19. The words like *lāvaṇya*[2] ordinarily used in senses other than their literal sense do not come within the province of *dhvani*.

20. The verbal expression capable of giving a metaphorical sense, the literal meaning not being suitable, *used to suggest the implied meaning* is not considered to be a metaphorical expression.

21. How can metaphor which is based only on the directly denoting capacity of a verbal expression form the definition of *dhvani* which is based on the suggesting capacity of the same ?

1. *Samāsōkti* is the figure of speech where the adjuncts are capable of suggesting meaning other than what suits the context.

2. *Lāvaṇya*: the quality of salt ; crystalline lustre.

22. It may be *upalakṣaṇa*[1] since it is found in one class of *dhvani*. If it is said that the naturē of *dhvani* has been defined by others, we certainly gain our object.

First *uddyōta* ends.

## SECOND UDDYŌTA

23. The *vācya* of the class of *avivakṣitavācya-dhvani* is of two kinds: viz. that which passes on to another and that which is not within the cognizance (of the speaker).[2]

24. The nature of *vivakṣitābhidhēya* is two-fold: (*asaṁlakṣyakrama*) that in which the sequence (of the literal meaning and implied meaning) is not well perceived and (*saṁlakṣyakrama*) that in which the sequence is clearly perceived.[2]

25. The *rasa*[3], *bhāva*, *rasābhāsa*, *bhāvābhāsa*, *rasaśānti*, *bhāvaśānti* etc. if they decidedly stand prominent, come under *asaṁlakṣyakrama*.

1. *Upalakṣaṇa* is that which does not exist wherever the *lakṣya* is, but is found in certain clases of *lakṣya*.

2. From 23 and 24 it is inferred that *dhvani* first divided itself into two: *avivakṣitavācyadhvani* and *vivakṣitābhidhēyadhvani* (also called *vivakṣitānyaparavācyadhvani*)

3. The delectation experienced at a particular stage without being conscious of it at that moment by the reader of a drama or prose, or by the spectator of a drama when it is enacted is called *rasa*. Sanskrit *ālaṅkārikas* have stated that it is produced from *nine ways* of description; these too are incidentally called by them *rasa*; they are *śṛṅgāra, karuṇa, vīra, adbhuta, hāsyā, bhayānaka, bībhatsa, rāudra* and *śānta*. *Śṛṅgāra* springs

26. It alone is the province of *dhvani* where the verbal expression, the literal meaning and other means of embellishments are subordinate to *rasa* etc.

27. *Rasa* etc is, in my opinion, to be taken an *alaṅkāra* or figure of speech where it is subordinate and one, other than it, is prominent.

28. *Guṇas* belong to the soul which is prominent and the *alaṅkāras* are like bracelets to the body, which is subordinate.

29. The *śṛṅgāra* rasa alone has *mādhurya* which can make all rejoice. *Mādhurya* holds strong its place in *kāvyas* beaming with that *rasa*.

30. *Mādhurya* is very tender in *vipralambha-śṛṅgāra* or love in separation and *karuṇa* since the minds of the readers or spectators are greatly after them.

31. The *rasas* like *rāudra* in *kāvyas* are found with *dīpti*[1]. *Ojas* lies in the verbal expression and the literal meaning which are capable of suggesting it.

from the love between the lover and the lady-love; *karuṇa* when either of them is dead; *vīra* from the heroism of a warrior; *adbhuta* from a wonderful event; *hāsya* from that which produces laughter; *bhayānaka* from that which produces fear; *bībhatsa* from that which is contemptible; *rāudra* from pssionate incident and *śānta* from renunciation. If either the lover or the lady-love does not reciprocate the love, it is called *śṛṅgārābhāsa* or *śṛṅgāra* in imitation. Similarly there is *karuṇābhāsa* etc. *Bhāva* or feeling is of two kinds: *sthāyībhāva* and *vyabhicāribhava*; *sthāyībhāva* is the permanent feeling which leads to *rasa* and *vyabhicāribhava* is the feeling which lasts only for some time in the course of the development of incidents in the *kāvya*. As we have *rasābhāsa*, so also we have *bhāvābhāsa* The last stage of a *rasa* or *bhāva* is called *rasaśānti* or *bhāvaśānti*.

1. *Dīpti* is that which makes the minds of hearers alert.

32. It is said that *prasāda* is the quality of the verbal expression and the literal meaning in a *kāvya* which suggests any *rasa* which enters deep into the minds of art-critics.

33. The flaws of verbal expression etc. which are not all-pervasive are to be avoided when *śṛṅgāra* is the prominently suggested *rasa* and hence they are said so (*i. e.*) not all pervasive.

34. Innumerable will be the divisions if there is permutation and combination among the divisions and subdivisions of one *rasa*.

35. Briefly it is stated here, since the vision of art-critics of wide experience has a long range and will traverse anywhere.

36. Alliteration of the same type cannot be the *vyañjaka* of *śṛṅgāra* of all kinds if it is *aṅgin*.

37. Alliteration at regular intervals (*yamaka*[1]) bespeaks of the defect of the author, however proficient he may be at it, if the *dhvani* is *śṛṅgāra* in general and *vipralambhaśṛṅgāra* in particular.

38. If it (*yamaka*) chances to come of its own accord in the course of the composition of the *kāvya* without special effort on the part of the author when he is steeped in the delineation of *aṅgirasa*, it may be considered as an embellishment.

39. The figures of speech like metaphor literally deserve the designation *alaṅkāra*, if they are carefully set in the *kāvya* where *śṛṅgāra* is the prevailing *rasa*.

1. *Yamaka* is the alliteration at regular intervals.
*Anuprāsa* is the alliteration at irregular intervals.

40, 41. The rules to be observed to enable the figures of speech like *rūpaka* to be subordinate are:— setting them always to be subordinate and to be never predominating: taking recourse to them at suitable places and avoiding them where they do not suit: never craving for carrying them to a tiresome end: keeping the mind awake that they are only subordinate though they are carried to an end.

42. *Saṁlakṣyakramadhvani* which resembles the resonance of a metallic sound is of two kinds:—*śabda-śakti-mūla-dhvani* and *artha-śakti-mūla-dhvani.*

43. *Sabda-śakti-mūla-dhvani* is that where a figure of speech, not being expressed in words, is suggested through the capacity of verbal expression.

44. *Artha-śakti-mūla-dhvani* is that where the literal meaning suggests another without the latter being expressed in words.

45. If the meaning suggested either by verbal expression or the literal meaning is openly expressed, it becomes only an embellishment to *dhvani.*

46. The meaning which serves as *vyañjaka* in *artha-śakti-mūla-dhvani* is of two kinds: that which is coined by the author and that which is found in nature.

47. It is another kind of *artha-śakti-mūla-dhvani* where a figure of speech expressed in words suggests another figure of speech.

48. It has been elaborately shown (by Bhaṭṭōdbhaṭa and others) that the figures of speech like metaphor which are expressed in words may also be suggested.

49. It is not considered to be within the province of *dhvani*, if the figure of speech expressed in words is not subordinate to the suggested figure of speech.

50. The figures of speech, which cannot be easily described through verbal expression and which become subordinate to *dhvani* assume great beauty.

51. The figure of speech *suggested* through literal meaning is surely *dhvani* since the mind of the *kāvya* is towards it.

52. If a figure of speech is suggested by a figure of speech which is expressed through verbal expression, it becomes *dhvani* only if it is prominent.

53. The suggested meaning which is not easily cognizable or which is subordinate to the literal meaning is not within the province of *dhvani*.

54. Metonymy used either through hankering after alliteration or through incapacity to observe the rules of poesy does not come within the range of *dhvani*.

55. The full nature of all kinds of *dhvani* which are prominent is being in the range of comprehension.

Second *uddyōta* ends.

## THIRD UDDYŌTA

56. It will be described how word and sentence become *vyañjaka* (suggestive) in *avivakṣitavācya-dhvani* and *anuraṇana-rūpa-dhvani*.

57. *Asaṁlakṣyakramavyaṅgyadhvani* is suggested by letter, word etc., sentence, concatenation (set-up) of words and the whole piece of composition.

58, 59. The frequent use of *ś* and *ṣ* and *ḍh* and the conjunctive consonants with *r* are not favourable to *śṛṅgāra*; hence letters spoil the *rasa*. On the other hand they, if used when *bībhatsa* is suggested, are very favourable; hence letters help the flow of *rasa*.

60. Set-up of words (*saṅghaṭanā*) was divided hatt into three:—that which is free from compound words, that with not-long compounds and that with long compounds.

61. It (set-up of words) subordinating itself to to the *guṇas* like *mādhurya* suggests *rasa*; propriety of the speaker and of the topic is the restraining force.

62. The propriety based upon the nature of work also is another restraining force; for it (set-up of words) is different in different kinds of composition.

63. The propriety maintained above is the restraining force even in all those works where metre does not play its part.

64. It always shines well if it follows the propriety pertaining to *rasa*; it shines all the more if it is adjusted to suit the propriety of the kind of the piece of work on hand.

65-69. The factors leading a *prabandha* to suggest *rasa* are as follows: (1) setting the plot, whether borrowed or original, looking fine through the propriety in the description of *vibhāva, sthāyibhāva, anubhāva* and *sañcāribhāva*; (2) omitting such parts, found in the source as are unsuited to the *rasa* and adding such new ones as are necessary for its

suggestion. (3) planning the parts and the sub-parts only with reference to the suggestion of *rasa* and not with reference to the technicalities mentioned in works on outer forms of the composition of a *kāvya* (4) rise and decadence of *rasa* proper to context (5) making the prominent *rasa* visible wherever it appears to be immersed among the less prominent; (6) making use of only such figures of speech in spite of the rich capacity of the author, as will not transgress the laws of propriety.

70. There are sources like *Rāmāyaṇa* which are well known to be steeped in *rasa*; deviation from them, particularly that which will mar the suggestion of *rasa* should be avoided.

71. *Saṁlakṣyakramadhvani* which was mentioned as a sub-division of this *vivakṣitānyaparavācyadhvani* is also suggested through *prabandha*.

72. *Alakṣyakramadhvani* is suggested in some places by case-suffix, verbal termination, number, relational word, case-meaning, *kṛt* suffix, *taddhita* suffix, compound etc.

73. Effort should be taken by the wise author who wants his work to be steeped in *rasa*, to avoid the use of those which may conflict with the (*rasa*) of the work whether the work consists of stray verses or connected verses.

74-75½. The following will conflict with the prevailing *rasa*:—(1) the description of the *vibhāva* etc., which belong to conflicting *rasas*; (2) the elaborate description of one other than the topic on hand though it may be connected with it; (3) the discontinuance of the topic on hand at the inopportune moment; (4) the elaborate description of the same at the

inopportune moment; (5) the repetition of the same topic which has been dealt with in detail, over and over again; (6) the inappropriate use of *vṛtti* or the description conflicting with the wordly experience.

76½. It is not harmful to describe, after the prevailing *rasa* has taken a firm stand, the *vibhāva* etc., of a conflicting *rasa* if it can be overwhelmed by, or if subordinate to, the prevailing *rasa*.

77½. Even though it is known that many *rasas* are delineated in a work, one of them should be made to prevail over others if the author wishes to make his work attractive.

78½. The delineation of other rasas does not affect the predominance of that *rasa* which is first delineated and keeps its stand firm.

79½. Just as one is made prominent in the contents of a work, so also there is no harm in the introduction of a conflicting *rasa* which is subordinate to the prominent *rasa*.

80½. When a *rasa* is the prevailing one, there is no harm if another *rasa* is delineated not to dominate over others, irrespective of its being a conflicting *rasa* or not.

81½. If a *rasa* conflicts with another when they have the same *āśraya* or *ālambanavibhāva*, both of them should be allowed to have different *āśraya*. In that case there will be no harm if the other *rasa* is delineated to the full.

82½. If two *rasas* do not conflict with each other even if they have the same *āṣraya*, but counteract each other when one immediately follows the other, they must be so delineated by a wise man as to be intercepted by another.

83½. For, the conflict of two *rasas* recedes even if they are in the same sentence if they are intercepted by another.

84½. Art-critic should thus discern the conflict or the non-conflict in all places in general and in *śṛṅgāra* in particular, it being very tender.

85½. A good author must be very careful in delineating that *rasa* ; for carelessness in it is easily discerned.

86½. Contact of the *aṅgas* of the conflicting *rasa* with those of the prevailing *rasa* is no harm if it is done to make the passage so charming as to attract the pupils.

87½. A good author does nowhere fail in his work, if he knows this range of conflict and non-conflict of *rasa.*

88½. The important business of a great author is this: the choice of words and literal meaning should always follow the laws of propriety.

89½. The proper use of words and literal meaning agreeable to the *rasa* is said to be of different *vṛttis.*

90½. The class of *dhvani* among *kāvyas* where nature was not well understood by the scholars and which consequently was interpreted in many ways has now been clearly explained.

91½. There is another class of *kāvyas* which is called *guṇībhūtavyaṅgya* where the literal meaning is beautified by the implied meaning.

92½. The compositions containing mellifluous words full of suggestion and consequently charming have to be classified by scholars under this.

93½. The literal figures of speech beautified by suggestion are generally found to be very charming in composition.

94½. The radiance through suggestion is important in the works of great authors even though they beam with figures of speech as modesty in women.

95½. The composition, interrogative in form and suggestive of a different sense is taken among the *guṇībhūtavyaṅgya.*

96½. The composition, which for sufficient reason like beauty may be classed under this group should not be classed by art-critics under *dhvani.*

97½. Even the *guṇībhūtavyaṅgya* may, if it ultimately is towards *rasa, bhāva* etc., turn out to be *dhvani.*

98½. The *kāvya* other than these two where *vyaṅgya* is predominent or subordinate is called *citra* .

99½. *Citra* is of two kinds: one where the verbal expression alone is fine and the other where the literal meaning alone is fine.

100½. Different kinds of *kāvya* are possible: *dhvani* pure and simple in all its varieties; *dhvani* combined with *guṇībhūtvyaṅgya, alaṅkāras* etc. both in in the varieties of *saṅkara* and *saṁsṛṣṭi.*

101½. Thus who can count the divisions and sub-divisions of *dhvani*? Hence only very little has been said by me.

102½. Those who are intent on composing a good *kāvya* or in appreciating it should take the trouble of clearly understanding the nature of *dhvani* defined above.

103½. *Rītis* were explained by those *ālaṅkārikas* who were not able to explain the real nature of a *kāvya* as was explained above, since they did not have a clear comprehension of the same.

104½. After the nature of *kāvya* is clearly understood, it is seen that certain *vṛttis* are based on words and others, on literal meaning.

Third *Uddyōta* ends.

## FOURTH UDDYŌTA.

105½. There are endless ways for poets to exhibit their *pratibhā*, if they proceed on the path of *dhvani* and *guṇībhūtavyaṅgya* shown above.

106½, *Kāvya* though expressing the sense already expressed, appears new, if it is after one of the ways mentioned above.

107½. The long range of *rasa, bhāva* etc. should be illustrated in the way shown above. Then the range of *kāvya*, though it appears to be limited becomes illimitable.

108½. All subjects already seen appear fresh in a *kāvya* steeped in *rasa* as trees in spring.

109½. Though diverse are the ways of *vyaṅgyatva* the poet should always look after those which shed *rasa*.

110½. If there is *pratibhā*, the composition of a *kāvya* can never stop if the poet is after *dhvani* and *guṇībhūtvyaṅgya*. He

111½. Even the literal meaning which is devoid of suggestion is expressed in innumerable ways when it is expressed with reference to particular situation, place or time.

112½. The method of expressing the literal mean- which differs in reference to different states is manifold; it evidently shines when it is capable of suggesting *rasa*.

113½, 114½. If ordinary events in the world which differ with particular reference to situation, time etc. are so expressed following the laws of propriety as to suggest *rasa*, *bhāva* etc. at the end, it will never be exhausted like the nature of things of the world, even though thousands of *Bṛhaspatis* are earnestly at it.

115½. There are many parallels among the saying of geniuses. They cannot be taken by the scholars to be identical.

116½. Parallelism is similarity with another; it is of three kinds; the relation between an object and its image, the relation between an object and its picture and the relation between two similar *living* things.

117½. Of them the image is unreal and the picture is lifeless. The living object which is similar has life. Hence an author should make use of the third variety.

118½. The object of description even though it is described in the same way as was done before and even though it follows the fine mo[illegible] on which it is based, sheds greater lustre like the [illegible]ace of an young lady which is similar in beauty to [illegible] moon.

.9½. If an old plot is made use of in composing
ork, it is certainly free from adverse criticism
use of the same letters and words as were used
decessors.

20½. Mind rises up when it sees some beauty
er in the objects of the world. A good author
not become a target to censure if he gives
ssion to his ideas at that juncture even though it
e after the model of earlier authors.

21½. Let the works beaming with nectar-like
hrough the varied descriptions grow from number
mber. Let there be no fruitless quarrel among
rs about the subject of authorship. Goddess
vatī enables an author who is not after borrow-
om previous authors, compose his work success-
in the way he likes.

Fourth *uddyōta* ends.

P. S. SUBRAHMANYA SASTRI